

ஹில்மன், ஹம்பர், ஸன்பீம் டால்பட் கார்கள் மற்றும் காமர் காரியர், கமர்ஷியல் வண்டிகளின் சொந்தக்காரர்களுடைய ஆதரவை என்றும் நாடி சேவை செய்யவும் மேலும் ரூட்ஸ் தயாரிப்புகளுக்கு மதராஸ், கோயமுத்தூர் நீலகிரி மற்றும் பக்கத்திலுள்ள ஜில்லாக்களுக்கும் மைசூர், கூர்க், பிரதேசங்களுக்கும் டிஸ்டிரிப்யூட்டர்களாகவும் நாங்கள் நியமிக்கப்பட்டுள்ளதை மிக்க மகிழ்ச்சியுடன் அறிவித்துக் கொள்கிறோம்.

சகலவிதமான புத்தம் புதிய ஸ்பேர் சாமான்களுடன் முற்றிலும் நூதன முறையில் அமைக்கப்பட்டுள்ள எங்களது சர்வீஸ் ஸ்டேஷனுக்குத் தங்களை வரவேற்கிறோம்.

1953ம் வருஷத்திய ஹில்மன், காமர் மற்றும் காரியர் வண்டிகளின் மாடல்கள் பார்வைக்கும் விளக்கிக் காட்டுதலுக்கும் தயாராக உள்ளன.

கீழ்க்கண்ட ஜில்லாக்களிலும் மற்றும் சென்னையிலுள்ள கம்பெனிகளிலும் மிகவும் திருப்திகரமாகவும் செவ்வையாகவும் உங்களுக்குச் சேவை அளிப்பார்கள்.

**மதராஸ் ஸிடி :**

ஆனந்த் ஆட்டோமொபைல்ஸ், மவுண்ட் ரோடு
செஞ்சுரி ஆட்டோமொபைல்ஸ், ஜெனரல் பாட்டர்ஸ் ரோடு

**கோயமுத்தூர் :**

சௌத் இந்தியா ஆட்டோமொடிவ் கார்பரேஷன், திருச்சி ரோடு
பிரான்ஸிஸ் மோட்டார் ஒர்க்ஸ், திருச்சி ரோடு

**நீலகிரி :**

செர்வன்ஸ் மோட்டார்ஸ், கூனூர்

**பெங்களூர், மைசூர் & கூர்க் :**

ஏர்ப்போர் ட்ரான்ஸ்போர்ட் (இந்தியா) லிமிடெட்
செயின்ட் மார்க்ஸ் ரோடு

**கோழிக்கோடு :**

தேன் பிரதர்ஸ் மோட்டார் ஒர்க்ஸ்
கண்டம்ஸ் ரோடு

# ROOTES
*PRODUCTS*


ஹில்மன் மின்க்ஸ்


ஸன்பீம் டால்பட்


ஹம்பர் ஹாக்


காமர் 1½ டன் ஜெனரல் பர்பஸ் கண்ட்ரோல் மாடல்


காமர் 1½ டன் சூபர்பாய்ஸ் வான்


காமர் 5 டன் டம்ப் ட்ரக்


காமர் 2 டன் லோடு காரியர்


காமர் எஸ்டேட் கார்


ஹம்பர் சூபர் ஸ்னைப்


காமர் பாஸஞ்சர் வெஹிகிள்


காமர் எக்ஸ்பிரஸ் டெலிவரி வான்


காமர் மீடியம் டியூடி பிக்கப் வான்


காமர் 3 டன் லோடு காரியர்



# சௌத் இந்தியா ஆட்டோமோடிவ் கார்பரேஷன்.

(புரொப்ரைடர்கள்: *மதுரை சௌத் இந்தியா கார்பரேஷன் லிட்.*

24, ஒயிட்ஸ் ரோடு, மதராஸ்-14.
போன்: 85474. தந்தி: "AUTODEALER"







ஸ்ரீ கஜானன
ப்ரொடக்ஷன்ஸ்
மாமியார்
★ எஸ். வரலக்ஷ்மி ★ என். மனோஹர் ★ பி. எஸ். சிவபாக்கியம்
★ பி. ஆர். பந்துலு ★ சூர்யகாந்தம் ★ ரேலங்கி ★ கிரிஜா
★ பாலசந்தர் ★ அங்கமுத்து ★ சகாதேவன்
ரேவதி
டைரக்ஷன் : K. வேம்பு
கதை : சதாசிவப்ரம்மம்
வசனம் : நாகை மணி
சங்கீதம் : பாண்டுரங்கன்
விநியோகஸ்தர்கள் :
எல். வி. பிக்சர் சர்க்யூட்
மதராஸ் - 17

# SRVS

## உங்கள் சேவை
## எங்கள் லக்ஷியம்

சாமான்கள் போக்குவரத்து, பாதுகாப்பு பற்றிய பிரச்னையா? அதை எங்களிடம் ஒப்படையுங்கள்.

தகுந்த ஏற்பாடுகளுடன் கூடிய லாரி சர்வீஸ்—

வியாபாரிகளுக்கு சரக்குகள் சேமித்து வைக்க, வெளியூர் போவோர் பொருள்களுக்கு பாதுகாப்பளிக்க 'வேர் ஹவுஸ்' திட்டம் எல்லாம் உள்ளன.

விவரங்களுக்கு:

## ஸ்ரீ ராம விலாஸ் சர்வீஸ் (லிமிடெட்)

"தின் ரோஸ் எஸ்டேட்"

1/17, மவுண்ட் ரோடு, மதராஸ்.

போன்: 84000, 84008, 84009 தந்தி: "ROADHAUL"




என்னடி
ஒரேடியா
மணக்கறே!
என்னை
ஏன் டீ, டீ என்று
கூப்பிடுகிறேள், நான்
காப்பியாக்கும்!
அதுவும்
நரஸுஸ்
மான்யுபாக்சரிங் கோ, லிமிடெட்
சேலம்
நரஸுஸ்
காப்பி

மணியம்

கல்கி
தீபாவளி
மலர்
1952

# பொருளடக்கம்

# புண்ணியமூர்த்தி

பல்லவி

புண்ணிய மூர்த்தி யம்மா—நம் காந்தி மகான்
புண்ணிய மூர்த்தி யம்மா

அநுபல்லவி

எண்ணி லடங்கா மக்கள்
இதயங்கள் அனைத்தையும்
தண்ணருட் செங்கோ லோச்சித்
தனியரசாள வந்த (புண்ணிய)

சரணம்

ஏதும் கதியிலாத
எளியரைக் காப்பதற்கு
ஜாதி சமயக் கொடும்
சண்டை ஒழிப்பதற்குந்
நீதிலா அறப் போரில்
ஜயக்கொடி நாட்டுதற்கும்
போதி மாதவனைப்
புவியில் அவதரித்த (புண்ணிய)

கவிமணி
தேசிகவிநாயகம் பிள்ளை



*Use* THE BEST

# WINNER



INDIA'S OWN PEN

Rs 5/8

MODEL No. 5129

MARVELLOUS INDUSTRY OF BEST EBONITE IN BLACK AND MOTTLED COLOURS

GUARANTEED LEAK PROOF

MANUFACTURERS & DEALERS:

**NAVINCHANDRA CHANDULAL & CO.,**
6/4, KASI CHETTY STREET, MADRAS-1

# The Mysore Premier Metal Factory

(Estd. by HIMCHAND K. SHAH)

*Manufacturers of:* ALUMINIUM, BRASS AND STAINLESS STEELWARES

124, MINT STREET, MADRAS




Large varieties of Stainless Steelwares are available. SUN BRAND Stainless Steelwares are famous Both for workmanship and quality. They are seamless and without crevices.

**Look for Sun Brand before you buy any vessel.**
**SUN BRAND stands for purity and quality**

KESHAVLAL K. SHAH (MANAGING PARTNER)

*Office:* 124, MINT STREET, MADRAS — *Works:* TONDIARPET, MADRAS

Phone: 2535 — Grams: "SUNBRAND" — Phone: 3839

# உங்களது நாகரீகமான கட்டிடங்களுக்கு

பீஹைவ் வாசல் கேட்டுகள், கவர்ச்சிகரமான ஜன்னல் அமைப்புகள், மற்றும் இதர ஸ்டீல் வார்ப்பு அமைப்புகளையும் பொருத்தி அழகுறச் செய்யுங்கள்

சிறந்த வேலைப்பாடே எமது லட்சியம்!



விவரங்களுக்கு:

## பீஹைவ் பவுண்டரி இன்ஜினீரிங் ஒர்க்ஸ்

(BEEHIVE FOUNDRY)

புரொப்ரைட்டர்கள்:

**இந்தியன் காமர்ஸ் & இண்டஸ்ட்ரீஸ் கம்பெனி லிமிடெட்**

"பீஹைவ் பில்டிங்ஸ்" : 95, பிராட்வே : மதராஸ்

போன்: 2020] [தந்தி: "LUCKY"

---

# பெர்குஸன் குடும்பம் —

மொத்தவியாபாரிகள், விற்பனையாளர்கள் வினியோகஸ்தர்கள் உங்களுக்கு



சிறப்புற்ற தீபாவளியும் சீர்மிகு புதுவருஷமும் உண்டாக வாழ்த்துகிறோம்.

**கமாணி எஞ்சினீயரிங் கார்பொரேஷன் லிட். பம்பாய்.**

விற்பனையாளர்கள்: கமானி என்ஜினியரிங் கார்ப்பொரேஷன் லிமிடெட், நெ. 2, ஜோன்ஸ் தெரு, பிராட்வே, மதராஸ். ஸ்டாக்கிஸ்டுகள்: காவேரி பார்ம் கார்ப்பொரேஷன், நாகப்பட்டணம் & குடவாசல். ஸன். பாபன்னா செட்டி, ஜாம்பேட். சுந்தரம் சன்ஸ், 42, திருஞானசம் குளத்தெரு, மதுரை. பார்ம் மிஷினரி & ஸப்ளைஸ், பெலஸ்ட் ரோடு, பக்கிங்ஹாம்பேட் போஸ்ட், விஜயவாடா. ஸ்டேன்ஸ் மோட்டார்ஸ் (தென் இந்தியா) லிமிடெட், கோயமுத்தூர், கோழிக்கோடு, உதகமண்டலம், திருவனந்தபுரம். ஜேம்ஸ் பார்ம் மெகானிஸேஷன், 30, மகாத்மா காந்தி ரோடு, பெங்களூர் & மைசூர். அருண் ஆட்டோமோபைல்ஸ், 103, அலெக்ஸான்டிரா ரோடு, செகந்திராபாத்.



## இளமையின் பொலிவு




இளமையின் அழகைப் பாதுகாத்துக்கொள்ள விரும்புவதே ஒவ்வொருவரின் அலாதியான பிரியமாகும்.

# "மைசூர் சந்தன சோப்"

உங்களுக்கு இப்படி விரும்பும் மிக வசீகரமான தோற்றத்தை அளிக்கும் ஓர் நிச்சயமான சிறந்த சாதனம்.

இந்த சோப்பின் நீடித்துப் பரிமளிக்கும் இன்பம், விசேஷ முறைகளைக் கையாண்டு சிறந்த வாசனைத் திரவியங்களினால் தயாரிப்பதற்கு ஓர் அத்தாட்சி.

உபயோகித்துத் திருப்தி அடையுங்கள்
எல்லா பிரபல கடைகளிலும் கிடைக்கும்

**கவர்ன்மெண்ட் சோப் பாக்டரி, பெங்களூர்**

# எனக்கிணை சொல்லவோ!

ராஜம்

வான முகில்கள் திரண்டு கறுத்தது
மா மயிலும் பெருந் தோகை விரித்தது
கானத்தினைப் புனங் காவல் வறுத்தது
கந்தர் வருகின்ற வேளையோ - இடக்
கண் துடிக்குது நல் வேளையோ

வள்ளி யெனும் குரல் காதி லொலிக்குது
மார்பின் கடம்ப மலரும் மணக்குது
அள்ளிச் சிறைகொள்ளப் பன்னிரு தோளுடன்
ஆறுமுகன் வரக் காணுதே—நெஞ்சே
(என்)ஆசைக் கனவு மெய்யானதே

செங்கதிர் நீங்கி நிலவும் எழுந்தது
தென்றல் மகரந்தம் கொண்டு பொழிந்தது—என்
பங்கில்வந் தென்கரம் பற்றிமுன் னேனென்
பாரில் எனக்கிணை சொல்லவோ—அவன்
பால சுப்ரமண்ய னல்லவோ



# சீதாதேவியின் அவதாரம்

சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார்



ரு சமயம் சீதா தேவி, நாதன் மகா விஷ்ணுவைக் கேட்டாள்:

"நாதா! துக்கம் துயரம் கஷ்டம் என்று இடைவிடாமல் மண்ணுலகத்திலிருந்து புலம்பல் கேட்கிறதே, ஏன் இவ்வாறு துயரப்படுகிறார்கள்? எல்லாம் உம்முடைய விளையாட்டு, மாயை, என்பதை இவர்கள் அறியவில்லையா?" என்றாள்.

[இது ரொம்ப நாட்களுக்கு முன் நடந்த சம்பாஷணை. அப்போது ராமாயணம் கூட இன்னும் நடை பெறவில்லை. அதற்கு முன்பு நடந்த பேச்சு]

உலகநாதன் முகத்தில் முறுவல் பூத்தது. மெள்ளப் பதில் சொன்னார்:

"கண்ணே! நீ கேட்கிறது எனக்குக் கொஞ்சம் வியப்பாக இருக்கிறது. நான் எண்ணினேன், இந்த விஷயங்கள் எல்லாம் உனக்குத் தெரியுமென்று!"

"இல்லை, ஆண்டவனே! இது எனக்கு விளங்கவில்லை. அறிவு பெற்ற மக்கள் ஏன் துக்கப்படுகிறார்கள்? மாயையின் விளையாட்டு என்று அறிந்தவுடன் துக்கம் தீர்ந்து போகுமல்லவா? எத்தனையோ ஞானிகள் விஷயத்தை நன்றாக எடுத்து மண்ணுலகத்தில் மக்களுக்கு விளக்கியிருக்கிறார்களே? உபநிஷத்து மந்திரங்களும் அழகான ஓசையோடு ஓதிவருகிறார்களே? தினமும் நம் காதில் தேன்போல் ஒலிக்கிறதே? அப்படியிருக்க ஏன் இன்னும் இந்தத் துக்கமும் புலம்பலும்?"

இதைக் கேட்டு ஒருகணம் மகாவிஷ்ணு பேசாமல் மௌனமாக இருந்து பிறகு சொன்னார்:

"ஒரு வேலை செய்வோம், கண்ணே! தேவர்களும் எனக்கு ஒரு ஜோலி வைத்திருக்-

கிறார்கள். மண்ணுலகத்தில் நான் சிலகாலம் அவர்களுக்காகப் போய் இருக்க வேண்டியதாக இருக்கிறது. நீயும் கூட வந்தால் நீ கேட்கும் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்ளலாம். வாய் மொழி விளக்கம் என்னத்துக்கு? நீயே எல்லாம் கண்டு கொள்வாய். என்னுடன் பூவுலகத்திற்கு வரச் சம்மதமா?"

இவ்வாறு உலகநாதன் கேட்டதும் மகா லக்ஷ்மிக்கு அடங்காத மகிழ்ச்சி. "இதையும் கேட்க வேண்டுமா? கூடச் செல்வதற்கு அநுமதி தந்தால் போதுமே; நான் எப்போதும் தயார்!" என்றாள்.




அது வரையும் மகாவிஷ்ணு அவ்வப்போது மண்ணுலகம் சென்ற போதெல்லாம் ஸ்ரீதேவியைக் கூட அழைத்துப் போனது கிடையாது. "நான் போய் உடனே திரும்பி விடுவேன்; இங்கேயும் இருந்து கொண்டே இருப்பேன்" என்று சொல்லி விட்டு, அப்படியே பூர்ணமாகவே கீழே அவதரிப்பார். பூரணமாகவே மகாலக்ஷ்மியுடனுமிருப்பார். தம் யோக மாயையின் பலத்தால் பகவான் இப்படிச் செய்து வந்தார்.

இப்போது, "வா, பூவுலகத்திற்கு. இருவரும் போவோம்" என்றதும் ஸ்ரீதேவிக்கு மிக உற்சாகம்.

"சரி, போவோம்!" என்றாள்.

* * *

தேவலோகத்தில் ஒன்று எண்ணினால் போதும், உடனே அது நிகழ்ச்சியாகக் காய்த்துப் பழுத்து விடும்.

ஜனக மகாராஜன் ஏர் பிடித்து நிலத்தை உழுது யாக பூமி தயார் செய்து கொண்டிருந்தான். (கலப்பை பிடித்து உழுவதும் அந்தக் காலத்து ராஜாக்கள் செய்வார்கள்.) அப்போது உழுத மண்ணில் ஒரு புத்தம் புதிய பிரசவமான குழந்தையைக் கண்டான். ஸ்ரீதேவியே குழந்தையாகப் பிறந்தால் குழந்தையின் அழகைச் சொல்ல வேண்டுமா? ஜனகன் அடங்காத மகிழ்ச்சியடைந்து பரவசமானான். குழந்தையை அப்படியே வாரி எடுத்து அரண்மனைக்குக் கொண்டு போய், "இதோ! பூதேவி நமக்குத் தந்த குழந்தை" என்று மனைவியிடம் தந்தான். குழந்தை 'நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக' வளர்ந்தது. அவள்தான் சீதை.

அதே சமயம், பாவம், தசரதன் அயோத்தியில் புத்திர சம்பத்து இல்லாமல் வருந்தி, அதற்காக ஒரு பெரிய வேள்வி செய்வித்தான். யாகத்தீயிலிருந்து ஒரு தேவதை கிளம்பி வந்து, பாயசம் நிறைந்த ஒரு பொன் பாண்டத்துடன் அரசன் எதிரில் நின்றது.

"இதை மனைவிகளுக்குத் தந்து அவர்களை அருந்தச் செய். புத்திரப் பேறு பெறுவாய்" என்றது.

தசரதன் தன் ஆசை நிறைவேறிற்று என்று மகிழ்ந்து வணக்கத்துடன் பாயசத்தைப் பெற்றுக் கொண்டு பாத்திரத்தைக் கீழே வைக்காமலும் வேறு பாத்திரங்களில் பாயசத்தைக் கொட்டி அளக்காமலும் தன் மனைவிகளுக்குப் பெரியவள் சிறியவள் என்கிற 'மரியாதை'யைக் கவனித்துப் பங்கிட்டுக் கொடுத்தான். மகா புனிதமான யாகப்பிரசாதமல்லவா? அதை வேறு பாத்திரங்களில் ஊற்றுவது சரியல்லவென்று இவ்வாறு செய்தான்.

முதலில் கௌசல்யையிடம் சென்று, "இதில் பாதி நீ அருந்து!" என்று தந்தான்.

அவளும் அவ்வாறே செய்து மிச்சப் பாயசத்துடன் பாத்திரத்தைத் தசரதனிடம் கொடுத்தாள். எல்லா மனைவிகளுக்கும் புத்திரோற்பவமாக வேண்டும் என்று அரசனுக்கு ஆசை.

ஆகவே, சுமித்திரையிடம் சென்று, "இதில் பாதி நீ அருந்து" என்றான் தசரதன்.

சுமித்திரை மிக்க அறிவாளி; அடக்கம், பக்தி எல்லாம் படைத்த சாந்த ஆத்துமா. "கௌசல்யைக்குத் தந்தாயிற்று?" என்று கேட்டுத் தெரிந்து கொண்டு, இருந்த பாயசத்தில் பாதி குடித்து விட்டு மிகுதிப் பாயசத்துடன் பாத்திரத்தைக் கணவனிடம் தந்தாள், கைகேயிக்கும் தரவேண்டுமென்று.

தசரதன் அதைப் பெற்றுக் கொண்டு கைகேயியிடம் சென்று, "நீங்கள் மூவரும் குழந்தைகள் பெற்று, வாழ்க்கையின் சுகத்தை நான் அடைய வேண்டும். வேள்வியில் கிடைத்த பிரசாதம், இதில் பாதி அருந்து" என்றான். மூன்றாம் மனைவி மற்ற இருவரைவிடக் கொஞ்சம் குறைவு அல்லவா? அதனால் இவ்விதம் பங்கு செய்தான்.

அவளும் இருந்த பாயசத்தில் பாதி மகிழ்ச்சியுடன் குடித்துவிட்டு, பாத்திரத்தைத் திருப்பிக் கொடுத்தாள். அரசன் மறுபடி சுமித்திரையிடம் சென்று அந்த அரைக்கால் பங்கு மிச்சத்தையும் சுமித்திரையையே அருந்தச் சொல்லி விட்டு, காரியம் கைகூடிற்று என்று ஆனந்தமாகப் புத்திரப் பேற்றை எதிர்பார்த்த வண்ணமாக இருந்தான்.

காலத்தில் எல்லா மனைவிகளும் சுகப்பிரசவமாகி அழகிய குழந்தைகளைப் பெற்றார்கள். கௌசல்யைக்குச் சக்கரவர்த்தித் திருமகன் ராமச்சந்திரன் பிறந்தான். கைகேயி பரதனைப் பெற்றாள். சுமித்திரா தேவி இரு தடவையாகப் பாயசம் குடித்தபடியால் இரண்டு அழகான குழந்தைகளைப் பெற்றாள். இரட்டைக் குழந்தைகளில் லக்ஷ்மணன் ஸ்ரீராமனிடம் மிகுந்த சேர்க்கையுடன் வளர்ந்தான். முதலில் குடித்த பாயசத்தின் பயன் லக்ஷ்மணன். கைகேயி அருந்திய மிச்சப் பாயசத்தை அருந்தியதன் பயனாகப் பிறந்தவன் சத்துருக்னன். இவன் பரதனுக்குப் பிராண சிநேகிதனாக வளர்ந்து வந்தான்.

* * *

பிறகு நடந்த கதையெல்லாம் உலகத்துக்கு வால்மீகி ரிஷியும், கம்ப நாட்டாழ்வாரும், துளசிதாஸரும், டி. கே. சி.யும் அழகாகச் சொல்லியிருக்கிறார்கள். சீதை ஸ்ரீ ராமனுக்கு வாழ்க்கைத் துணையாகச் சேர்ந்தாள். துக்கம் என்றால் என்ன, துயரம் என்றால் என்ன, கஷ்டம் என்றால் என்ன என்பதையெல்லாம் அனுபவித்துப் படிக்க அல்லவா பூவுலகில் சீதையாக ஸ்ரீதேவி பிறந்தாள்? பாவம், அதையெல்லாம் நன்றாகவே படித்தாள். வாத்தியார் சொல்லிப் படிக்கவில்லை. நேரில் அனுபவித்து, துக்கப்பட்டு, கஷ்டப்பட்டுப் படித்தாள். துக்கத்தை எழுத்தைக் கூட்டிப் படித்தால் அதன் பொருள் தெரியுமா? அனுபவித்து அனுபவித்து, அலைந்தும் பயந்தும் அவமானப் பட்டும் குடல் நடுங்கியும் இருதயம் உடைந்தும் மண்ணுலகத்து மக்களின் துக்கம் இத்தகையது என்று பூரணமாக சீதை படிக்க நேர்ந்தது. ராமாவதாரத்தில் சீதை அனுபவியாத ஒரு துக்கம் உலகத்தில் இல்லை.

ஆசைப் பட்டு அடைந்த பதவி ஒரு கணத்தில் கனவுபோல் மறைந்தது. கணவனை விட்டுப் பிரிய இஷ்டமில்லாமல் காட்டுக்கு அவனுடன் சென்றாள்.



போன இடத்தில் இதுவே போதும் என்று திருப்தியாக இருந்தவளுக்கு அனாவசியமாக ஒரு மோகம் மேலிட்டு, "அந்தப் பொன் மானைப் பிடித்துத் தா!" என்று புருஷனை வற்புறுத்தினாள். பக்தியே உருவெடுத்த லக்ஷ்மணனைச் சீதை அநியாயமாகச் சந்தேகித்து அவனைத் திட்டியும் அவமதித்தும் பேசித் தொந்தரவு படுத்தித் துரத்தி யனுப்பித் தனியே இருந்த சமயம் பெரிய ஆபத்தில் சிக்கிக் கொண்டாள். ராட்சதனால் தூக்கிக் கொண்டு போகப் பட்டாள். கதறி யழுதாள். வழியில் பறவை ஒன்று தைரியமாக அரக்கனைத் தடுத்துத் தாக்கித் தன் உயிரை மாய்த்துக்கொண்டு கீழே விழுந்தது. அதையும் பார்த்துத் துக்கப் பட்டாள். பிறகு இலங்கையில் சிறையில் கிடந்தாள். ஒரு வருஷம் கழித்தும் துயரம் தீராமல் தன் உயிரை மாய்த்துக் கொள்ளப் போன சமயத்தில் அனுமனைக் கண்டு "பிழைத்தேன்" என்று மகிழ்ந்தாள்.




எதிர்பார்த்தபடி புருஷன் வந்து அரக்கனைக் கொன்று மீட்சி அடைந்தாள். யுத்தம் முடிந்து அரக்கர் கூட்டம் ஒழிந்தது. உயிரைவிடப் பிரியமான புருஷனை எதிர்பார்த்த வண்ணமாக அசோக வனத்தில் இருந்தவளை ராமன் ஆள்விட்டு அழைத்து வரச் சொன்னான்! அப்படியே போனாள். தனக்கு விளங்காத ஒரு பயத்தோடு போனாள். போனதும் என்ன கண்டாள்? மகிழ்ச்சி பூத்த பூரண சந்திரனைப் போன்ற முகத்தைக் காணவில்லை. கடினமான முக லக்ஷணத்தை மேற்கொண்டவனாகத் தன் கணவனைக் கண்டாள். தான் அணைத்து அன்பு செய்த அதே ராமன்தான். ஆனால் ஏதோ விபரீதமான ஒரு மனோ நிலையில் இருந்தான்.

"தருமத்தினின்று நீ பிறழவில்லை என்பதற்கு என்ன சான்று?" என்று கேட்டான்.

இந்தச் சொல்லைக் கேட்டதும் ஸ்ரீதேவியின் அவதாரமான சீதை, "ஆகா! துக்கம் என்பது என்ன என்பதை இப்போது அறிந்தேன்" என்று எண்ணினாள்.

சோதனைத் தீயில் இறங்கினாள். அக்கினி பகவான் ஸ்ரீதேவியைத் தீண்டியதும் பனிபோல் குளிர்ந்து போய்விட்டான். இந்தச் சத்திய சோதனை வெற்றிகரமாக முடிந்து ஊர் திரும்பினார்கள்.

ஆனால் இன்னும் துயரம் விட்டபாடில்லை. ஊரார் அபவாதம் பேசினார்கள். தீயும் தீண்டாத அந்த உயிரானது கீழ் மக்கள் அபவாதத்தில் மிகுந்த வேதனைப் பட்டது; பற்றி எரிந்தது.

"மக்கள் ஏன் துயரப்படுகிறார்கள்? பொய்யும் மாயமும் ஏன் ஞானிகளையும் பாடு படுத்துகின்றன?" என்றெல்லாம் கேட்டாளல்லவா? அதற்குப் பதில், அழுத்தம் திருத்தமாகச் சிறிதும் சந்தேகத்துக்கு இடமின்றிச் சீதைக்கு அனுபவமாகக் கிடைத்தது.

இந்தக் கதையை என்னால் சொல்லவும் கஷ்டமாக இருக்கிறது. சீதை காட்டுக்கு அனுப்பப்பட்டாள். அச்சமயம் கருப்பம் தரித்திருந்தாள். அந்தப் பருவத்தில் மறுபடியும் காட்டைப் பார்க்க வேண்டும் என்ற ஒரு மசக்கை ஆசை சீதைக்குத் தோன்றிற்றாம். அது இம்மாதிரி நிறைவேறிற்று!

* * *

அவதாரம் முடிந்தது. மாயமும் மோகமும் ஒழிந்த பாற்கடல்.

"ஆண்டவனே! துக்கம் ஏன் என்பதை நன்றாகக் கண்டேன்" என்றாள் ஸ்ரீதேவி.

"மாயத்தின் வேகத்தைக் கண்டு கொண்டேன். இனி மக்களின் புலம்பலைக் கவனிப்பது என் பங்கு. தீர்ப்பது உம்முடைய பங்கு" என்றாள் மீண்டும்.

பகவதி, சகவரி, ஸ்ரீதேவி, லக்ஷ்மி, கௌரி, பார்வதி என்றெல்லாம் பல பெயர்கள் கொண்ட தேவி ஆண்டவன் சந்நிதியில் நமக்கு நல்ல துணையாக எப்போதும் நிற்கும் கருணாமூர்த்தி. ஆண்டவனுடைய கருணைத் தத்துவமே தேவி.

தேவி பூவுலகில் இறங்கி மக்கள் படும் தீராத துக்கத்தை நேரில் அனுபவித்தவள். பொய்யும் மாயமும் சேர்ந்து வாட்டும் நம்முடைய துயரத்தையும் கஷ்டத்தையும் நன்றாக அறிவாள். ஆகையால் நாம் அதைப் பற்றிப் பயப்பட வேண்டியதில்லை. நாம் மனம் உருகித் தேவியிடம் முறையிட்டால் போதும்.

# தீகைக்கு மனம் தெளிந்தது



டி.கே.சி.

பாஷையின் பண்பு இன்னதென்று தெரிவது கஷ்டம். ஆங்கில பாஷையின் பண்பைத்தெரிந்தவர் மூன்றுபேர்தான் என்பதாக ஒருவர் சொன்னார். அதிகாரத்துடனேயே சொன்னார்.

தமிழ் பாஷையின் பண்பைத் தெரிந்து கொள்வதும் கஷ்டந்தான். கஷ்டந்தான் என்பதை வேண்டிய மட்டும் நாம் அனுபவிக்கிறோம்.

தமிழ்க் கட்டுரைகள் வருகின்றன. விஷயம் என்னவென்று தெரியவில்லை நமக்கு. 'அடடா! யாராவது இதைத் தமிழில் மொழி பெயர்த்துக் கொடுக்கக் கூடாதா? விஷயம் விளங்கி விடுமே, தலை வலி தீருமே!' என்று தினம் தினம் நொந்து கொள்ளத்தான் வேண்டி யிருக்கிறது.

தற்காலத்தைப் பற்றிச் சொல்வானேன்? நெடுகிலும் தமிழ்ப் பண்பு தெரியாத சங்கடம் இருந்து தான் வந்திருக்கிறது.

உரை ஆசிரியர்கள் உரை நடை என்று விளங்காத தமிழில் எதை யெல்லாமோ எழுதித் தள்ளிக் குவித்து விட்டார்கள்.

செய்யுள் வடிவத்திலும் பிறர் எழுதித் தீர்த்தார்கள். அந்தக் கல்லாங்கரட்டுக்குள் நடந்து நடந்து முட்டிப் போய், மூக்குப் போய், மூளை குழம்பிக் கஷ்டப்பட்டது ஒரு இதிகாசம்.

இந்தச் சிரமத்தில் தமிழ்ப் பண்பைப் பார்க்க எங்கே நேரம் இருக்கிறது? அந்தப் பக்கமே திரும்ப மாட்டேன் என்று விட்டது கண்.

** ** **

தமிழ்ப் பண்பைத் தெரிந்த அபூர்வமான சில ஆசிரியர்களுக்குள் பாரதம் பாடிய பெருந்தேவனார் ஒருவர். ஏதோ ஒன்பதாவது நூற்றாண்டின் முற்பகுதியில் இருந்தவர் என்று சிலர் கணக்கிட்டுச் சொல்லுகிறார்கள். நமக்கு அவர் வாழ்ந்து வந்த காலமல்ல விஷயம்; தமிழ்தான் விஷயம்.

பெருந்தேவனார் பாரதம் முழுவதையும் இருபதினாயிரம் பாடல்களில் பாடி யிருந்ததாகச் சொல்லுகிறார்கள். அந்த அருமையான பாடல்கள் எல்லாம் இப்பொழுது அனேகமாய் ஒழிந்து போய் விட்டன.

சிதைந்து போன ஏடுகளை அங்கொன்று இங்கொன்றாகப் பார்த்துச் சுமார் 800 பாடல்களைத் திரட்டி (பாடம் அனேகமாய்ச் சிதைந்தது தான்) 1925-ம் வருஷம் அதாவது 27 வருஷத்துக்கு முன்பு வெளியிட்டார்கள் பண்டித அ. கோபாலய்யர் அவர்கள். தமிழுக்குச் செய்த பெரிய உபகாரம் அது. இந்த வெளியீடு இல்லையென்றால் பெருந்தேவனார் பாரதம் போனது போனதுதான். பெருந்தேவனார் என்று வெறும் பெயர்தான் மிஞ்சி இருக்கும்.

** ** **

பெருந்தேவனார் தமிழ்ப் பண்பில் தோய்ந்தவர் என்று சொல்லும்போது நமது சமய தத்துவ உண்மைகளிலும் தோய்ந்தவர் என்பது ஏற்படும். அவர் எப்படித் தோய்ந்துள்ளார் என்பதைக் கொஞ்சம் கவனித்துப் பார்க்கலாம்.

நம்முடைய உடலையும் உடையையும் வைத்துத் தான் நம்மை நாமென்று சொல்லிக் கொள்ளுகிறோம். இந்த இரண்டுக்கும் ஆதாரமாயுள்ள பொருள்கள் உணவும் பருத்தியும். நம்மால் ஒரு அரிசி உண்டாக்க முடியுமா? ஒரு கஜை பருத்திதான் உண்டாக்க முடியுமா? எல்லாம் கடவுள் செய்து தந்து நம்மைக் காக்கிற காரியந்தான். தந்தையாகவும் தாயாகவும் இருந்து காப்பாற்றுகிறான் இறைவன்.

காப்பாற்றுகிற காரியம் நம்மோடு நிற்கிற காரியமா? அல்ல. கன்றுக் குட்டிக்குப் பால் தயாரித்துக் கொடுக்கிறான். பசுவின் வயிற்றுக்குள் இருக்கும்போதே ஊட்டி வளர்க்கிறான் கன்றை.

எல்லா வஸ்துக்களுக்குள்ளும் நின்று அந்தந்த உருவத்தைக் கொடுக்கிறவன் அந்த இறைவன்தான். பாலிலுள்ள அம்சங்களைக் கணக்கிட்டு சேர்த்துத் தருகிற அறிவுத் தத்துவத்தை இன்னதென்று சொல்லமுடியுமா? இந்த விதமாக அறிவுத் தத்துவங்கள்தான் எத்தனை எத்தனை!

இத்தனை பெரிய உண்மைகளையும் உணர்ந்து அனுபவிக்க நமக்குக் கொடுத்து வைத்திருக்கிறதே

என்று நாம் சதா நன்றி செலுத்த வேண்டியிருக்கிறது இறைவனுக்கு.

பாடல் :

எந்தையாய்த், தாயாய்,
இறைவனாய், எவ்வுயிர்க்கும்
முந்து மதிவுதவும்
மூலமாய், — அந்தமிலாப்
பூதமாய், வேதமாய்,
நின்ற புராதனனை
ஓத வா, நெஞ்சே!
உணர்ந்து.

இப்படிச் சமய தத்துவங்களுக்குள் இறங்கித் நினைத்து அனுபவித்த பெருந்தேவனார் பகவத் கீதையைப் பற்றிப் பேசுவதற்கும் அதிகாரிதான். பகவத் கீதையிலுள்ள உண்மைத் தத்துவம் உலகெங்கும் ஆங்காங்கு ஞானிகளுக்குத் தெரிந்துவந்த தத்துவம்.

❀❀ ❀❀ ❀❀

பாரதம் மகா பாரதம் தான். பெரிய நாடகம் அது. நாடகத்தி லெல்லாம் நாடகம், யுத்தகளத்தில் அர்ச்சனனும் கிருஷ்ணனும் பேசிக் கொள்ளும் பேச்சு. பேச்சைக் கொஞ்சம் கேட்போம்.



முதல் நாள் யுத்தம் ஆரம்பமாகிறது. பாண்டவர்கள் சேனை ஒரு பக்கம். எதிரிலே துரியோதனனது சேனை. விஸ்தாரமான இடத்தை அடைத்து நிற்கிறது சேனை.

சேனையின் முன்னணியில் போருக்கான ஆயுதங்களோடு ஒரு தேர் வந்து நிற்கிறது. ஒரு நகரத்து முகப்பில் யுத்த சன்னத்தர்கள் அடங்கிய கோபுரம் நிற்பது போல் நிற்கிறது தேர்.

தேரில் அர்ச்சனனது பாட்டனாரான பீஷ்மர் நிற்கிறார். துரியோதனனது சேனைக்குத் தளகர்த்தராகவே நிற்கிறார்.

பொன்னுலகத்தில் தேவேந்திரனது அமராவதி நகரத்தின் முகப்பில் போருக்கான தளவாடங்களோடு கோபுரம் எழுந்து நிற்குமாம்



" கார்முகத்து வானமரர்
கோமான் கொடிநகரிற்
போர்முகத்த கோபுரம்
போன்றதால் "

விஸ்தாரமான குடை. உலகத்தையே கவித்துக் காக்கிற சாம்ராஜ்யத்துக்கு அதிபதியான துரியோதனனுடைய சேனையின் முன்னணியில் நின்ற பீஷ்மரது (பனைக் கொடியான்) தேர்.—அமராவதி நகரத்துக் கோபுரம்போல் உயர்ந்து நின்றது.

கார்முகத்து வானமரர்
கோமான் கொடிநகரிற்
போர்முகத்த கோபுரம்
போன்றதால் — பார்நிழற்றும்
மைம்பொற் குடையான்
படைச்சேனை முன்னின்ற
செம்பொற் பனைக்கொடியான்
தேர்.

[கார்முகத்து வானமரர்: கார்மையான வாள்கொண்டு போர் செய்கிற தேவர்கள்; கோமான் கொடி நகரில்: தேவேந்திரனது கொடிகள் பறக்கிற அமராவதி நகரத்து முகப்பில்; போர் முகத்த கோபுரம்: போர் செய்யும் வீரர் ஏறி நிற்கிற கோபுரம்; பார் நிழற்றும் மைம்பொற் குடையான்: உலகத்தையே கவித்துக் காக்கிற குடை வேந்தனை துரியோதனனது; படைச் சேனை முன்: ஆயுதங்கள் ஏந்திய சேனை முன்; செம்பொற் பனைக்கொடியான் தேர்: அழகாய் அமைந்த பனைக் கொடியோடு கூடிய பீஷ்மரது தேர்.]

இப்படி நிற்கிறது பீஷ்மரது தேர். — அர்ச்சுனனை அருமையாய் வளர்த்தெடுத்த பீஷ்மரது தேர். பார்க்கிறான் பீஷ்மரை அர்ச்சுனன்.

தன்னுடைய உயிர்த் தோழனே குருவோ என்று எண்ணக்கூடிய துரோணாச்சாரியாரும் நிற்கிறார். இன்னும் எத்தனையோ அன்பான உற்றார் நிற்கிறார்கள். அத்தனை பேரையும் போரில் தன் அம்புக்கு இரையாக்கி ராஜ்யத்தை ஆளவா? பேஷ், பேஷ். இதைவிடக் கேவலமான தொழில் ஏற்படவா செய்யும் ஒரு மனுஷனுக்கு வாழ்க்கையில்? இத்தகைய எண்ணங்கள் பல வந்து அர்ச்சுனனது இதயத்தைத் தாக்கின. என்ன செய்வான் அப்பாவி வீரன் அர்ச்சுனன்!

தனக்கு முன்னிருந்து சாரத்தியம் செய்த கிருஷ்ணனை நோக்கிச் சொல்லுகிறான்.

உற்றாரை யெல்லாம்
உடன்கொன்(று) அரசாளப்
பெற்றாலும் பேணேன்
அதுவென்று - சொல்தாழ்ந்து
வார்த்தடக்கை வில்நெகிழ
வாளா இருந்திட்டான்
தேர்த்தட்டின் மீதே
திகைத்து.

[பேணேன் அது என்று: அரசாள்வதை ஒப்புக்கொள்ள மாட்டேன் என்று சொல்லிவிட்டு; சொல்தாழ்ந்து: வார்த்தை அப்படியே பம்மி விட்டது, வீர வார்த்தை எங்கேயோ போய் விட்டது; வார்த்தடக்கை வில் நெகிழ: மிக்க பலம் பொருந்திய கையிலுள்ள வில்லானது மெள்ள நழுவித் தடாரென்று விழுந்தது தேர்த்தட்டில்; வாளா: சும்மா; — திகைப்பின் பாவம் அப்படியே நிற்கிறது செய்யுளில்.]

◦◦ ◦◦ ◦

பார்த்தான் கிருஷ்ணன். ரொம்ப சங்கடமாய்ப் போய் விட்டது. அர்ச்சுனனை எப்படித் தேற்றுவது என்று யோசித்தான்.



நம்முடைய விசுவரூபத்தை அதாவது எங்குமாய் எல்லா வஸ்த்துவுமாய் இருக்கும் உண்மையைப் பிரத்தியக்ஷமாய் அர்ச்சனனுக்குக் காட்டினால் ஒழியப் பிரயோசனம் இல்லை என்று எண்ணினான்.

அவ்வளவுதான்: அர்ச்சனனது மனக் கண்முன் கடவுள் தத்துவமானது நிறைந்து நின்று விட்டது. பேரண்டம் அகண்டம் எல்லாவற்றிலுமே நிறைந்து நின்று விட்டது.

**   **   **

சாமான்ய அறிவுக்கு மலை யென்றும் மரம் என்றும் தனித்தனி வஸ்த்துக்களாகத் தோன்றுகின்றன. உண்மையை ஊடுருவிப் பார்த்தோமானால், கல்லோ மண்ணோ, தங்கமோ வெள்ளியோ, இரும்போ ஈயமோ ஒன்றும் கிடையாது. எல்லாம் அணுக்களாக முதலில் முடிகின்றன. தங்க அணு, வெள்ளி அணு என்று சொல்லிக் கொள்ளுகிறோம்.

பிறகு அணுக்களைப் பரிசீலனை பண்ணிப் பார்க்கும்போது அணுவில் கோடியில் ஒரு பாகமான சில ஆன்கள்தான் மிஞ்சுகின்றன. அவைகளை மறுபடியும் பரிசீலனை செய்வோமானால் இன்னும் அதிநுட்பமான ஆன்களாய்ப் போகின்றன. இப்படித் தேய்ந்து தேய்ந்து கடைசியில் ஓரே வஸ்த்துவாய் முடிகின்றன. அந்த வஸ்த்துவில் பேதமோ உருவமோ ஒன்றுமே இருக்க இடமில்லை. அந்த வஸ்த்துவையே கடவுள் என்று சொல்லுகிறோம். அந்த வஸ்த்துவில் அசைவு யாதொன்றும் இல்லை. ஆனால் பேருள்ளம் ஒன்று நிறைந்திருக்கிறது.

அந்தப் பேருள்ளத்தில் நிகழ்கிற கனவு நிகழ்ச்சிகளே சிருஷ்டிப் பொருள்கள் எல்லாம் — மலையோ மரமோ, கல்லோ மண்ணோ, தங்கமோ வெள்ளியோ, இரும்போ ஈயமோ எல்லாம்.

ஜீவப் பிராணிகளும் நாமுமே அந்தக் கனவு நிகழ்ச்சியில் உண்டாகும் வஸ்த்துக்கள்தான்.

அடிப்படையாக உள்ளது அந்தப் பேருள்ளம் ஒன்றுதான்; பிறக்கிறதென்றும், கொஞ்ச காலம் நிலைத்து நிற்கிறதென்றும், பிறகு மறைகிறதென்றும் சொல்லுவதெல்லாம் கனவு நிகழ்ச்சிகளே.

பாவம், தர்மம், கொடுமை, இரக்கம் ஒன்றும் இருக்க இடமில்லை அந்தக் கடவுள் மயத்தில்.

பிறப்பு, நிலை,கே(டு)
    இவையானவன்; பாவம்
அறத்தோடு ஐம்பூதம்
    ஆனான் — உறக்கிய
வானுவான் மன்னுவான்
    மன்னுயிர்கள் அத்தனையும்
தானாதல் காட்டினான்
    தான்.

[பிறப்பு நிலை கேடு: பிறத்தல், நிலைத்து நிற்றல், மறைதல்; பாவம் அறத்தோடு ஐம்பூதம் ஆனான்: பாவம் என்று சொல்லுகிறதும் தர்மம் என்று சொல்லுகிறதும் அந்தக் கடவுள்தான்—அதோடு பஞ்ச பூதங்கள் (ஜட வஸ்த்துக்கள்) என்று சொல்லுகிறதும் அவன்தான்; உறக்கிய வானுவான் மன்னுவான்: எட்டாத வானென்ன, இந்த பூமிதான் என்ன, உயிர் வர்க்கங்கள்தான் என்ன, எல்லாம் அந்தக் கனவு மயந்தான்; பிறகு பாவமேது, தர்மமேது, இரக்கம் ஏது, கொடுமைதான் ஏது! எல்லாம் அந்தக் கடவுள் மயந்தான். மிச்சமாக ஒன்றும் இல்லை. இந்த உண்மையை அர்ச்சனனுக்குக் கிருஷ்ணன் காட்டி விட்டான் பிரத்தியக்ஷமாக. இதைத்தான் விசுவரூபம் என்று சொல்லுகிறோம்.]

அர்ச்சனனுக்குத் தெளிவாய்த் தெரிந்து விட்டது உண்மை. தானில்லை என்பது தெளிவாயிற்று. பீஷ்மர் இல்லை என்பது தெளிவாயிற்று. துரோணர் முதலியவர்களும் இல்லை என்பது தெளிவாயிற்று. கவலை விட்டது. மனதில் அமைதி உண்டாய் விட்டது. வாய்விட்டுப் பேசுகிறான்.

ஆயா! என் மைத்துனனே!
    ஆழித்தேர் பாகா! நான்
பேயான் உரைத்த
    பெரும்பிழைகள் — மாயா!
பொருபடைக் கை மாலே!
    பொறுத்தருள் வாயென்று
திருவடிக்கே வீழ்ந்தான்
    தெளிந்து.

[ஆயா: இடையர் குலத்துக்கு அலங்காரமாய் விளங்குபவனே; ஆழித்தேர் பாகா: சக்கரத்தோடு கூடிய என்னுடைய தேருக்கும் பாகனும் அமைந்த கடவுளே; பேயான் உரைத்த பெரும் பிழைகள்: பேய்த் தனமாய்ச் சொன்ன தவறுதல்களை எல்லாம்; மாயா: யுத்தம், பகைவர், உறவினர் என்றெல்லாம் ஜால வித்தை காட்டும் இறைவனே; பொருபடைக்கை மாலே: போர் செய்கிற சக்கராயுதத்தைக் கொண்ட திருமாலே; பொறுத்தருள்வாய் என்று: தவறுதல்களைப் பொறுப்பாய் என்று சொல்லிக் கிருஷ்ணனுடைய திருவடியில் அப்படியே விழுந்தான் அர்ச்சனன்; தெளிந்து: உண்மை நிலையைத் தெளிவுடன் தெரிந்தவனாய்;]

உலக நிகழ்ச்சிகளுக் கெல்லாம் அடிப்படையான கடவுள் தத்துவத்தை அழகான நாடக முறையிலேயே எடுத்து விளக்குகின்றன மூன்று கவிகளும். அபூர்வமான கவி உருவம், பாவம் எல்லாம் அமைந்துள்ள அருமையான கவிகள்.

பெருந்தேவனார் தத்துவ உண்மைகளில் எப்படித் திளைத்துப் பாடுகிறார் என்பதை நாம் நன்றாய் உணருகிறோம்.

நாமெல்லாம் உணரும்படி பாரதக் கீதையைப் பாடி முடித்து விட்டார் பெருந்தேவனார்.

# காவேரியின் தவம்

கினஜா



ங்கா ஸ்நானம் செய்து விட்டுப் புதுப் புடவை சலசலக்க வந்து தன்னை நமஸ்கரித்த மனைவியின் அழகிய முகத்தை ஆர்வத்துடன் பார்த்தான் ரகுபதி. "காவேரி! கங்கையைக் காட்டிலும் நீயே உயர்ந்தவள்" என்றான் மனம் பூரித்தவனாய்.

கணவனது பொருள் பொதிந்த வார்த்தையைக் கேட்ட காவேரியின் முகத்தில் புன்னகை தவழ்ந்தது.

சுமார் எட்டு வருடங்களுக்கு முன்னால் நடந்த சம்பவம் அது. ஆனாலும் இன்று நடந்தது போல் காவேரியின் கண் முன்னால் படச் சுருளைப் போல் விரிந்து ஓடுவது அச்சம்பவம். அவள் ஒரு பெருமூச்சுடன் அந்த இடத்திலேயே உட்கார்ந்து விட்டாள்.

* * *

பெருந்தகைய செல்வமாய்ப் பிறந்த பெண் காவேரி. 'காவேரி' என்று பெயரிட்ட அன்றே அவள் அருமை 'அம்மாஞ்சியின் மனைவி' என்று நிர்மானித்து விட்டனர் அவளுக்குப் பெயரிட்ட பெரியவர்கள்.

அம்மாஞ்சி ரகுபதியிடம் எல்லை மீறி அன்பு கொண்டிருந்த காவேரி, திருச்சேறை என்ற கிராமத்துக்குப் பக்கத்தில் உள்ள கொடவாசலில் பத்தாவது வகுப்பு வரையில் படித்துப் பூர்த்தி செய்திருந்தாள். அப்போது ரகுபதி சென்னைக் கலாசாலையில், பி. ஏ. வகுப்பில் படித்துக் கொண்டிருந்தான்.

அன்று வெள்ளிக்கிழமை. ஏதோ காரியமாக மாமாவின் வீட்டுக்கு வந்த காவேரி, உள்ளே அம்மாஞ்சியின் பேச்சுக் குரல் கேட்கவே ஆவலுடன் உள்ளே நுழைந்தாள். உள்ளே வந்தவள் அப்படியே பிரமித்து நின்று விட்டாள். அம்மாஞ்சிக்குப் பக்கத்தில் அழகே உருவான ஒரு பெண் உட்கார்ந்து பேசிக் கொண்டிருந்ததே அவளது பிரமிப்புக்குக் காரணம்.

காலடியோசை கேட்டுத் திரும்பிய ரகுபதி, "காவேரியா? வா, வா!" என்று அவளை வரவேற்றான். திரும்பித் தன் பக்கத்தில் உட்கார்ந்திருந்த அந்தப் புதிய பெண்ணிடம், "நளினி! இவள்தான் என் அத்தை பெண் காவேரி" என்று சொல்லி விட்டுக் காவேரியிடமும், "காவேரி! இவள் பம்பாயிலுள்ள என் மாமாவின் பெண் நளினி" என்று இருவரையும் அறிமுகம் செய்து வைத்தான்.

தன் முத்துப் போன்ற பற்கள் தெரிய மெல்லச் சிரித்த நளினி என்ற அந்த நாகரிகப் பெண், காவேரியை ஏற இறங்கப் பார்த்தாள். பிறகு, "உங்கள் அத்தை பெண் சங்கோசியாக இருப்பாள் போலிருக்கிறதே!" என்று சொல்லிக் கலகலவென்று சிரித்தாள். அச்சிரிப்பின் இனிமை,

யில் சொக்கி அவளையே பார்த்தபடி தானும் சேர்ந்து சிரித்தான் ரகுபதி. இந்தக் காட்சியைக் கண்ட காவேரி திடுக்கிட்டாள். இருந்தாலும் அவள் தன் உணர்ச்சிகளை வெளிக் காட்டிக் கொள்ளவில்லை.

அன்று மாலை ரகு, நளினி, காவேரி மூவரும் அந்தக் கிராமத்தைச் சுற்றிப் பார்க்கப் புறப்பட்டனர். அந்த அழகான சின்னஞ் சிறு கிராமத்தைக் குதூகலத்துடன் சுற்றிப் பார்த்தபடி வந்த அவர்கள் சாரபுஷ்கரணிக் கரையை அடைந்ததும், அருகே நின்ற கருமாணிக்க மரத்தடியில் உட்கார்ந்து கொண்டு கோவிலையும் அதன் நெடிதுயர்ந்த கோபுரத்தையும் பார்த்தபடி பேசத் தொடங்கினார்கள்.

நளினி சற்று வெறுப்புடன், "உங்கள் கிராமம் மிக அழகாகவே யிருக்கிறது. ஆனால் இந்தக் கிராமத்து ஜனங்கள் என்னை ஏன் இப்படி வெறிக்க வெறிக்கக் காட்டு மிராண்டியைப்போல் பார்க்கிறார்கள், ரகு?" என்று கேட்டாள்.

நளினியின் வார்த்தைகளைக் கேட்டுக் கோபமடைந்த காவேரி ரகுவை முந்திக் கொண்டு பதில் சொல்ல ஆரம்பித்தாள். "கிராமத்து ஜனங்கள் உங்களை வெறிக்கப் பார்க்கிறார்கள் என்பதற்காக அவர்களைக் காட்டு மிராண்டிகள் என்று சொல்லி விடுவது தவறு. இந்தக் கிராமத்தில் வயது வந்த பெண்கள், பெரியவர்கள் முன் செருப்புப் போட்டுக் கொள்ள மாட்டார்கள்; ஆண்களுக்குச் சரி சமதையாக இப்படிக் கைகோர்த்துக் கொண்டு வீதியில் உலாவ மாட்டார்கள். ஆகையால்தான் எல்லாரும் உங்களை அப்படி வெறிக்க வெறிக்கப் பார்க்கிறார்கள்."

இப்படியாக ஆரம்பித்த தர்க்கம் மேலும் மேலும் வளர்ந்து கொண்டே போயிற்று. அதை மேலும் வளராமல் தடுக்க விரும்பிய ரகுபதி சிரித்துக் கொண்டே, "நளின், ஏதேது? உங்கள் தர்க்கம், காவேரி, கங்கை, யமுனை, கோதாவரி முதலான நதிகுமாரிகள் செய்த தர்க்கத்தைவிடப் பெரிதாக நீண்டு விடும்போல் இருக்கிறதே! நளின்! இந்த க்ஷேத்திர மகாத்மியத்தைக் கொஞ்சம் கேட்கிறாயா, சொல்லுகிறேன்" என்று அவர்கள் கவனத்தை மெள்ளத் தன் பக்கம் திருப்பினான்.

காவேரியின் பேச்சால் கசப்படைந்திருந்த நளினி அரை மனதாக, தன் அத்தான் சொல்லப் போகும் கதையைக் கேட்க இசைந்தாள். ரகுபதி பலமான பீடிகையுடன் பகவான் சாரநாதரின் அழகான கதையைச் சொல்ல ஆரம்பித்தான்:

ஒரு சமயம் நாரதருக்குப் பொழுது போகாமல் போகவே அவர் சிவபெருமானை அணுகி. "பிரபோ! தங்கள் மூலம் நான் முன்னர் பல க்ஷேத்திரங்களின் மகிமையைத் தெரிந்து கொண்டுள்ளேன். இன்றும் தாங்கள் ஏதாவதொரு க்ஷேத்திரத்தின் மகிமையைச் சொல்லியருள வேண்டும்" என்று கைகூப்பி வேண்டிக் கொண்டார்.



புன்னகை புரிந்த கைலாச நாதரும் "நன்று; நன்று; நாரத முனிவரே! இன்று உமக்குச் சார க்ஷேத்திரத்தின் மகிமையைச் சொல்லுகிறேன், கேளும்!" என்று ஆரம்பித்தார்.

"க்ருதயுக ஆரம்பத்தில் ஒரு சமயம் விந்தியமலைத் தாழ்வரையில் கங்கை காவேரி, யமுனை, கோதாவரி முதலான நதிகுமாரிகள் யாவரும் ஒன்று கூடிப் பந்து விளையாடி மகிழ்ந்திருந்தனர். அச்சமயம் கந்தர்வர்களுக்குள் மகா புத்திமானான 'விசுவாவஸு' என்ற கந்தர்வன், என்னைத் தன் பாடல்களால் பூஜிக்க எண்ணி அவ்வழியாக வந்தான். வரும்பொழுது நதிகுமாரிகள் யாவரும் ஒன்று கூடி மகிழ்வதைக் கண்டு, நின்று கரம் குவித்து நமஸ்கரித்தான். பின்னர் கானரூபமாகவும் தன் நமஸ்காரத்தை அந்நாரீமணிகளுக்குத் தெரிவித்து விட்டுப் போய் விட்டான்.

"கந்தர்வனின் நமஸ்காரத்தால் நதிகுமாரிகளுக்குள் பெரும் தர்க்கம் ஏற்பட்டது. 'அடி! அந்தக் கந்தர்வன் என்னைக் குறித்தே நமஸ்கரித்தான்', 'இல்லையடி; இல்லை! அவன் என்னைக் குறித்தே நமஸ்கரித்தான்' என்று அவர்களிடையே ஆரம்பமான தர்க்கம் முடிவின்றி நீண்டது.

"தக்ஷிணாயனத்தில் அவ் வழியாக வந்த பாடகனான அந்தக் கந்தர்வன், அநேக தினங்கள் என்னிடம் தங்கிப் பல பாடல்களால் என்னை மகிழ்வித்து விட்டுத் திரும்பும் பொழுது உத்தராயணம் பிறந்து விட்டது. ஆயினும் அப்பொழுதும் விந்தியமலைத் தாழ்வரையிலேயே நின்று தர்க்கித்துக் கொண்டிருந்த நதிகுமாரிகள், திரும்பி வரும் கந்தர்வனைக் கண்டதும் ஓடோடியும் வந்து அவனைச் சூழ்ந்து கொண்டு, "கந்தர்வ! நீ இவ்வழியாகப் போகும் பொழுது செய்த நமஸ்காரம் எங்களில் யாருக்கு உரித்தானது?" என்று ஏககாலத்தில் கேட்டார்கள்.

"மகா புத்திசாலியான அந்தக் கந்தர்வனும் நாலாபுறமும் எழுந்து தன்னைச் சூழ்ந்து கொண்ட நதிமணிகளின் கேள்விகளால் சற்றே திகைத்து நின்று விட்டான். ஆயினும் புத்திமானான அவன் அரை நொடியில் விஷயத்தை ஊகித்துக் கொண்டு சொன்னான். 'நாரீமணிகாள்! புகழ் பெற்ற நதிமணிகாள்! உங்களுள் யார் மிக்க உயர்ந்தவளோ அவளின் பொருட்டே என் நமஸ்காரம் செய்யப்பட்டது' என்று சொல்லிப் புன்முறுவலுடன் போய்விட்டான்.

"தங்களுள் யார் உயர்ந்தவள் என்ற தர்க்கம் இப்போது அவர்களுக்குள் எழுந்தது. இது குறித்து வெகு காலம் தர்க்கம் செய்து அலுப்படைந்த மற்ற நதிகுமாரிகள் ஒவ்வொருவராக அந்த இடத்திலிருந்து மெள்ள நழுவி விட்டனர். ஆனால், கங்கைக்கும் காவேரிக்கும் மட்டில் தர்க்கம் ஓய்வதாய்த் தெரியவில்லை.

"திரிவிக்ரமன் திருவடிகளில் உண்டான கங்கை காவேரியைப் பார்த்து, 'அடி, போடி! நான் ஸ்ரீ மகாவிஷ்ணுவின் திருவடிகளிலிருந்து உண்டானவள்; சகல பாபத்தையும் போக்க வல்லவள்; நானே உயர்ந்தவள். அந்தக் கந்தர்வன் என்னைக் குறித்தே நமஸ்காரம் செய்திருப்பான்' என்று விடாப்பிடியாகக் கூறினாள்.

"கங்கையின் இவ் வாதத்தால் வெகுவாகக் கோபம் கொண்ட காவேரி, முகம் சிவக்க, தன் சிவந்த உதடுகள் துடிக்க, 'அடி, அழகி! நீயே உன்னைப் பற்றிப் பிரமாதமாகப் புகழ்ந்து கொள்ளும் இந்தப் பிரபாவம், பிரம்மாவினால் ஒப்புக் கொள்ளப்பட்டால் அது உண்மைதான்' என்று இறுதியாகச் சொன்னாள்.

"இதைக் கங்கை ஒப்புக் கொள்ளவே இருவரும் பிரம்ம லோகத்தை யடைந்து பிரம்மாவைக் கண்டு கேட்க, அவர் புன்னகையுடன், 'பரந்தாமன், வாமனாவதார ரூபனாய் ஈரேழு பதினாலு உலகங்களையும் தன் திருவடியால் இரு அடியாக அளந்து விட்டு, மூன்றாவது அடிக்கு 'இடம் எங்கே?' என்றார். அப்போது அந்தத் திரிவிக்ரமனுடைய திருவடித் தாமரைகளை நான் அர்க்கியம் விட்டுப் பூஜித்தேன். அப்பொழுது அளவிடற்கரிய அத்திருவடிகளிலிருந்து அழகு மிக்க இக் கங்கையானவள் தோன்றினாள்! ஆகையால் கங்கைதான்

உயர்ந்தவள் என்பதில் சிறிதும் சந்தேகமேயில்லை' என்றார்.

"ஓ! நாரத மகரிஷியே! இவ்விதம் பிரம்மா கூறியதும், காவேரியானவள் தோல்வியால் ஏற்பட்ட துக்கத்தால் தலை கவிழ்ந்து சிலையாக நின்று விட்டாள். சிறிது நேரத்திற்குப் பின் சீறி சினந்த காவேரி கங்கையைப் பார்த்து, 'அடி! கங்கை! கர்வம் கொண்டு துள்ளாதே! என் திறமையால் இறைவனைத் திருப்தி செய்து, உன்னை விட உயர்ந்து, உன்னையே ஆதிக்கம் செலுத்தும்படியான மகிமையை அடைகிறேன், பார்!" என்று சபதமிட்டு விட்டு, அங்கிருந்து விரைந்து சென்றாள்.

"பிறகு காவேரி ஸஹ்யமலைச்சாரலை அடைந்து, பிதாமகரான பிரம்மனைத் தியானத்தில் நிறுத்திக் கடுந்தவம் புரியலானாள். கடும் கோடையில் அக்னிக்கு மத்தியில் நின்றும், மழையில் மடுவிற்கு மத்தியில் நின்றும், பனியில் மலையின் உச்சியில் நின்றும், காற்றை லக்ஷியம் செய்யாமல் ஓரே நிலையாக நின்று கடுந்தவம் செய்தாள்.

"அவளது தவத்தைக் கண்டு மகிழ்ந்த பிரம்ம தேவரும் அவள் முன் தோன்றி, 'காவேரி! நீளது நீண்ட கயல் விழிகள் கலங்கக் கடுந்தவம் இயற்றிய உன் உறுதியைக் கண்டு மகிழ்கிறோம்; இனி நீ விரும்பும் வரம் கேள்' என்று பணித்தார்.

"களிப்படைந்த காவேரியும் கரம் குவித்து, 'ஹம்ஸத்தை வாகனமாகக் கொண்டவரே! பிரஜைகளுக்கு அதிபதியே! என் தவத்தைக் கண்டு தாங்கள் மகிழ்ந்தது உண்மையாயின், **கங்காதிக்கம்** (கங்கைக்கு மேல் உயர்ந்தவள்) கொடுங்கள்' என்றாள்.

"காவேரியின் வார்த்தைகளைக் கேட்ட பிரம்மா, அவ்வழகியைப் பார்த்து, 'யாம் உனக்கு, **கங்கா சாம்யம்** (கங்கைக்குச் சமதையானவள்) கொடுக்கிறோம். அதைக் காட்டிலும் உயர்வைக் கொடுப்பது நம் வரம்பை மீறிய செய்கையாகும். ஆகையால் இதையே நீயும் திருப்தியுடன் ஏற்றுத் தவத்தைக் கைவிட்டுத் தேவர்களுக்கும் அமைதியைக் கொடு' என்றார்.

"கருத்தடர்ந்த கூந்தலையுடைய அழகியான காவேரியின் முகம் கறுத்தது. துக்கத்தால் துடிக்கும் உதடுகளுடன் அவள், 'தாமரைப் பூவில் உதித்தவரே! தங்களால் கங்கா சாம்யம் பெற்று உயர்ந்தேன். ஆயினும், அவளைக் காட்டிலும் உயர்வை அடைந்தாலன்றி, நான் உறக்கம் கொள்ள விரும்பேன். பிரபோ! அவ்வுயர்வை யான் அடையும் மார்க்கத்தையும் தாங்களே காட்டியருள வேண்டும்' என்று வேண்டினாள்.

"காவேரியின் உறுதியைக் கண்டு வியந்த நான்முகன் சொல்லலானார்: 'பிரளய முடிவில் லக்ஷ்மீ நாயகனான ஸ்ரீ மகாவிஷ்ணு என்னை பணித்து, 'நல்ல மண்ணை எடுத்துக் குடம் செய்து, அந்தக் குடத்தில் எல்லா சாஸ்திரங்களையும், புராணங்களையும் ஆவாஹனம் செய்து, ஜம்பு த்வீபத்தில் ஸ்தாபனம் செய்' என்று திருவாய் மலர்ந்து அருளினார். யானும் அவ்விதமே மண்ணெடுத்துக் குடம் செய்தும் அது நிற்காமல் போகவே, அதற்கும் போய்ப் பரந்தாமனையே செய்வதென்னவென்று கேட்டேன். அவர், 'நமக்கு மிகவும் பிரியமான நூற்றெட்டு க்ஷேத்திரங்களில் மிகவும் உயர்ந்ததும், அதிக அழகுள்ளதுமான சாரக்ஷேத்திரத்தில், சாரபுஷ்கரணிக் கரையிலிருந்து மண்ணெடுத்துக் குடம் செய்து சாஸ்திரங்களை ஆவாஹனம் செய்யும்' என்று கட்டளை யிட்டார். யானும் அவர் கட்டளைப்படியே செய்து, குடம் உடையாமலிருக்கக் கண்டு மகிழ்ந்தேன்.

'ஆகையால் நீயும் அந்தத் திவ்ய க்ஷேத்திரத்தை யடைந்து, இறைவனின் ஆயிரம் திருநாமங்களில் ஒன்றான 'சாரன்' என்னும் திருநாமத்தைத் தியானித்தபடி தவம் செய்து அந்த நாதனின் அருள் பெற்று உனக்கு இஷ்டமான பலவற்றையும் பெற்றுக் கொள்வாய்' என்று அருளிப் பிரம்ம தேவர் மறைந்தார்.

"அதி புத்திசாலியான காவேரியும் அந்த அருமையான சார க்ஷேத்திரத்துக்குச் சென்று, சார புஷ்கரணியில் நீராடி, அப்புஷ்கரணிக் கரையிலுள்ள பெரும் ஆல விருக்ஷத்தினடியில் உட்கார்ந்து, உபவாசத்தால் மனத்தை ஒருமுகப் படுத்தி வெகு காலம் அருந்தவம் இருந்தாள்.

"தேவி காவேரியின் உக்ரமான தவத்தைக் கண்டு தேவரும், மூவரும் திகைத்து நடுங்கினார்கள். கடைசியில் மகாவிஷ்ணு, கருணை வடிவமான அழகிய குழந்தை உருவத்தைத் தாங்கி, கயல் விழியாள் காவேரியிருக்கும் இடத்தை நாடி ஓடிவந்தார்.



"அவ்வற்புதக் குழந்தையின் அழகை ஆராய்ந்த காவேரி, குழந்தை 'பெருந்தகரிய பெருமானே!' என்று அறிந்து அளவற்ற ஆச்சரியமும் ஆனந்தமும் கொண்டு திகைத்தாள்.

"களிப்பினாலும், களைப்பினாலும் கண்ணீர் மல்க நின்ற காவேரி தன் கண்ணீரால் அப் பங்கயக் கண்ணனின் பாத பத்மங்களைக் கழுவித் தண்டனிட்டுக் கரம் குவித்துப் பல முறை வலம் வந்தாள்.

"தம்மை வலம்வந்த அவ்வாள் விழியாளை நோக்கி வைகுந்தவாசி, 'நீ விரும்பும் யாவற்றையும் அளிக்கச் சித்தமாக உள்ளோம். ஆகையால் சஞ்சலத்தை விட்டு, வேண்டியவற்றைக் கேள்' என்று ஆக்ஞாபித்தார்.

"அவரது ஆக்ஞையைச் சிரமேற் கொண்ட காவேரி, 'பிரபோ! எனக்குக் **கங்காதிக்கத்தையும்** அளித்து என் சபதமும் பூர்த்தியாகும்படி அனுக்கிரஹிக்க வேண்டுகிறேன்'" என்று வேண்டி நின்றாள்.

"அவள் வேண்டுகோளை ஏற்றுப் புன்னகை கொண்ட பன்னக சயனனும் மிகப் பரிவோடு சொல்வார்: 'அன்று கங்கை நம் பாதங்களிலிருந்து தோன்றியதால் மகா உயர்வை அடைந்தாள். இன்றோ நாமே உன் மடியில் குழந்தை உருத் தாங்கி அமர்ந்து விட்டோம். ஆதலின் இன்று நீ கங்கையைக் காட்டிலும் மிகவும் உயர்ந்து விட்டாய். இந்தச் சாரக்ஷேத்திரம் அதிசயிக்கத் தக்க உன் தவத்தினால் பின்னும் அதிக அழகையும், பிராபல்யத்தையும், அடைந்து உயர்ந்து விட்டது.' இதுவே, 'திருச்சேறை' என்னும் சார க்ஷேத்திரத்தின் மகாத்மியம்" என்று சாரக்ஷேத்திர மகாத்மியத்தை நாரதருக்குச் சொன்னார் சிவபெருமான்.'

ரகுபதி கதையை முடித்ததும் கலகலவென்று சிரித்த ஜனிஜு, "பேஷ்! நம்ப முடியாத நல்ல கட்டுக் கதை!" என்றான். இதைக் கேட்டதும் காவேரிக்குக் கட்டுக் கடங்காத கோபம் வந்து விட்டது.

அவள் தான் ஜனிஜுவின் அறியாமையைக் கண்டு இரங்குவதாகக் கூறியதுடன், தங்கள் க்ஷேத்திர சம்பந்தமான கதையைக் கட்டுக் கதை என்று அவன் சொன்னதற்காக அவனைத் திக்கு முக்காடச் செய்து விட்டாள்.

ஜனிஜுவின் நிலைமையைக் கண்டு பதறிய ரகு, வெறுப்புடன் காவேரியைப் பார்த்து, "காவேரி, நீ ரொம்பவும் துடுக்காகப் பேசி விட்டாய். அதற்காக ஜனிஜுவிடம் மன்னிப்புக் கேள். ஜனிஜு அறிவில் உன்னைக் காட்டிலும் உயர்ந்தவன். அவன் கூடிய சீக்கிரமே, 'மெடிகல் காலேஜில்' சேர்ந்து படிக்கப் போகிறான். அதி புத்திசாலியான அவனை நீ அவமதிப்பது தவறு. நீ நினைத்தாலும், மூவன்

முடியும் கூட இந்த ஜன்மத்தில் அவனுக்குச் சமமாக ஆக முடியாது" என்று படபடப்பாகக் கூறினான்.

"நான் முயன்றால் சில வருடங்களிலேயே அவனுக்குச் சமதையாக, ஏன் உயர்வாகக்கூட ஆகிவிட முடியும்" என்றாள் காவேரி. இதைச் சொல்லும்போது அவளது குரல் கணீரென்று எழுந்து கோபுரத்தில் மோதி எதிரொலித்தது.

"முடியாது; நீ முயன்றாலும் என் கனினுவுக்குச் சமதையாக ஆகிவிட முடியாது! இது வீண் பகற் கனவு" என்று உரக்கக் கத்தினான் ரகு.

சட்டென இடத்தை விட்டு எழுந்த காவேரி, "அம்மாஞ்சி! இது என் பகற்கனவு அல்ல. என்னால் படித்துப் பல பட்டங்களைப் பெற முடியும். உங்கள் மாமன் மகள் கனினுவைக் காட்டிலும் நான் எல்லாவிதத்திலும் உயர்ந்தவள், கெட்டிக்காரி, திறமைசாலி என்பதை நிரூபித்து நீங்களே அதை ஒப்புக் கொண்டு விடும்படியும் செய்யா விட்டால் என் பெயர் காவேரி யல்ல. இது நிச்சயம்" என்று சபதம் செய்துவிட்டு விர்ரென்று அவ்விடம் விட்டுப் போய் விட்டாள்.

* * *

தாயற்ற தம் அருமைப் பெண்ணின் துக்கத்தைக் கண்ட போதுதான் காவேரியின் தந்தைக்குத் தாம் செய்து விட்ட பெரும் தவறு புலனாயிற்று. சின்னஞ் சிறு வயது முதலே அவளது இளம் உள்ளத்தில் வித்தை விதைத்து, அதைக் கொத்திக் களை யெடுத்து நல்ல மரமாக்கி விட்டு, இன்று திடீரென்று நிமிஷத்தில் அம்மரத்தைக் கிள்ளி எறிந்து விடுவது என்பது முடியாத காரியம் என்பதைக் கண்டபோதுதான் அவர் தம்மைத் தாமே நொந்து கொண்டார். தம் மூடத்தனத்தால் துன்புற்றுத் துடிக்கும் அருமைப் பெண்ணுக்காக இப்போது அவர் எதையும் செய்யத் தயாரானார். ஆகவே காவேரி பிடிவாதமாக மேலே படிக்க வேண்டும் என்று சொல்லவே, அவரும் உடன்பட்டு அன்றே அவளுடன் சென்னைக்குப் பயணமாகி விட்டார்.

தன் லக்ஷியத்தில் தீவிரமாக முனைந்து விட்ட காவேரி அடுத்த இரண்டு வருஷங்களில், 'இன்டர்மீடியட்' வகுப்பில் முதலாவதாகத் தேறி வைத்தியக் கல்லூரியிலும் இடம் பிடித்துக் கொண்டு விட்டாள். அதே சமயம் கனினு, 'இன்டரில் மார்க் மிகக் குறைவாக வாங்கிய காரணத்தினால் வைத்தியக் கல்லூரியில் சேர முடியாமல் பி. ஏ. வகுப்பில் சேர்ந்திருக்கிறாள்' என்ற செய்தியும் கிடைக்கவே காவேரியின் உற்சாகம் பின்னும் அதிகமாயிற்று.

நாட்கள் சென்றன. காவேரி வைத்தியக் கல்லூரியில் சேர்ந்த இரண்டாவது வருஷம் கனினுவுக்கும் ரகுபதிக்



கும் விவாகம் நடந்தது. அதன் பிறகு காவேரி அவர்களைப் பற்றிய எவ்விதச் செய்தியையும் அறிய முயலவோ, ஆவல் கொள்ளவோ இல்லை. அம்மாஞ்சியின் செய்கையால் வெறுப்படைந்திருந்த அவள் உள்ளம் வெளியுலக விவகாரங்களையே அறிய ஆவல் கொள்ளவில்லை. அவள் ஆசை, பாசம், ஆவல் அனைத்தும் அந்த வைத்தியக் கல்லூரிக்குள்ளேயே அடங்கிவிட்டது!

வருடங்கள் ஓடி மறைந்தன. வைத்தியக் கல்லூரியின் ஐந்து வருஷப் படிப்பையும் பூர்த்தி செய்து பட்டத்துடன் வெளியில் வந்த பிறகுதான் காவேரி தன் கவனத்தை வெளியுலகின் மீது திருப்பினாள். தன் சபதத்தை நிறைவேற்றிவிட்ட பொழுதிலும் தன் அம்மாஞ்சியின் இன்பத் தாம்பத்திய வாழ்க்கைக்கு அவள் இடையூறாக நிற்க விரும்பவில்லை.

அன்று ஆஸ்பத்திரியில் தன் பயிற்சி அலுவலைக் கவனித்துக் கொண்டிருந்தாள் காவேரி. அச்சமயம் அலறும் குழந்தை யொன்றைத் தூக்கிக் கொண்டு ஓடி வந்த ஒரு கிழவி காவேரியிடம், "டாக்டரம்மா, இந்தக் குழந்தையைக் கொஞ்சம் கவனியுங்களேன்" என்று குழைவாக வேண்டினாள். புன்னகையுடன் திரும்பிய காவேரி அக் குழந்தைக்கு ஏற்பட்டிருந்த சிறு காயத்தைக் கவனித்துச் சிகிச்சை செய்து முடித்தாள். அவளது சிகிச்சையினால் வலி குறைந்த குழந்தையும் மெதுவாகத் தூங்கிவிட்டது.

குழந்தையின் குறுகுறுக்கும் முகத்தை விட்டு அகல மறுத்த தன் பார்வையைப் பலவந்தமாகத் திருப்பிய காவேரி, குழந்தையின் காயத்திற்கான காரணத்தைக் கிழவியிடம் கேட்கவே அக்கிழவி, யாரோ சொல்லி வைத்தாற் சொல்வதுபோல் மளமளவென்று அக்குழந்தையின் வரலாறு முழுவதையுமே சொல்லி விட்டாள்.

குழந்தைக்குத் தாய் இல்லை; தந்தை மட்டுமே சமீபத்தில் மாற்றலாகிக் குழந்தையுடன் சென்னைக்கு வந்திருக்கிறார். ஒரு பெண்ணின் உதவியில்லாத காரணத்தினால் அவர் குழந்தையை வளர்க்க மிகவும் கஷ்டப்படுகிறார். யாராவது குழந்தையை வளர்ப்பதாகச் சொன்னால் குழந்தையை அவர்களிடம் கொடுத்து வேண்டிய உதவிகளும் செய்யத் தயாராய் இருக்கிறார் என்பதுதான் அந்த வரலாறு.

காவேரி கிழவியைச் சாப்பிட்டு விட்டு வரும்படி அனுப்பி விட்டு அப்படியே ஆழ்ந்த யோசனையுடன் குழந்தை படுத்திருந்த கட்டிலின் அருகில் உட்கார்ந்து விட்டாள். அப்போது அவள் உள்ளத்தில் பல எண்ணங்கள் எழுந்தன.

அன்று மாலை ஆஸ்பத்திரி அலுவல்களை முடித்துக்கொண்டு, ஒரு முடிவுக்கு வந்து விட்ட காவேரி அந்தக் குழந்தை கண்ணனோடு அவன் தகப்பனாரைக் காணப் புறப்பட்டாள்.

வீட்டிற்குள் நுழையும் பொழுதே, "வா, காவேரி!" என்று அழைத்த மிகப் பழக்கமான குரலைக் கேட்டுத் திடுக்கிட்டு நிமிர்ந்தாள் காவேரி. காவேரிக்குத் தன் முன் உள்ள பொருள்கள் எல்லாம் சுழல்வதுபோலவும், அவைகளுடன் சேர்ந்து தானும் சுழல்வது போலவும் ஒரு பிரமை உண்டாயிற்று.

அந்தப் பிரமை தெளிந்து அவள் பார்த்தபோது அவள் முன் அவளுடைய அருமை அம்மாஞ்சிதான் நின்று கொண்டிருந்தான். அலங்கிய ரோப்புடனும், அடையாளம் காண முடியாமல் இளைத்திருந்த உருவத்துடனும் தன் முன் நிற்கும் அம்மாஞ்சியைப் பார்த்தவுடன் காவேரிக்குக் கரை புரண்ட துக்கம் உண்டாயிற்று. அவள் அம்மாஞ்சியின் அனுமதியை எதிர்பாராமலே அருகிலிருந்த நாற்காலியில் தள்ளாடிக் கொண்டு உட்கார்ந்து விட்டாள். அவளால் அப்போது எதுவுமே பேச முடியவில்லை.

ஆனால் ரகுபதி தானாகவே தன் வரலாற்றைப் பரபரப்புடன் சொல்லத் தொடங்கினான்:

"காவேரி! என்னை நீ மன்னிக்கவே மாட்டாய். உன் மன்னிப்பைக் கேட்கவும், பெறவும் அருகதை யற்றவன் நான். காவேரி! என்றைக்கு நான் உன் தூய்மையான அன்பை உதறி விட்டு கனினுவின் கையைப் பிடித்தேனோ, அன்றைக்கே அளவற்ற துன்பத்தையும் அனுபவிக்க ஆரம்பித்து விட்டேன். கனினுவின் அன்பு வெறும் பகட்டு. பிரமை என்பதை அறிய எனக்கு அதிக நாட்கள் செல்லவில்லை. கனினுவும் கலியாணத்திற்குப் பிறகு வைத்தியக் கல்லூரியில் சேர்ந்து படிக்கவே விரும்பினாள். ஆயினும் அவள் விருப்பத்திற்குக்

குறுக்காக வயிற்றில் குழந்தை ஜனித்து விடவே கோபமும் ஆத்திரமும் கொண்டு துடித்தாள். அதன் பிறகு என்னைக் காணவே பிடிக்காமல் வெறுத்தாள். குழந்தை பிறந்த பிறகு வைத்தியக் கல்லூரியில் சேர்ந்து விடலாம் என்று நான் அவளுக்குச் சமாதானம் சொன்னேன்.

"படித்தவள் என்ற அகம்பாவத்தால், நாகரிகம் கற்றுக் கொடுத்த படிப்பினையால் ஜனனி தன் குழந்தைக்குப் பால் கொடுக்கவும் மறந்து விட்டாள். அத்துடன் நிற்காமல், அவள் உடம்பு கொஞ்சம் தேறுவதற்குள்ளாகவே படிப்பின் பொருட்டு வெளியே புறப்பட்டும் விட்டாள். இதனால் ஏற்கெனவே துர்ப்பலமாக இருந்த அவளது உடல் நிலை மிகவும் சீர்கேடடைந்தது. கடைசியில் அது அவள் உயிருக்கே உலையாகவும் வந்து முடிந்தது.

"காவேரி நான் உன்னிடம் இறைஞ்சி வேண்டுவது இது ஒன்றுதான். தாயின் அன்பை இன்னதென்றறியாத என் குழந்தையை மட்டும் ஏற்றுக் கொள். உன் வளர்ப்பில் அவனை விடவேண்டும் என்ற ஆசையை அடக்க முடியாமல்தான் இன்று அவனையும், ஆயாவையும் உன்னிடம் அனுப்பினேன். என் குழந்தையை ஏற்றுக் கொள். மாதம் ஒரு முறை மட்டும் அவனைப் பார்ப்பதற்காக நான் உன் வீட்டில் நுழைவதற்கு அனுமதி கொடு" என்று தழுதழுத்த குரலில் வேண்டினான் ரகு.

தன் அகன்ற பெரிய விழிகளால் அம்மாஞ்சியின் முகத்தைக் கூர்ந்து நோக்கினாள் காவேரி. அவள் கண்களில் நீர் துளித்தது. அவள் தன் அம்மாஞ்சியை அன்போடு பார்த்து, "அம்மாஞ்சி, இன்னமும் நீங்கள் குழந்தை யுள்ளம் கொண்ட அம்மாஞ்சியாகவே தான் இருக்கிறீர்கள்! நான் மேற்கொண்டிருக்கும் வேலை எத்தகையது? இந்த வேலையுடன் நானே தனியாகக் குழந்தையின் முழுப் பொறுப்பையும் எப்படி ஏற்க முடியும்? இதை நீங்கள் கொஞ்சமும் யோசிக்காமல் பேசுகிறீர்களே?" என்று கேட்டு நிறுத்திய காவேரியின் முகத்தில் இப்போது குறும்புப் புன்னகை யொன்று மலர்ந்தது.

அவள் தன் கடைக் கண்ணால் அம்மாஞ்சியின் முக பாவத்தைக் கவனித்தபடியே, "அம்மாஞ்சி, நான் மட்டும் குழந்தையின் பொறுப்பை ஏற்று அவன் தாயாக ஆவது என்பதும், தாங்கள் மாதம் ஒரு முறை வந்து பார்த்துப் போவதாகச் சொல்லிப் பெற்ற தகப்பனின் பொறுப்பைத் தட்டிக் கழிக்க முயல்வதும் என்னிடம் நடக்காது. ஆகையால் அம்மாஞ்சி, நான் தீர்மானித்து விட்டேன். அப்பாவிடம் சொல்லி ஏற்பாடு செய்து நான் உங்கள் செல்வன் கண்ணனின் 'சித்தி'யாகவே ஆகி விடப் போகிறேன்" என்றாள். அவள் முகத்தில் என்றும் கண்டிராத மலர்ச்சி அப்பொழுது தாண்டவமாடியது.

திக்பிரமை யடைந்த ரகுபதி சிலை போல் நின்று விட்டான். அவனால் ஒரு வார்த்தையும் பேச முடியவில்லை. ஆயினும் அவனது கண்கள் ஆயிரக் கணக்கான பேச்சுக்கள் மூலம் அவளுக்குத் தன் நன்றியைத் தெரிவித்தது.

* * *

"காவேரி, என்ன இப்படி எல்லாவற்றையும் மறந்து உட்கார்ந்து விட்டாய்? 'டிஸ்பென்ஸரி'யில் டாக்டரம்மாளின் வருகைக்காக எத்தனை பேர் காத்துக் கொண்டிருக்கிறார்கள், தெரியுமா?" என்று கேட்டபடி அன்போடு காவேரியின் தோள்களைப் பற்றி மெல்ல அசைத்தான் ரகுபதி.

திடுக்கிட்டு எழுந்த காவேரி, இத்தனை நேரம் தன்னை மறந்து உட்கார்ந்து விட்டதை எண்ணி வெட்கியவளாய், அம்மாஞ்சியிடமிருந்து தாவிய குழந்தை கண்ணனை வாங்கிக் கொஞ்சினாள். பிறகு அவனை அவன் தாத்தாவிடம் விட்டு விட்டு 'டிஸ்பென்ஸரி'க்குப் புறப்பட்டாள்.




**ரவீந்திரநாத தாகூர்**

கூடும் பனி தாங்க மாட்டாமல், குளத்திலிருந்த தாமரை மலர்கள் யாவும் கருகிப் போயின. சுதாஸ் என்ற தோட்டக்காரனுடைய குளத்தில் மட்டும் ஒரு மலர் தப்பிப் பிழைத்தது.

அரண்மனைக்குக் கொண்டு போனால் நல்ல விலை போகும் என்று எடுத்துச் சென்றான். அரண்மனை வாசல்வரை போய் விட்டான். அந்தச் சமயத்தில் ஒரு செல்வச் சீமான் எதிர்ப்பட்டான். அவன் அந்த வெண்தாமரையின் அழகில் சொக்கிப் போனான்.

'இந்த அழகான மலரை நாமே வாங்கிக்கொண்டு போய், இன்று நம் ஊரில் எழுந்தருளியிருக்கும் புத்த பகவானின் திருவடி மலர்களில் சமர்ப்பிக்கலாம்' என்று நினைத்து, "இந்தப் புஷ்பத்தின் விலை என்னப்பா, தோட்டக்காரா?" என்று கேட்டான்.

சுதாஸ், ஒரு பொற் காசு கிடைத்தால் போதும் என நினைத்து விலை கூறினான். செல்வந்தனும் அவன் கேட்ட காசைக் கொடுக்கத் தன் பையை எடுத்தான். அந்த வேளை புத்த பகவானைத் தரிசனம் செய்வதற்காக மகாராஜாவும் அரண்மனையை விட்டுப் புறப்பட்டுக் கொண்டிருந்தார். அரண்மனை வாசலில், இந்த வெண் தாமரையைக் கண்டதும் அப்படியே மயங்கிப்போனார். 'ஆகா! இந்த மலரைப் புத்த பகவான் திருவடிகளில் சூட்ட வாங்கலாமே' என்று எண்ணினார். "இந்தப் புஷ்பத்தின் விலை என்னப்பா?" என்று கேட்டார்.

"ஒரு பொற் காசுக்கு, இந்த மலரை இவருக்கு விற்று விட்டேன்" என்றான் தோட்டக்காரன்.

"நான் பத்து பொற்காசு தருகிறேனப்பா! எனக்குக் கொடு" என்று அரசர் கேட்டார்.

"நான் இருபது தருகிறேன்" என்றான் வியாபாரி.

இப்படி இருவரும் அந்த மலருக்காகப் போட்டி யிட்டனர். மலரின் விலை உயர்ந்தது.

தோட்டக்காரன் சுதாஸ் ஒரு கணம் யோசித்தான்: 'இருவரும் இந்த மலரைப் புத்த பகவானுக்கு அர்ப்பணம் செய்யத்தானே போட்டி யிடுகின்றனர்! நானே இதைப் புத்த பகவானுக்குச் சூட்டி விட்டேனானால் எனக்கு எவ்வளவு ஐசுவரியம் கிடைக்கும்!'

இந்த எண்ணம் எழவே, சுதாஸ் இருவருக்கும் கைகூப்பி வணக்கம் செலுத்தி, "ஐயா! என்னை மன்னிக்க வேண்டும். நான் இந்த மலரை உங்கள் இருவரில் யாருக்கும் விற்கப் போவதில்லை!" என்றான்.

பிறகு புத்த பகவான் எழுந்தருளியிருந்த இடத்தை நோக்கி ஓடினான். அங்கு புத்த பகவான் சாந்த ஸ்வரூபியாய், முகத்தில் தெய்வீகக் களை வீச அமர்ந்திருந்தார்.

சுதாஸ் அவரைப் பார்த்து ஒரு கணம் அப்படியே திக்பிரமை பிடித்து நின்றான். பிறகு பகவானுடைய திருவடிகளில் சாஷ்டாங்கமாக விழுந்து வணங்கி, அவர் பாத கமலங்களில் தான் கொண்டு வந்த தாமரையை வைத்தான்.

பகவான், "அப்பா! உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டார்.

சுதாஸ் ஆவல் நிரம்பிய குரலில், "ஸ்வாமி, தங்கள் பாத தூளியைத் தவிர வேறு ஒன்றுமே வேண்டாம்" என்றான்!

— மொழி பெயர்ப்பு: எஸ். வி. எஸ்.

[இந்தக் கதையைச் சித்திரிக்கும் வர்ணப் படம் 102ம் பக்கத்தில் வெளியாகி யிருக்கிறது.]

# முதல் முழக்கம் செய்த வீரபாண்டியன்

பகீரதன்



பதினேழாம் நூற்றாண்டில் நம் பாரத நாடு அமைதி இழந்து தவித்துக் கொண்டிருந்தது. பிரிட்டிஷார் நம் நாட்டை அடிமை கொள்ளப் பல சூழ்ச்சிகள் செய்து வந்தனர். தேசத்தின் பல பகுதிகள் அவர்கள் கைக்கு மாறிவிட்டன. அன்னியரின் ஆதிக்கத்தை எதிர்ப்பதற்குப் பதில் அவர்களுக்குக் கையாளாகப் பல மன்னர்கள் உதவிசெய்து வந்தனர். நாட்டு மக்களோ செய்வதறியாது திகைத்துக் கொண்டிருந்தனர்.

ஒருநாள் காலை. வீரத்தின் விளை நிலமான தமிழகத்தில் அதுவரை தமிழகம் கண்டிராத ஒரு அவமானக் காட்சி, நீதியின் பேரால் ஒரு அநீதி நாடகம் நடந்தது.

பல கொடுமைகள் செய்த வெள்ளைக்காரத் தளபதி பானர்மென் நீதிபதியாக அமர்ந்திருக்கிறான். நீதித்தெய்வம் அவனைக் கண்டு அங்கு வர அஞ்சி விலகி இருந்தது. அவனைச் சுற்றித் தமிழகத்தின் புல்லுருவிகளான, சுயநலமிகளான சில பாளையக்காரர்கள் அமர்ந்திருக்கின்றனர். அடிமை வாழ்வை எதிர்த்து வீரப் போர் புரிந்த தமிழன் கையில் விலங்குடன் கைதிக் கூண்டில் கம்பீரமாக நிற்கிறான். அவன் நிமிர்ந்த பார்வையும், ஒளிவீசும் கண்களையும், வீரத்தின் திரு உருவத்தையும் காண்பதற்கு எல்லாரும் கூசுகின்றனர். அந்த வீரத் தமிழ் மகனின் திருமுகத்தை நிமிர்ந்து பார்க்கப் பயந்து அவனுக்குத் தூக்குத் தண்டனை விதிக்கிறான் நீதிபதியாக நடித்த கொடுங்கோலன் பானர்மென்.

தருமம் தழைத்த தமிழகத்தில் தருமம் மடிந்தது; வீரம் வீழ்ந்தது; அன்பு அழிந்தது. மனித உணர்ச்சிபெற்ற தமிழ் மக்கள் மாக்களாகி இந்தக் காட்சியைக் கண் கொண்டு பார்த்து மருண்டனர்.

தமிழகத்தின் சரித்திரம் கண்டறியாத துரோகம் நிகழ்ந்து விட்டது. அடிமைத்தனம் என்ற வார்த்தைக்கே இடமில்லாமல் அரசு செலுத்தி வந்த தமிழகத்தில் அடிமைத்தனத்துக்கு அஸ்திவாரமிட்டனர் சில தேசத் துரோகிகள். சுதந்திரத் தமிழ் நாட்டின் மானம் காக்க அரும் போர் புரிந்த வீரத் தமிழனுக்குத் தூக்குத் தண்டனை விதித்து விட்டனர் அன்னியர்களான பிரிட்டிஷார். அந்த வீரத் தமிழன்தான் இந்திய சுதந்திரப் போரை முதன் முதலில் துவக்கி வைத்து முதல் முழக்கம் செய்த வீர பாண்டியன்.

** ** **

சேர சோழ பாண்டிய மன்னர்களின் ஆட்சிக்குப் பிறகு ஆளவந்தாராக வந்த மதுரை நாயக்கர் வம்சத்தாரால் தமிழ் நாடு பல பாளையங்களாகப் பிரிக்கப்பட்டுக் கிடந்தது. ஒவ்வொரு பாளையத்துக்கும் ஒரு பாளையக்காரன் இருந்தான். அவர்களில் ஒரு பாளையக்காரனாக இருந்து அரசாண்டவன்தான் கட்டபொம்மன்.

கட்டபொம்மனின் முன்னோர்களில் ஒருவனான ஆதி கட்டபொம்மன் ஒரு நாள் வீரர்கள் புடை சூழக் காட்டுக்கு வேட்டையாடச் சென்றான். அங்கு கட்டபொம்மனின் ஏழு வேட்டை நாய்களும் ஒரு முயலைத் துரத்திக் கொண்டு பிடிக்கச் சென்றன. வேட்டை நாயைக் கண்டு வெருண்டு ஓடிய முயல், ஒரு குறிப்பிட்ட இடத்தை அடைந்ததும் நின்றது. உடம்பை ஒரு தரம் உலுக்கிக் கொண்டு அந்த வேட்டை நாய்களைத் தன்னந் தனியே எதிர்க்கத் தொடங்கியது. ஏழு நாய்களும் முயலுக்குப் பயந்து திரும்பின. இந்த அதிசயத்தைக் கண்டான் ஆதி கட்ட பொம்மன். ஒரு சாதாரண முயலுக்கு வேட்டை நாய்களை எதிர்த்து விரட்டும் வீரத்தைக் கொடுத்த சக்தி அந்த நிலத்துக்கு இருப்பதை உணர்ந்தான். அந்த இடத்திலேயே கோட்டை கொத்தளங்களுடன் கூடிய ஒரு நகரை அமைத்தான். அந்த நகருக்குத் தன் பாட்டனார் பாஞ்சாலனின் ஞாபகார்த்தமாகப் பாஞ்சாலங் குறிச்சி எனப் பெயர் சூட்டினான்.

அந்த அரச பரம்பரையில் நாற்பத்து ஏழாவது பாளையக்காரனாக வந்தவன் நம் சரித்திர நாயகன் வீரபாண்டியக் கட்ட பொம்மன். 1760-ம் ஆண்டு ஜனவரி மாதம் மூன்றாம் தேதி ஜக்வீர பாண்டியக் கட்ட பொம்மனுக்கும் ஆறுமுகத் தம்மாளுக்கும் பிறந்த அருமைக் குமாரன்தான் வீரபாண்டியன். குமாரசாமி, துரைசிங்கம் என்ற இரு தம்பிகளுடன் நாளொரு மேனியும் பொழுதொரு வண்ணமுமாக வளர்ந்து காளைப் பருவத்தை அடைந்தான் கட்ட பொம்மன். வீரசக்கம்மாள் என்ற மங்கையை மணந்து இல்வாழ்க்கையில் ஈடுபட்டான். தம்முடைய முப்பதாவது வயதில் பாஞ்சாலங் குறிச்சியின் மன்னனானான்.

வீரபாண்டியனைத் தவிர மற்ற பாளையக்காரர்கள் எல்லாரும் யார் தங்களை அடிமைப் படுத்தினாலும் அவர்களுக்கு அடங்கி ஒடுங்கி நடந்தனர். அவர்களின் கட்டளைகளுக்குக் கீழ்ப்படிந்து கைகட்டி வாய் புதைத்துக் கப்பம் செலுத்தி வந்தனர்.

வீரபாண்டியக் கட்ட பொம்மனோ யாருக்கும் கப்பம் கட்டவில்லை. கைகட்டி வாய்புதைத்து நிற்கவில்லை. தமிழகத்தின் வீரத்தைக் காக்கும் சுதந்திர மன்னனாகவே ஆட்சி புரிந்து வந்தான். தமிழ் மக்களின் மானத்தைக் காத்து நின்றான்.

வந்த விருந்தினர்களை வா என்றழைத்து உபசரித்த தமிழ் நாட்டில் வியாபாரிகளாக வந்த வெள்ளையர்கள் நாட்டைச் சூறையாட முயன்றனர். பாரத நாட்டில் சிதறிக் கிடந்த சிற்றரசர்கள் பலரையும் தங்களுக்குக் கப்பம் கட்டும் அடிமைகளாக்கிய பிரிட்டிஷார் பாஞ்சாலங் குறிச்சியைச் சுற்றிச் சுற்றி வட்டமிட்டனர். வீர பாண்டியக் கட்ட பொம்மனை அடிமையாக்கப் படாதபாடு பட்டு வந்தனர்.

பரதேசிகளாக வந்த பரங்கிக் கூட்டத்துக்குப் பணிந்தால், உடல் வளர்க்கவந்த உலுத்தர் கூட்டம் ஊரையாளும் உரிமை பெற்று விடும் என்பதை நன்கு உணர்ந்திருந்தான் வீரபாண்டியன். முயலுக்கு வீரமூட்டிய மண்ணின் மன்னன் அல்லவா அவன்! தலை வணங்குவானா!

** ** **

தங்கள் முயற்சிகள் பலிக்காமல் போகவே பாஞ்சாலங் குறிச்சிக்கு எதிராக, பல பாளையக்காரர்களைத் தயார் படுத்தினர் பரங்கியர். ஏழைகளுக்கு லஞ்சம் கொடுத்து அவர்களையும் கெடுத்தனர்.

கிழக்கிந்தியக் கம்பெனியாரால் கலெக்டராக நியமிக்கப்பெற்ற ஜாக்ஸன் என்ற வெள்ளைக்காரன் வீர பாண்டியனுடன் வீண் சண்டை செய்வதற்குச் சூழ்ச்சி செய்தான். அந்தச் சமயத்தில் பாஞ்சாலங் குறிச்சி மன்னனுக்குப் பகைவர்களாக

இருக்கும்படி மற்ற பாளையக்காரர்களையும் மாற்றிவிட்டான். ஐயோ! தமிழகமே! எத்தனையோ ஆயிரம் மைல்களுக்கு அப்பால் இருந்து வந்தவன் உன்னை இப்படிச் சின்னாபின்னப் படுத்தும்படி இடம் கொடுத்து விட்டாயே என்று உணர்ச்சியுள்ள மக்கள் அழுது கண்ணீர் வடிக்கும்படி தமிழகம் மாறிவிட்டது.

"தன் இருப்பிடம் வந்து தன்னைத் தனியே கண்டு பேச வேண்டும்" என்று வீர பாண்டியனுக்குச் செய்தி அனுப்பினான் வெள்ளைக்கார ஜாக்ஸன். என் செய்யுமா! வீரபாண்டியனை வஞ்சகமாக வரவழைத்துச் சிறை பிடிக்கத்தான்.

அவன் வஞ்சக எண்ணத்தைத் தெரிந்து கொண்ட வாள் போர் வீரன், அரசியல் ஞானி, வீர பாண்டியன், பரிவாரங்கள் புடை சூழப் பல்லக்கில் வந்து "காண்பதாக"ப் பதில் சொல்லி பதில் எழுதினான்.

பரிவாரங்கள் சூழ வரும் வீரபாண்டியனைப் பார்க்க ஜாக்ஸன் விரும்பவில்லை. கட்ட பொம்மனும் தனியாகச் சென்று கலெக்டரைப் பார்க்க எண்ணவில்லை.

கடைசியாக நாட்டின் நலம் கருதி, நாட்டு மக்கள் வாழ்வை வேண்டிக் கலெக்டரைப் பார்க்கத் தீர்மானித்தான் தீரன் கட்டபொம்மன். தளபதி முன் செல்ல தம்பிமார்கள் சூழ்ந்து வரப் பல்லக்கில் ஏறிப் பரிவாரங்களுடன் சென்றான்.

தக்க காவலர்கள் சூழத் தன்னைக் காண வரும் கட்ட பொம்மனை மாளிகையின் மேல் மாடியில் இருந்தபடி பார்த்தான் ஜாக்ஸன். தன் சதித் திட்டத்தை நிறைவேற்றுவதற்காகத் 'தனியே வந்தால் தான் பார்க்க முடியும்' என்று சொல்லி அனுப்பினான். தமிழ் நாட்டின் அமைதியை வேண்டி அதற்கும் இணங்கி கலெக்டரைக் காண இசைந்தான் கட்டபொம்மன்.

இருவருக்கும் பேச்சு ஆரம்பமாகி வாக்கு வாதம் வலுத்தது. பாளையங்குறிச்சி அரசனின் ஆணித்தரமான பேச்சும், அவன் உள்ள உறுதியும் வஞ்சக ஜாக்ஸனின் வாதத்தைத் தவிடு பொடியாக்கின.

முடிவில் "உம்மைச் சிறைப் பிடித்திருக்கிறேன். நீர் இந்தக் கட்டடத்துக்கு வெளியில் கால் வைக்கக் கூடாது" என்று அகம்பாவத்துடன் ஆணையிட்டான்.

"பாளையப்பட்டு மன்னன் பரதேசியிடம் சிறைப்படுவதா! அது மானங்கெட்ட செய்கை" என்று வீராவேசமாகக் கூறி, கட்டடத்தை விட்டு வெளியேற முயன்றான் வீரன் கட்டபொம்மன்.

ஜாக்ஸனின் சதித் திட்டப்படி அவன் காவலர்கள் பாண்டியன் மீது விழுந்து கட்டிப் பிடிக்க முயன்றனர். தன்மீது விழுந்த மல்லர்களைத் தள்ளிக் காலால் உதைத்தான். வாளெடுத்த சிப்பாய்களை மோதி மிதித்தான்.

அங்கிருந்து கடந்து அப்பால் செல்ல முயன்றபோது அவனைக் கட்டிப் பிடிக்க முயன்றான் தளபதி கிளார்க். வீரபாண்டியனின் வாள் 'சுய்' 'சுய்' 'சுய்' என்று சுழன்றது. ஒரு கணத்தில் தளபதி கிளார்க்கின் தலை தமிழ்நாட்டின் வீர மன்னனின் தண்டனிட்டு விழுந்து உருண்டது.

அப்புறம் கேட்பானேன்! சினங்கொண் டெழுந்த வெள்ளையனின் வீரர்களுக்கும் கட்டபொம்மனின் காவலர்களுக்கும் கை கலப்பு ஏற்பட்டது. கம்புகள் சுழன்றன. வாள்களும் வேல்களும் 'டணர்' 'டணர்' என்று மோதின. போர்முனையில் வெற்றியை யன்றி வேறொன்றையும் கண்டறியாத வீரத் தமிழர்களின் வாள் வீச்சுக்கு முன்னால் பரங்கிதான் என்ன செய்ய முடியும்! இந்தச் சரித்திர முக்கியத்துவம் வாய்ந்த வீரப் போரில் வீரபாண்டியன் தம்பி ஊமைத்துரையின் வாள் சுழன்றதைக் கவிகள்தான் பாடவேண்டும்.

வெள்ளையர்களை எதிர்த்துப் போர்புரிந்த முதல் முழக்கத்திலேயே வெற்றி மாலை சூடினர் வீரத் தமிழர்கள். வீரமுழக்கத்துடன் பாஞ்சாலங் குறிச்சிக்குச் சென்றான் வீரபாண்டியக் கட்டபொம்மன்.

ஜாக்ஸனுக்குப் பின்னும் லூஷிங்டன் என்பவன் கலெக்டரானான். அவன் காலத்தில் மேஜர் பானர்மேன் தலைமையில் ஏராளமான வீரர்கள் திரண்டு எழுந்து பாஞ்சாலங் குறிச்சிக் கோட்டையைத் திடீரென்று தாக்க ஆரம்பித்தனர். கதிரவன் மறைந்த கார்இருள் வேளையில் யாருக்கும் தெரியாமல் திருடர்கள் போல் வந்த அன்னியர்களைக் கண்டு வீரபாண்டியன் அஞ்சவில்லை. அவர்களிடம் இருந்த பீரங்கி முதலிய பயங்கரப் போர்க் கருவிகளைக் கண்டும் கலங்கவில்லை. தமிழ்நாட்டின் மானம்தான் பெரிது என்று நினைத்தான்.

தன் குலதெய்வமாகிய தேவி ஜக்கம்மாவைத் தேடிச் சரண் அடைந்தான். தேவியின் சன்னிதியில் தமிழ்நாட்டைக் காப்பாற்றத் தனக்கும் பலம் அருள வேண்டினான். போருக்குக் கிளம்பினான்.

ஜயபேரிகை முழங்கிற்று. கொம்புகள் ஊதின. ஆயிரமாயிரம் வேல்களும் வாள்களும் 'பளிச்' 'பளிச்' சென்று மின்னின. 'டுமீல்' 'டுமீல்' என்று பீரங்கிகள் முழங்கின. வெள்ளை வீரர்கள் நெஞ்சம் கலங்கினர்.

பாஞ்சாலங் குறிச்சியின் கோட்டை மதிலைப் பகைவர்களின் பீரங்கி வெடிகளால் சிதையுற ஆரம்பித்தது. தெற்குப்புற வாசலைத் தகர்த்துக் கொண்டு காலின்ஸ் என்ற தளகர்த்தன் கோட்டைக்குள் நுழைய முயன்றான். அடுத்த கணம் அவன் மார்பில் வீரபாண்டியன் வீரர்களில் ஒருவனான வெள்ளைத்தேவனின் கூர் வேல் பாய்ந்தது.

அதர்மம் வீழ்வது போல் 'ஹா!' வென்று அலறி வீழ்ந்தான் தளபதி காலின்ஸ்.

இதற்குப் பிறகு எதிரிகள் பல போர்க் கருவிகளுடன் வந்து விட்டதால் வீரபாண்டியன் பாஞ்சாலங் குறிச்சிக் கோட்டையை விட்டு வெளியேறினான்.

இந்தச் சமயத்தில் நடக்கக் கூடாதது நடந்து விட்டது. நிகழக் கூடாத சம்பவம் நிகழ்ந்துவிட்டது. மண்ணாசை வெறி பிடித்த சுயநலவஞ்சகன், புதுக்கோட்டை பாளையக்காரன் துரோகம் செய்து விட்டான். ஈடு இணையற்ற சுதந்திர வீரனான வீரபாண்டியனை அன்னிய வெள்ளையனுக்குக் காட்டிக் கொடுத்து விட்டான்.

தமிழகத்தின் மானம் காத்த மாவீரன்; பயம் என்பதை இன்னதென்று அறியாத பாளையக்காரன்; வெற்றி முகத்தில் துள்ளி வந்த வீரபாண்டியனை நட்ட நடுநிசியில் கள்ளர்களும் அஞ்சும் கும்மிருட்டில் கயமைத்தனம் நிறைந்த பிரிட்டிஷ் ராஜ்யத்தார் கைது செய்து விட்டனர்.

பிறகுதான் ஆரம்பத்தில் நடந்த வீரரின் நாடகம் நடந்தது. சொந்த நாட்டு மன்னனைப் பிறர் ஆளாமல் தடுத்ததற்காக, தமிழகத்தின் சுதந்திரத்தைக் காப்பாற்ற முயன்றதற்காக, நாட்டு மக்களின் நல் வாழ்வுக்குப் பாடுபட்டதற்காகப் பட்டப் பகலில் தூக்கில் போடத் தீர்ப்பளித்தனர் நீதியறியாத, நியாயம் வழங்கத் தெரியாத, கேள்வியற்ற பிரிட்டிஷார்.

** ** **

1799-ம் வருஷம் அக்டோபர் 16-ந் தேதி பாஞ்சாலங்குறிச்சி பாளையக்காரனை, தமிழகத்தின் வீரம் எல்லாம் ஒருருவாய் வந்த உத்தமனை, வீர பாண்டியக் கட்டபொம்மனைக் கொல்லுவதற்கு என்றே வளர்ந்த கயத்தாறு புளியமரத்துக்குக் கையில் விலங்கைப் பூட்டிக் கால் நடையாக அழைத்துச் சென்றனர். வழியெல்லாம் நின்று கொண்டிருந்த மக்கள் ஆயுதம் தாங்கும் உரிமை இழந்து போய் அடிமைகளான மக்கள் கண்ணீர் விட்டுக் கலங்கினர். கடைசி முறையாகத் தங்கள் தலைவனுக்குத் தலைவணங்கி மரியாதை செய்தனர். வீரபாண்டியனைக் காட்டிக் கொடுத்த துரோகிகள் பதுமைகள் போல் தலை குனிந்து வெட்கி நின்றனர்.

தூக்கு மரத்தை அணுகிய வீர பாண்டியன் அங்கிருந்த நாற்காலியின்மீது கம்பீரமாக ஏறி நின்றான். அந்த உத்தமனின் தலைக்குமேல் உயிரைக் குடிக்கும் பாம்பு போலத் தூக்குக் கயிறு பயங்கரமாகத் தொங்கிக் கொண்டிருந்தது.

கட்ட பொம்மனின் கண்கள் ஒருமுறை சுற்றிச் சுழன்றன. கண்களை அகல விரித்துத் தாய்த் திருநாட்டை, வீரத் தமிழகத்தைப் பார்த்தான். அன்பு நிறைந்த தமிழ்ப் பெரு மக்களை ஆவலுடன் பார்த்தான்.

தலைக்கு மேலே தொங்கிக் கொண்டிருந்த தூக்குக் கயிற்றைப் பார்த்தான். புன்முறுவல் பூத்தான். வந்தவர்களுக்கு எல்லாம் வரையாது வழங்கிய வள்ளல் கரத்தைத் தூக்கினான். எத்தனை எத்தனையோ எதிரிகளை வெட்டி வீழ்த்திய இடது கரத்தை உயர்த்தினான். தூக்குக் கயிற்றைத் தாவிப்பிடித்துக் கழுத்தில் மாட்டிக் கொண்டான்! இந்தியச் சுதந்திரப் போரை ஆரம்பித்து முதல் முழக்கம் செய்த வீர பாண்டியன் தமிழ் நாட்டிலிருந்து விடுதலை பெற்றுக் கொண்டான்.

அன்று அவன் பூத உடல் அழிந்து விட்டது உண்மைதான். அவன் புகழ் உடம்பு அழியுமா! இல்லை, அதை அழிக்கத்தான் முடியுமா! சுதந்திர இந்தியச் சரித்திரம் வீர பாண்டியனின் சரித்திரத்திலிருந்துதானே ஆரம்பமாகிறது!

கட்டபொம்மனைத் தூக்கிலிட்ட கயத்தாற்றில் தமிழகத்தின் வழக்கப்படி வீரக்கல் நாட்டி விழா கொண்டாடினர்கள் தமிழ் மக்கள். இன்றும் அந்தப் பக்கம் போகும் தமிழ் மக்கள் வீர பாண்டியனின் நினைவுக்கு அறிகுறியாக ஒரு கல் எடுத்துப் போட்டு வணங்குவதைக் காணலாம்.

வீர பாண்டியனின் வீரத்தையும் அவன் வாழ்க்கையையும் இந்தத் தீபாவளித் திருநாளில் நினைவூட்டிக் கொள்வதின் மூலம் நாம் வீரத்தைப் போற்றி வளர்த்தவர்கள் ஆவோம்; பெறற்கரிய சுதந்திரத்தைப் பெறுவதற்கு முதல் முழக்கம் செய்த வீரனுக்கு நன்றி செலுத்தியவர்களாவோம்.

** ** **

வீர பாண்டியனின் தியாக வாழ்க்கையைக் கண்ணைக் கவரும் சித்திரத்தில் தீட்டி யிருக்கிறார் ஓவியர் சந்திரா. அந்தப் பேசும் சித்திரங்களை, அற்புத ஓவியங்களை இந்த மலரில் 173 முதல் 176 வரையிலுள்ள நான்கு பக்கங்களிலும் காணலாம்.

★ கவிராஜ பண்டிதர் ஜெகவீர பாண்டியனார் இயற்றியுள்ள "வீர பாண்டியம்" என்ற காவிய நூலை ஆதாரமாகக் கொண்டது.

      

## அட்டைப்பட விளக்கம்

**டாண்! டாண்!! டாண்!!!**

கோவில் ஆலாட்சி மணி முழங்கியது: அதன் சுநாதம் நான்கு ரத வீதிகளிலும் ரம்யமாக எதிரொலித்தது.

ஊரிலுள்ளவர்கள் எல்லாம், 'பூஜா காலம் வந்து விட்டது; தீபாராதனை நடக்கப் போகிறது' என்று கோவிலுக்குப் புறப்பட்டார்கள்.

அந்தப் பெண், 'இத்தனை நாழியாகி விட்டதா?' என்று நினைத்து வேகமாக நந்தவனத்துக்குப் பூப்பறிக்கச் சென்றாள். அங்கே நாக லிங்க மரம் கண்ணைப் பறிக்கும் செப்பு இதழ்களுடன் பூத்துக் குலுங்கி நின்றது. மலரின் நறு மணம் நாற்புறமும் வீசிக் கமழ்ந்து கொண்டிருந்தது. அதன் அருகே சென்று, அந்த மலரைப் பறிக்கக் கையையும் வைத்து விட்டாள். ஆனால் அவளால் பறிக்க முடியவில்லை. அப்படியே நின்று விட்டாள்! அந்த நாகலிங்கப் புஷ்பத்திலிருந்த லிங்கத்தைக் கண்டவுடன் அவள் உள்ளத்தில் சிவபெருமானே எழுந்தருளி விட்டார். அந்த உள்ளம் வானமும் வையமும் அடங்கப் பரவியது! பரவிய இடமெல்லாம் சிவபெருமான் அடைத்து நின்றார். அந்தக் காட்சியைக் கண்டு அவள் நிலை கொள்ளாத ஆனந்த முற்றாள்.

**தேனுறு கொன்றைச் சடைக்கணிந்த சிவபெருமான்**
**ஊனுடு நாடிவந்துள் புகுந்தான் உலகர்முன்னே**
**நானுடு பாடிநின்று ஓலமிட நடம் பயிலும்**
**வானுடைக் கோவுக்கே பூவல்லி கொய்யாமோ!**

சிவபெருமான் சில ஊர்களில் சோமாஸ்கந்த மூர்த்தியாகவும், சில ஊர்களில் வைத்தீஸ்வரராகவும், சில ஊர்களில் தாயுமானவராகவும் எழுந்தருளியிருக்கிறார். ஆனால் எல்லா ஊர்க் கோவில்களிலும் மூலவராக விளங்குவது சிவலிங்கமே. சிவலிங்கத்தைத் தரிசித்த மாத்திரத்திலேயே அந்த அந்த மூர்த்திகளின் உருவம் மனத்தில் தோன்றிப் பக்தர்களைப் பரவசப்படுத்தும். இதுவே தமிழ் நாட்டுச் சிவபக்த பரம்பரையின் பண்பாடு.

அம்முறையிலேயே, இந்தப் பெண் மணிக்கு நாகலிங்கப் புஷ்பத்திலுள்ள லிங்கத்தைப் பார்த்ததும் சிவபெருமான் தன்னை நாடி வந்து உள் புகுந்ததாகவும், உள்ளத்தில் ஆனந்த நடம் பயின்றதாகவும் தோன்றுகிறது.

மாணிக்கவாசகரின் தமிழ்ப்பாடல் எப்படிப் பாடப் பாட நாவும் உள்ளமும் இனிக்கிறதோ அவ்வாறே ஓவியர் மணியத்தின் அட்டைப் படச் சித்திரமும் பார்க்கப் பார்க்கப் பேருவகை பயக்கும் சித்திரமாக அமைந்திருக்கிறது.

# சித்திரப் பூஞ்சோலை

ஒரு பூஞ்சோலைக்குள் நுழைந்து விட்டால் மல்லிகையும் ரோஜாவும் பாரிஜாதமும் பன்னீரும் அரளியும் ஆம்பலும் ஒவ்வொரு திசையிலிருந்து மணம் வீசி நம்மைத் திக்குமுக்காடச் செய்யும். ஆனால் எந்த மலரின்—மணம் எந்தத் திசையிலிருந்து வீசுகிறது என்பது சற்று நிதானித்துப் பார்த்துத்தான் தெரிந்து கொள்ளவேண்டும். இன்னும் சில மலர்கள் கண்ணுக்குக் கவர்ச்சியான வர்ண பேதங்களுடன் விளங்கும். அவற்றிலிருந்து வரும் மணமும் சுமாராக இருக்கும். ஆனால் அதன் பெயர், முதலியன தோட்டக்காரனைக் கேட்டுத்தான் தெரிந்துகொள்ள வேண்டியிருக்கும். நேயர்களுக்கு அவ்விதம் கேட்டுத் தெரிந்துகொள்ள வேண்டிய தொந்தரவு வைக்காமல் நாமே நமது சித்திரப் பூஞ்சோலையில் பூத்துக் குலுங்கும் மலர்களின் பெயர் முதலிய விவரங்களை ஆங்காங்கு குறிப்பிட்டிருக்கிறோம். அப்படி விளக்கப்படாத சில மலர்களைப் பற்றி இங்கே கூறுகிறோம்.

**கனவுச் சித்திரம்** என்ற சந்திராவின் படத்தைப் பாருங்கள். பாகவதத்தில் வரும் கதையை அடிப்படையாகக் கொண்டது. பாணன் என்ற சிவபக்தி மிக்க அரசனின் புதல்வி உஷை ஒருநாள் கனவில் ஒரு அரசிளங் குமாரனைக் கண்டு காதல் கொண்டாள். அதை அறிந்த அவளுடைய தோழி சித்ரலேகை, "உன் காதலன் எப்படி இருப்பான் என்று கூறு. நான் அவனை எப்படியாவது உன்னிடம் சேர்ப்பிக்கிறேன்" என்றாள். பேதை உஷை அவனுடைய அழகையும் அலங்காரத்தையும் வர்ணிக்க இயலாமல் தவித்தாள். இதைக் கண்ட சித்ரலேகை, தேசத்திலிருந்த ராஜகுமாரர்களின் உருவங்களை யெல்லாம் எழுதிக் காண்பித்தாள். அதற்கெல்லாம், 'இவன் இல்லை, இவன் இல்லை' என்றே சொல்லி வந்தாள். கடைசியில் அநிருத்தனின் உருவத்தை எழுதிக் காண்பித்தாள். 'ஆம், இவனே! இவனே என் உள்ளம் கவர்ந்த கள்வன்!' என்று சொல்லி அவள் சித்திரத்தை வாங்கிப் பார்த்தாள். இந்த இனிய சம்பவத்தைச் சந்திரா தீட்டியிருக்கிறார்.

ஸ்ரீ கனுதேசாயின், **'கிராத வேடரோடு விஜய யுத்தம்'** என்ற தலைப்புக் கொண்ட படம் மகா பாரதத்திலிருந்து எடுக்கப்பட்ட ஒரு காட்சியாகும்.

அர்ஜுனன் பாசுபத அஸ்திரத்துக்காகக் கானகத்துக்கு ஏகிச் சிவபெருமானைக் கருதிக் கடும் தவம் புரிந்தான். அந்தத் தவத்தைக் கண்டு மெச்சிய கண்ணுதலும் பார்வதி தேவியும் வேடுவனாகவும் வேடச்சியாகவும் வேஷம் தரித்து, அர்ஜுனன் தவம் புரிந்த இடத்துக்கு வருகிறார்கள். அங்கே ஒரு காட்டுப் பன்றியின்மீது ஒரே சமயத்தில் அர்ஜுனனும், சிவபெருமானும் வேல் எய்து கொல்கின்றனர். பின்னர் அந்தப் பன்றி யாருக்கு உரிமை என்று பலப் பரீட்சை நடக்கிறது.

சிவபெருமானும் பார்வதி தேவியும் வேடுவக் கோலத்தில் வந்து வேல் எய்த நிலையை, பார்ப்பவர்கள் உள்ளத்தையும் ஒரு உலுக்கு உலுக்கும் வகையில் வீரக் காட்சியாக வரைந்திருக்கிறார் ஸ்ரீ கனுதேசாய்.

**வீர வணக்கம்** என்ற தலைப்பில் சரவணன் எழுதியுள்ள படத்தைப் பார்க்கும்போது நமக்குப் பழங் காலத் தமிழ் அரசர்கள் போர்க்களம் சென்று வெற்றியோடு திரும்பி வந்தவுடன் வெற்றி வாகைசூடி மகிழும் வீர மங்கையர்களின் நினைவு வருகிறது. அந்த வீரத் தமிழ்ப் பெண்குலம் நீடூழி வாழ்க!

பூர்ண அவதான என்னும் வணிகர் தலைவன் கடல் கடந்து சென்று பொருள் திரட்டுவதற்காகப் புறப்படுகிறான். அவன் புறப்படும்போது மேல் மாடங்களில் மங்கல வாத்தியங்கள் முழங்குகின்றன. அவன் புறப்படும் காட்சியை வியப்புடன் பார்க்கிறாள் அவனை விரும்பும்மங்கை. நடுக் கடலில் புயல் உருவாகிறது. கடல் நாகங்களும் மீன்களும் கப்பலைத் தாக்குகின்றன. கப்பல் தலைவன் கப்பலைக் காப்பாற்றத் தெய்வத்தைநோக்கிப் பிரார்த்திக்கிறான். அஜந்தா குகைச்சுவர்களில் உள்ள இதுபோன்ற பல அமர ஓவியங்களை இன்றும் உலகம் கண்டு வியக்கிறது.

மணியம்.






மேலே:—மாதிரியங்காலு என்னும் புராதன நகரத்தில் கண்டெடுத்து இப்போது அனுராதபுரத்துக் கண்காட்சியில் வைத்திருக்கும் அமர ஓவியங்களில் சில.

(1) தேவர்களும் முனிவர்களும், (2) மகா போதி விருட்சத்தின் அடியில் புத்த பகவான்.
(3) கந்தர்வ கானமும் புத்த பிக்ஷுக்களும்.

கீழே:—கண்டிக்கு அருகே உள்ள பௌத்த விகாரத்துச் சுவர்களில் தீட்டியிருக்கும் புத்தர் ஜாதகக் கதை ஓவியங்கள்.

கல்கி தீபாவளி மலர் 1952




பொலன்னறுவை என்னும் புராதன புலஸ்திய நகரத்தின் வடக்கு எல்லையில் அமைந்திருக்கும் புத்தர் கோயில் சுவர்களில் அஜந்தா பாணியில் அமைந்த அற்புத சித்திரங்கள் சிதைந்து காணப்படுகின்றன.

1. புத்த பகவான் ஜனனமாகும் நேரம் நெருங்கி விட்டது. தேவர்களும் முனிவர்களும் அஞ்சலி செய்ய வருகிறார்கள்.

2. காதலனின் கோபமும் காதலியின் தாபமும்.

கல்கி தீபாவளி மலர் 1952

1. நாகராஜனின் குமாரி இரந்தி என்பவள் தன் காதலனை எல்லைக் களிப்போடு ஊஞ்சல் ஆடிக் கொண்டிருக்கிறாள். அப்போது அவன் காதலனின் தூதன் அவளிடமிருந்து ஏதோ செய்தி கொண்டு வந்து கூறுகிறான்.

2. நாகராஜனும் அவன் குமாரன் வருணனும் இரந்தியின் மணத்தைப் பற்றிப் பேசி முடிவு செய்கின்றனர்.

இதுபோன்ற அற்புத வர்ண ஓவியங்கள் அஜந்தா குகைச் சுவர்களிலும், இலங்கைத் தீவில் இருக்கும் அநுராதபுரம், பொலன்னருவை புத்த விகாரச் சுவர்களிலும் சிதிலமாகிக் காணப்படுகின்றன. அவற்றில் சில சித்திரங்களை நமது சைத்ரிகர் மணியம் நேரில் சென்று பார்த்து அழிந்து போன பகுதிகளைப் பூர்த்தி செய்து "அமர ஓவியங்கள்" என்ற தலைப்பில் தந்துள்ளார்.






அப்போதுதான் கிழக்கு வெளுக்கத் தொடங்கியது. பாறைகளின் மீது படபடவென்று விழுந்த மழைத் துளிகள், பள்ளத்தாக்கின் வழியாகச் சலசலவென்று ஓடும் நதியில் வேகமாகப் பாய்ந்து கொண்டிருந்தன.

அப்போது பாறை யொன்றின்மீது உட்கார்ந்திருந்த வயோதிகரான பரமேசுவரர் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். எனினும், மௌனமாக உட்கார்ந்திருக்கும் அந்தக் கிழவரின் மனம் அப்போது பெரும் கொந்தளிப்பினால் அல்லல்பட்டுக் கொண்டிருக்கிறது என்பதை யாரும் அறிந்து கொண்டிருக்க முடியாது; சுவாதீன மற்று முறுக்கிக் கொண்டுள்ள கை விரல்களுடன் உட்கார்ந்திருக்கும் அந்தக் கிழவர், இருபது வருஷங்களுக்கு முன் மிகப் பிரசித்தி பெற்ற சிற்ப நிபுணராக விளங்கினார் என்பதையும் யாரும் உணர்ந்து கொண்டிருக்க முடியாது.

அந்தக் காலத்தில் எல்லோரும் அவரது சிற்பங்களையே நாடி வந்தார்கள். எனவே அவருக்கு ஏராளமான வருமானம் கிடைத்து வந்தது.

பரமேசுவரரின் சிற்பங்கள் பல கூட கோபுரங்களையும் மாட மாளிகைகளையும் பூந்தோட்டங்களையும் அலங்கரித்தன.

அவரால் உருவாக்கப்பட்ட குற்றங் குறையற்ற விக்கிரகங்கள் பல கோவில்களில் பிரதிஷ்டை செய்யப்பட்டன.

ஆனால் பரமேசுவரர் திடீரென்று சிற்ப வேலையை நிறுத்தி விட்டார். அருமையான அவரது சிற்பக் கருவிகள் யாதொரு வேலையுமின்றி மூலையில் கிடக்கலாயின. காரணம், அவருடைய கை விரல்கள் சுவாதீனமற்றுப் போனதுதான். அதன் பலனாக, அவருக்கு யாரைக் கண்டாலும், எதைக் கண்டாலும் எரிச்சல் எரிச்சலாக வந்தது.

* * *

அவருடைய ஒரே புதல்வியான கௌரிக்குக் கல்யாணம் ஆனபின், பரமேசுவரரின் வாழ்க்கை யாதொரு மாறுதலுமின்றி ஒரே சீராக நடக்கத் தொடங்கியது.

சாந்தமாகவும் அமைதியாகவும் நடைபெற்று வந்த அவரது வாழ்க்கையின் தன்மையைக் கெடுப்பது போன்றதொரு சம்பவம் திடீரென நிகழ்ந்தது.

பல வருஷங்கள் வரையில் வராமல் இருந்த பரமேசுவரரின் மகள் கௌரி, தீபாவளிக் கென்று அந்த வருஷம் பிறந்த வீட்டுக்கு வந்து சேர்ந்தாள்.

கௌரி தனியாக வரவில்லை; தன்னுடைய அரை டஜன் குழந்தைகளுடன் பிறந்தகத்துக்கு வந்திருந்தாள். பல ஆண்டுகளுக்குப் பிறகு குழந்தைகளுடன் வந்துள்ள தம் புதல்வியுடன் அளவளாவ வேண்டிய பரமேசுவரர், சுமைபோலத் தனிமையான இடத்தில்போய் உட்கார்ந்து கொண்டார். அவர் முகத்தில் சிறிதளவு கூடச் சந்தோஷத்தின் அறிகுறியே இல்லை.

கௌரியின் குழந்தைகள் அங்குமிங்கும் ஓடி அவரது தனிமைக்குப் பங்கம் விளைவித்ததை அவரால் பொறுக்க முடியவில்லை. குழந்தைகள் தோட்டத்தில் விளையாடி, செடிகளை யெல்லாம் மிதிக்கத் தொடங்கினர். சத்தம் போட்டுக் கொண்டும் அழுதுகொண்டும் கூத்தடித்தனர்.

அவ்வளவுதான்! கிழவர் கத்திக் கொண்டே குழந்தைகளை விரட்டினார். உடனே அவர்கள் அவர் கையில் அகப்படாமல் மாயமாய் மறைந்தோடி விட்டார்கள். குழந்தைகள்மீது உண்டான கோபத்தை யெல்லாம் பரமேசுவரர் கௌரியின்மீது காட்டினார்.

அதனால் கௌரி அழ ஆரம்பித்து விட்டாள். குணவதியான பரமேசுவரரின் மனைவிக்கு ஏக காலத்தில் தன் கணவனையும் மகள் கௌரியையும் சமாதானப் படுத்துவது தர்ம சங்கடமாயிற்று.

சூடான காப்பி என்றால் பரமேசுவரருக்குப் பிரியம். எனவே, அவள் நல்ல காப்பியாகத் தயாரித்து கடகட பரமேசுவரருக்குக் கொண்டு போய்க் கொடுத்தாள்.

"குழந்தைகள் ஓடியாடி விஷமம் செய்யாமல் இருக்குமா! அதுவும் தீபாவளி சமயத்தில் குழந்தைகள் அப்படித்தான் விளையாடும். உலகத்தில் பேரக் குழந்தைகளை இப்படி யாராவது கடிந்து கொள்வார்களா! ......சரி, மாலை நேரமாகி விட்டது. கொஞ்ச தூரம் உலாவி விட்டு வாருங்கள். நாளை விடியற்காலம் தீபாவளி அல்லவா! திரும்பி வரும்போது குழந்தைகளுக்குச் சிறு வெடிகள், வாணங்கள், மத்தாப்பு எல்லாம் வாங்கி வாருங்கள்" என்றாள்.

பரமேசுவரரும் அமைதியாக உலாவி விட்டு வரலாம் என்ற உத்தேசத்துடன் வீட்டிலிருந்து புறப்பட்டார்.

"கௌரி, அப்பா கோபத்தில் ஏதோ சொன்னார் என்பதற்காக நல்ல நாளில் நீ இப்படி அழலாமா! அவருக்கு விரல்கள் சுவாதீனமற்றுப் போனதிலிருந்து அவரது போக்கு மாறி விட்டது உனக்குத் தெரியாதா! இனி எந்தக் காலத்தில் தான் அவர் முன் போல் சந்தோஷமாகவும் உற்சாகமாகவும் இருக்கப் போகிறாரோ!" என்று பொருமிக் கொண்டே தாயார் பெண்ணைச் சமாதானப் படுத்தினாள்.

* * *

தனிமையான இடத்தில் சில மணி நேரம் அமைதியாக இருந்து விட்டு வரலாம் என்ற எண்ணத்துடனேயே வீட்டிலிருந்து புறப்பட்டார் பரமேசுவரர்.

வழியில் சிறு வெடிக் கடையைக் கண்டதும் பரமேசுவரருக்குத் தம் மனைவி கூறியது ஞாபகம் வந்தது.

அவர் அந்தக் கடைக்குச் சென்று, கடைக்காரரிடம் ஒரு ரூபாயை வீசி எறிந்தார். "இந்த ரூபாய்க்கு ஒரு கூடையில்



பல நிறமான வெடிகளை வைத்துக்கொடு" என்று அதிகாரத்துடன் கேட்டார்.

கடைக்காரன் ரூபாயை வாங்கிக் கொண்டான். அவன் வியப்புடன் ரூபாயைப் பார்த்தான்; பிறகு அந்தப் பெரியவரையும் ஒரு விதமாகப் பார்த்தான்.

"உங்களுக்கு என்ன வெடிகள் வேண்டும்!" என்று கேட்டான்.

"நான் சொன்னது உனக்குக் காது கேட்கவில்லையா! என் பேரக் குழந்தைகளுக்கும் பல நிறமான வெடிகளை ஒரு கூடையில் வைத்துக் கொடு" என்று கூறினார் பரமேசுவரன்.

கடைக்காரனுக்குச் சிரிப்புத் தாங்க முடியவில்லை. அவன் சிரிப்பதைக் கண்டதும் பரமேசுவரனுக்குக் கோபம் பொங்கிக்கொண்டு வந்தது.

வெடிகள் வியாபாரம் மும்முரமாக நடந்து கொண்டிருக்கும் அச் சமயத்தில் கடைக்காரனுக்குப் பரமேசுவரனுடன் பேசிக் கொண்டிருக்க நேரமில்லை.

"இவருக்கு ஒரு ரூபாய்க்குக் கூடை நிறைய வெடிகள் வேண்டுமாம்" என்று ஏளனமாகக் கூறிவிட்டுத் தன் வேலையைக் கவனிக்க ஆரம்பித்தான்.

உடனே அவருக்குத் தம் மனைவிமீது கோபம் கோபமாக வந்தது. அவள் கூறியதைக் கேட்டதால் தானே கடைக்காரனின் ஏளனத்துக்குத் தாம் காரணமாக நேர்ந்தது!

பரமேசுவரன் கடைக்காரன் கையில் இருந்த ரூபாயை வெடுக்கென்று பிடுங்கிக் கொண்டார். கோபத்துடன் அவ்விடத்தை விட்டு அகன்றார்.

அங்கிருந்து மனம்போன போக்கில் நடந்து சென்ற பரமேசுவரன் கடைசியாகக் கோவிலுக்கு அருகில் வந்து விட்டார். அப்போதுதான், தாம் கோவிலுக்குச் சமீபத்தில் வந்து விட்டது பரமேசுவரனுக்குத் தெரிந்தது!

அவர் தம்மை யறியாமலேயே கோவிலுக்குள் சென்றார். அங்கு சன்னதிக்கு எதிரே உட்கார்ந்து கொண்ட அவருக்குப் பெருமை தாங்க முடியவில்லை.

பரமேசுவரன் விக்கிரகத்தைக் கண் கொட்டாமல் பார்த்தார். அதன் ஆச்சரியகரமான அங்க அமைப்புகளும், கருணை பொழியும் முகத் தோற்றமும் அவரை மிகவும் பரவசப்படுத்தின.

ஆடவர்கள், பெண்கள், குழந்தைகள் யாவரும் மெய்மறந்து விக்கிரகத்துக்குக் காணிக்கை செலுத்திவிட்டு, பக்தியுடன் வணங்கி நின்றனர்.

அதைப் பார்க்கப் பார்க்க பரமேசுவரனின் மனத்தில் இனந்தெரியாத உணர்ச்சிகள் குமுறிக்கொண்டு எழுந்தன. அத்தகைய அற்புதமான விக்கிரகத்தை நிர்மாணித்த தம் சக்தியைக் குறித்து அவர் பெருமிதம் கொண்டார். அவரது இணையற்ற கைத்திறனுள் உருவான விக்கிரகம் அல்லவா அது!

அந்த சமயத்தில் பரமேசுவரன் விகாரமான தமது விரல்களை யாராவது பார்த்து விடுவார்களோ என்று, கையை அங்கவஸ்திரத்துக்குள்ளே மறைத்துக் கொண்டார். அப்போது அவரது முகத்தில் இருந்த ஒளியும், மனத்தில் எழுந்த மகிழ்ச்சியும், பெருமித உணர்ச்சியும் மறைந்தன; துக்கமும் தோல்வி உணர்ச்சியும் மறுபடியும் அவரை ஆட்கொண்டன.

பரமேசுவரனுக்கு அன்றிரவு ஏனோ வீட்டுக்குத் திரும்பிச் செல்லப் பிடிக்கவில்லை. இரவைக் கோவில் வெளி மண்டபத்திலேயே கழித்தார். பழைய நாள் சம்பவங்கள் எல்லாம் அவருக்குக் கனவு போல் தோன்றின.

அந்த நாட்களில் அவருடைய கீர்த்தி என்ன! தொழில் திறமை என்ன!

உயிரற்ற பாறைக் கற்கள் அவருடன் கொஞ்சிப் பேசும்! தமது சித்திரத்துக்கு ஏற்ற கல்லுக்காக அவர் எவ்வளவு காலம் தேடித் திரிவார், தெரியுமா! அவரது சிற்பக் கருவிகள் பட்டதும் கடினமான கற்கள் கனிந்து உருகும்! தம் அகத்தே உள்ள இரகசியங்களை அவரிடம் அள்ளிக் கொடுக்கும்! இறுதியில் அந்தக் கற்கள் அவரது திறமையினால் உருப்பெற்று உயிருடன், பாவத்துடன் விளங்கும்!

உருவற்ற கற்களுக்கு அங்கங்களோ, அவயவங்களோ உண்டா! உண்டு என்பது பரமேசுவரனின் அனுபவமாகும்! கல்லின் சக்தி, பலவீனம், உணர்ச்சி, குணம் எல்லாம் அவருக்குத் தெரியும்!

* * *

எங்கும் இருள் சூழ்ந்திருந்தது. பரமேசுவரன் நதியை நோக்கி நடந்தார். அங்கு சென்ற அவர் அமைதியாக உட்கார்ந்திருப்பது போல் தோன்றியது. ஆனால் உண்மையில் அவர் மனத்தில் பெரும் புயல் அடித்துக் கொண்டிருந்தது.

அவரது பழைய தாபம், அதாவது கல்லில் உயிருள்ள உருவத்தைச் சிருஷ்டிக்க வேண்டும் என்ற ஆர்வம் அவரது மனத்தில் பொங்கி வழிந்தது. விரல்கள் ஊனமுற்று, அவர் கைத்திறனை அறவே இழந்துள்ள இச்சமயத்தில் மேற்படி தாபம் பன்மடங்கு அதிகமாயிற்று.

அவருடைய மனத்தில் உணர்ச்சிப் புயல் வீசத் தொடங்கியதால், அமைதியாக அந்த இடத்தில் உட்கார அவரால் முடியவில்லை. அவர் ஒரு பெருமூச்சு விட்டு எழுந்தார். நதிக்கரை யோரமாக நடந்து சென்றார்.

அவ்வாறு நடந்துசென்றவர் திடீரென்று ஓரிடத்தில் நின்று விட்டார். அப்போது அவரது கண்கள் தண்ணீரில் மூழ்கிக் கிடந்த ஒரு பாறையின் மீது இருக்கும் ஒரு கல்லையே உற்றுப் பார்த்தன. அந்தக் கல்லின் மேற்புறம் வழவழப்பாக இருந்தது.

சிற்சில சமயம் ஒருவருடைய முகம் மிகவும் பழக்கமான முகம்போல் தோன்றும்; ஆனால் எங்கே பழக்கமாயிற்று என்பது ஞாபகத்துக்கு வராது. அது போலவே அந்தக் கல் தமக்குப் பழக்கமான கல்லாகப் பரமேசுவரனுக்குத் தோன்றியது. ஆனால் எங்கே பழக்கமாயிற்று என்பதுதான் அவருடைய ஞாபகத்துக்கு வரவில்லை.

திடீரென்று ஏற்பட்ட பீதி பரமேசுவரனின் தொண்டையை அடைத்தது. தம்முடைய பழைய நண்பன் ஒருவன் கொலை செய்யப்பட்டு, அந்தப் பாறையின் மீது தூக்கி எறியப் பட்டிருப்பது போல் தோன்றியது அவருக்கு.

பரமேசுவரன் தண்ணீரில் இறங்கி அருகில் சென்று உற்றுப் பார்த்தார். அந்தக் கல்லைக் கூர்ந்து பரிசீலனை செய்தார்.

அவர் நினைத்தது முற்றிலும் சரிதான். குப்புறக் கிடந்த அந்த உருவம் அவரால் செய்யப்பட்டதுதான். அந்த உருவம் செதுக்கப்பட்டு முடிந்த பின், அதன் மூக்கைப் பரமேசுவரன் உளியினால் சிறிது கூராக்க முற்பட்டபோது, அது சிறிதளவு ஊனமாகி விட்டது. அவ்வளவுதான்! பரமேசுவரன் பட்டபாடெல்லாம் வீணாகியது. பின்னம் ஏற்பட்ட விக்கிரகத்தைக் கோவிலில் வைத்துக் கொள்வார்களா!

அது நிராகரிக்கப்பட்டதால், பரமேசுவரன் வேறொரு விக்கிரகம் செய்யும்படி நேர்ந்தது. இரண்டாவது தடவை அவர் நிர்மாணித்த உருவமே கோவிலில் வைக்கப் பட்டது. அதுதான், இரவின் முற்பகுதியில் பரமேசுவரன் கோவிலில் பார்த்துப் பெருமையடைந்த விக்கிரகம் ஆகும்.

முதல் தடவை செய்தபோது பின்னமான உருவத்தைப் பரமேசுவரன் அக்காலத்தில் கோபத்துடன் தூக்கி எறிந்தது ஞாபகத்துக்கு வந்தது. அவ்விதம் மூக்கில் பின்னம் ஏற்பட்டது யாருடைய தவறு! கல்லின் தவறு! பச்சாத்தாபத்தினால் பரமேசுவரனின் மனம் நெகிழ்ந்தது.

அந்த உருவத்தைப் பரமேசுவரன் அன்புடன் தடவிக் கொடுத்தபோது அவரது கண்களிலிருந்து நீர் பெருகத் தொடங்கியது. அந்த உருவம் பாறைமீது தலைகுப்புறக் கிடந்ததையும், துணிகளைத் துவைப்பதற்காகச் சலவைத் தொழிலாளர்கள் அதை உபயோகித்து வருவதையும் அவரால் சகிக்கமுடியவில்லை. அந்த உருவத்தின் அத்தகைய பரிதாப நிலையைப் பார்த்த போது பரமேசுவரனுக்குத் துக்கம் பீறிட்டுக் கொண்டு வந்தது.

அவர், அந்த உருவத்துக்கு அருகில் இருந்த பாறைமீது உட்கார்ந்து கொண்டு மிகுந்த சோகத்துடன் அதை உற்றுப் பார்த்தார். தாம் அந்த விக்கிரகத்தைக் கொலைசெய்து விட்டதாக அவர் மனத்துக்குத் தோன்றியது.

ஆலயத்தில் எல்லோரும் பூஜிக்கத் தகுந்த இடத்தில் வீற்றிருக்க வேண்டிய அந்த உருவம், பரமேசுவரனின் கவனக் குறைவினால் இழிவான நிலைக்கு இலக்காகும்படி நேர்ந்து விட்டது; அழுக்குத் துணிகளைத் துவைப்பதற்கான கல்லாகச் சகதியில் கிடக்கும்படி ஆகிவிட்டது.

மௌனமாகக் கிடக்கும் அந்தக் கல் பரமேசுவரனின் தோல்வியை உலகத்துக்குப் பறைசாற்றுவது போல் தோன்றியது. தாம் உயிருள்ளவை போன்ற உருவங்களைச் சிருஷ்டிக்க முடியும் என்ற அவரது கர்வம், உருவற்ற கற்பாறைக்கு அபூர்வமான உருவையும் பாவத்தையும் அளிப்பதில் அவருக்கு இருந்த சக்தி எல்லாம், குப்புறக்கிடந்த அந்த உருவத்தின் முன்னிலையில் இருந்த இடம் தெரியாமல் தவிடு பொடியாயின.

அந்த இடத்தில் பரமேசுவரன் உலகத்தையே மறந்து வெகு நேரம் சிந்தனையில் ஆழ்ந்திருந்தார். அவர் மனம் சித்திரவதைக்கு உள்ளாயது. உயர்ந்த பீடத்தில் வீற்றிருக்க வேண்டிய உருவம், அவரது தவறால் இழிவான கல்லாக இருப்



பாறைக் குறித்து அதன்மீது அவருக்கு மிகுந்த அனுதாபம் உண்டாயிற்று.

இந்தச் சந்தர்ப்பத்திலே ஏதோ தூரத்திலிருந்து நாதஸ்வர கானம் காற்றில் மிதந்து வருவது போல் தோன்றியது.

அப்போது கோவிலிலிருந்து ஸ்வாமி புறப்பட்டு மேளதாளத்துடன் நதிக்கு ஊர்வலம் வந்து கொண்டிருந்தார். அந்த ஊர்வலத்தின் சந்தடியிலும் கூடப் பரமேசுவரனின் ஆழ்ந்த சிந்தனையைக் கலைக்க முடியவில்லை. அப்போதுகூட அவர் மெய் மறந்த நிலையிலேயே உட்கார்ந்திருந்தார்.

குருக்கள்மார், பக்தர்கள் புடைசூழ, மேளதாளத்துடனும் விருதுகளுடனும் நதிக்கரைக்கு வந்த விக்கிரகம் தான், பரமேசுவரன் இரண்டாவது தடவையாக நிர்மாணிக்கப்பட்டதாகும். மூக்கு பின்னமாகாமல் இருந்திருந்தால் அந்த விக்கிரகத்தின் ஸ்தானத்தில் பாறை மீதுள்ள துவைக்கும் கல்தான் இருக்க வேண்டும்!

கோவிலிலிருந்து ஊர்வலமாக வந்த விக்கிரகம் வெள்ளிப் பல்லக்கில் அமைக்கப்பட்ட விலை மதிக்க முடியாத நவ ரத்ன பீடத்தில் வைக்கப்பட்டிருந்தது.

வேத கோஷங்களுக்கு இடையில், நாதஸ்வர கானத்துக்கு மத்தியில், பக்தியுடன் பூஜிக்கப்பட்ட அந்த விக்கிரகத்தைப் பரமேசுவரன் பார்த்தார். பிறகு திரும்பித் தமக்கு அருகில் குப்புற விழுந்து கிடக்கும் உருவத்தையும் பார்த்தார்.

தாம் செய்த குற்றத்தை நிரூபிக்கும் அந்தக் கல்லைப் பார்த்ததும் அவரது உடல் நடுங்கியது. "சர்வோபசாரங்களுடன் அந்த நவரத்ன பீடத்தில் அமர்ந்திருக்க வேண்டிய என்னை இப்படிக் கோலம் செய்து விட்டாயே!" என்று அந்த உருவம் பரமேசுவரனைக் கேட்டது.

உடனே அவர் கோவில் விக்கிரகத்துக்கு நடந்த வைபவ விமரிசைகளைக் கூடக் கவனியாமல் வெட்கத்தினால் தலையைக் குனிந்து கொண்டார்.

அப்போது திடீரென்று ஊர்வலச் சந்தடி, நாதஸ்வர கானம், பக்தர்களின் முழக்கம் எல்லாம் அடங்கி, அமைதி நிலவியது. எங்கும் நிசப்தமாக இருந்தது.

அதே சமயத்தில் விசித்திரமான ஒரு நாடகக் காட்சி அவர் கண்களுக்குத் தெரிந்தது. அவரால் சிருஷ்டிக்கப்பட்ட உருவங்கள், அதாவது கோவில் விக்கிரகமும் துணிகளைத் துவைப்பதற்காகப் போடப்பட்டிருந்த கல்லும் பரஸ்பரம் பேசிக்கொள்ளத் தொடங்கின.

கோவில் விக்கிரகத்தின் குரல் துக்கம் தோய்ந்ததாக இருந்தது. அது தனது நிலையைக் குறித்துப் பெருமை கொள்ளவில்லை. தான் உயர்ந்த ஸ்தானத்திலிருந்து பேசுவதாகவும் நினைக்கவில்லை. அது துவைக்கும் கல்லாகக் குப்புற விழுந்து கிடக்கும் தன் சகோதரனைப் பொறுமையுடன் பார்த்துக் கூறலாயிற்று.

"உனக்கு என்ன! இயற்கை சௌந்தர்யம் பொங்கி வழியும் இந்த அற்புதமான இடத்தில் நீ எப்போதும் ஆனந்தமாகப் படுத்துக் கொண்டிருக்கிறாய்!" என்றது.

இந்தக் கூற்றைக் கேட்டதும் குப்புறக் கிடக்கும் உருவத்துக்குக் கோபமும் துக்கமும் பொங்கிக் கொண்டு வந்தன.

"என்னை ஏளனம் செய்யாதே! உன் பரிகாச வார்த்தைகளை நீயே வைத்துக் கொள். என்னை வம்புக்கு இழுக்காமல் நீ வந்த வழியே போ. சலவைக்காக என் மீது அடிக்கப்படும் அழுக்குத் துணிகளைக் காட்டிலும் அதிகமாக உன் வார்த்தைகள் என் மனத்தைப் புண்ணாக்குகின்றன."

"உன்னைப் பற்றி இழிவாகக் கூறுவதாக நினைக்காதே. இந்த இடத்தில் இருக்கும் பாக்கியம் கிடைப்பதற்காக நான் எது வேண்டுமானாலும் செய்வேன். ஆஹா! அற்புதமான சூரிய வெளிச்சம், ஆனந்தமான தென்றல், இனிமையான இயற்கை அழகு...!"

"ஆமாம், ஆமாம்! என் மேலெல்லாம் அழுக்கு, நாற்றம், சோடா, சோப்பு, சேறு, சகதி...! போதும், என் வயிற்றெரிச்சலை மேலும் கிளப்பாமல் திரும்பிப் போ! நீ துர்ப்பாக்கியசாலியைப் போல் பாசாங்கு செய்யாதே!"

"சந்தேகமின்றி நான் துர்ப்பாக்கியசாலிதான், இழிவானவன்தான்."

"பக்தர்களால் துதிக்கப்பட்டு, இவ்வளவு ஆடம்பரத்துடனும் விருதுகளுடனும் ஊர்வலம் வரும் நீ உன்னைத் துர்ப்பாக்கியசாலி என்று சொல்லிக் கொண்டால் யாராவது நம்புவார்களா!"

"என் பெருமையை நீதான் மெச்ச வேண்டும்! நான் சிறிது நேரம் என் இஷ்டப்படி அமைதியாக இருக்க முடிகிறதா! நான் தனியாக இருக்க முடிகிறதா! எப்போது பார்த்தாலும் அபிஷேகமும் ஆடம்பரமும் தான். ஓர் இருண்ட அறையில் என்னை அடைத்து விடுகிறார்கள். அங்கு மினுக்கு மினுக்கென்று கண்ணுக்குத் தெரியாமல் எரியும் எண்ணெய் விளக்குத்தான் எனது சூரியன்! இருட்டு அறையும் எண்ணெய் விளக்கும் போதாது என்று, சாம்பிராணிப் புகையை வேறு கிளப்பிவிட்டு விடுகிறார்கள். உன்னைப் போல் இந்த ஆனந்தமான இடத்தில் சூரிய வெளிச்சத்தையும் தென்றல் காற்றையும் அனுபவித்துக் கொண்டிருக்கும் பாக்கியம் எனக்குக் கிடைக்கவில்லையே!"

"சகிக்க முடியாத அழுக்குத் துணிகளை என்மேல் போட்டு அடிக்கிறார்களே! இந்த மனிதர்கள் உடைகளில் இவ்வளவு அழுக்கு எங்கிருந்துதான் வருகிறதோ!" என்று நதிக்கரையில் குப்புறக் கிடக்கும் உருவம் இடைமறித்தது.

"அது ஒரு பிரமாத விஷயம் அல்ல. நான் இருக்கும் இடத்துக்கு நீ வந்து தங்கிவிடு, பார்க்கலாம். பக்தர்கள் தேங்காய், புஷ்பம், குடம், தட்சிணை முதலியவற்றை எடுத்துக் கொண்டு என்னிடம் வருகிறார்கள். அவைகளை, என் தயவைப் பெற அவர்கள் கொடுக்கும் லஞ்சமாகவே நான் கருதுகிறேன். அவைகளை எனக்குக் கொடுத்துத் தங்களுடைய பாவங்களைப் போக்கிக் கொள்ள விரும்புகிறார்கள். மனிதர்கள் அழுக்கடைந்த துணிகளைச் சுத்தம் செய்வதற்காக உன்னை நாடுகிறார்கள்; ஆனால் அழுக்கடைந்த ஆத்மாக்களைச் சுத்தம் செய்வதற்காக என்னை நாடுகிறார்கள். அழுக்கடைந்த துணிகளைச் சுத்தம் செய்வதைக் காட்டிலும் அழுக்கடைந்த ஆத்மாக்களைச் சுத்தம் செய்வது மகா கடினமான வேலை அல்லவா!"

"இந்த நரக வாழ்க்கையை நான் அனுபவிக்கும்படி செய்த மனிதன் அதோ உட்கார்ந்திருக்கிறான், பார்! அவன் என் மூக்கைச் சரியாகச் செதுக்கியிருந்தால், இன்று உன் ஸ்தானத்தில் நான் இருக்க-

கொண்டு நீ அனுபவிக்கும் வசதிகளையெல்லாம் அனுபவித்து வருவேன்."

"சாந்தே, வெளிச்சமே புகமுடியாத இருட்டறைச் சிறையில் நான் அடைந்து கிடக்கும்படி செய்த மனிதன் இவன் தானே! பக்தர்கள் என்னிடம் இருப்பதாகக் கூறும் சக்தி உண்மையிலேயே எனக்கு இருந்தால், இந்த மனிதனுக்கு இந்தக் கணத்திலேயே கடுமையான சாபம் கொடுத்திருப்பேன். இதோ பார், என்னைப் பக்தர்கள் மறுபடியும் கோவிலுக்குத் தூக்கிச் செல்ல வந்து விட்டார்கள். போய் வருகிறேன். வந்தனம், அதிர்ஷ்டசாலியான சகோதரா!"

பரமேசுவரன் விழித்துப் பார்த்தார். ஸ்வாமி ஊர்வலம் திரும்பிக் கோவிலுக்குச் சென்று கொண்டிருந்தது. இந்தக் கட்டத்தில் அவர் தம்முடைய கனவு கலைந்து, கண்களை விரித்துக் கொண்டார்!

அவர் சுற்றுமுற்றும் பார்த்துவிட்டு வாய் விட்டுச் சிரிக்கத் தொடங்கினார். அவரது உள்ளத்தில் ஏதோ கட்டறுந்துக் கொண்டது போல் தோன்றியது.

பரமேசுவரன் அவசரமாக எழுந்திருந்து, கடைத்தெருவை நோக்கிப் புறப்பட்டார். அங்குள்ள ஒரு கடையில் ஒரு பெரிய கூடை நிறைய சிறு வெடி வகைகளை வாங்கிக் கொண்டு வீட்டுக்குச் சென்றார்.

அவரது வீட்டில் குழந்தைகளின் விளையாட்டும் சந்தடியும் ஒரே கோலாகலமாக இருந்தது. கௌரியும் அவளது தாயாரும் குழந்தைகளுக்கு எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்து விட்டார்கள். குழந்தைகள் புது உடைகளை உடுத்திக்கொண்டு மகிழ்ச்சி பொங்க அங்குமிங்கும் ஓடிக் கொண்டிருந்தார்கள்.

பரமேசுவரன் வீட்டுக்குள் நுழைவதைப் பார்த்ததும், குழந்தைகள் கொம்மாளம் அடிப்பதை நிறுத்திவிட்டு, பயத்துடன் மௌனமாக இருந்தனர். அவர்கள் தங்கள் தாத்தாவுக்கு பயந்து கொண்டு, தங்கள் தாயாருக்குப் பின்புறம் போய் ஒளிந்து கொண்டனர்.

பரமேசுவரனைக் கண்டதும் அவரது மனைவி ஓடோடியும் வந்தாள்.

"எங்கே போயிருந்தீர்கள்! இரவு முழுவதும் நான் தூங்கவே இல்லையே!" என்றாள்.

"கோவிலுக்குச் சென்றிருந்தேன். அங்கேயே தூங்கி விட்டேன்" என்றார் பரமேசுவரன் தன் மனைவியைத் திருப்தி செய்வதற்காக.

பிறகு அவர் தம் பேரக் குழந்தைகளைப் பார்த்தார்.

"இந்தக் குழந்தைகள் எல்லாம் ஏன் இப்படி ஊமைகளைப் போல் மௌனமாக நின்று கொண்டிருக்கிறார்கள்...சேகரு, சீனி, கோபு, ராஜி, எல்லோரும் இங்கே வாருங்கள். உங்களுக்காக நிறைய வெடிகள், வாணங்கள் எல்லாம் வாங்கிக் கொண்டு வந்திருக்கிறேன்" என்றார் சந்தோஷத்துடன்.

"பாட்டி எங்கே!" என்று சொல்லிக் கொண்டே அவர் கௌரியின் கைக் குழந்தையை எடுத்துக் கொஞ்சினார்.

அவ்வளவுதான்! பரமேசுவரனிடத்தில் தோன்றிய மாறுதலைக் கண்ட பேரக் குழந்தைகள் ஓடோடியும் வந்து அவரைச் சூழ்ந்து கொண்டு கொம்மாளம் அடிக்கத் தொடங்கினர்.

பரமேசுவரனின் மனைவி தன் மகிழ்ச்சியைத் தெரிவிப்பதற்கு அறிகுறியாக முதல் தரமான காப்பி போட்டு அவரிடம் கொண்டு வந்து கொடுத்தாள்.

"நான் நதிக்குச் சென்று ஆனந்தமாக ஸ்நானம் செய்து விட்டு வருகிறேன்" என்று சொல்லியவாறே பரமேசுவரன் ஒரு துண்டை எடுத்துத் தோளில் போட்டுக் கொண்டு நதிக்குப் புறப்பட்டார்.

"இந்தக் குழந்தைகளைப் பார்த்தாலே துக்கமெல்லாம் பறந்து விடுகிறது!" என்று மகிழ்ச்சியுடன் சொல்லிக் கொண்டே சென்றார்.

பரமேசுவரனின் மனைவி அவர் கண்ணுக்கு மறையும் வரையில் அவரையே பார்த்துக் கொண்டு நின்றாள்.

"அம்மா! ஏன் அழுது கொண்டிருக்கிறாய்?" என்று கேட்டுக் கொண்டே வந்தாள் கௌரி.

"நான் அழவில்லை, கௌரி! எனக்குச் சந்தோஷம் தாங்க முடியவில்லை. இத்தனை வருஷங்களுக்குப் பிறகு இப்போதுதான் உன் அப்பாவின் முகத்தில் சந்தோஷம் தாண்டவமாடுவதை நான் பார்த்தேன்! நீயும் உன் குழந்தைகளும் இந்தத் தீபாவளி நன்னாளில் அவர் மனத்திலிருந்த துக்கம் மறைந்து சந்தோஷம் உண்டாகும்படி செய்திருக்கிறீர்கள். அவரது முகத்திலே இனி இந்த ஜன்மத்தில் புன்சிரிப்பைக் காண முடியுமா என்று நான் இத்தனை வருஷங்களாக ஏங்கிக் கொண்டிருந்தேன்" என்றாள் கௌரியின் தாயார்.

° ° °

பரமேசுவரன் நதியில் ஸ்நானம் செய்து கொண்டிருந்தார். அப்போது அவரது கண்கள் பாறையின் மேலே குப்புறக் கிடக்கும் உருவத்தின் மீது சென்றன.

"அப்பா, குழந்தாய்! வீணாக மனத்தை வருத்திக் கொள்ளாதே. நாம் யாவரும் இந்த உலகத்திலே அழுகை அகற்றுவதற்காகச் சிருஷ்டிக்கப்பட்டவர்கள் தான். சிலர் அந்தக் கடமையைச் சந்தோஷத்துடன் தாங்களாகச் செய்கிறார்கள். சிலர் அவ்வாறு செய்யும்படி வற்புறுத்தப்படுகிறார்கள். வாழ்க்கையாகிற யாத்திரைப் படகில் எல்லோரும் மேல்தளத்தில் கவலையின்றிச் சுகமாக இருக்க முடியுமா! சிலர் கீழ்த் தளத்திலும் இருந்துதானே தீரவேண்டும்!"

இவ்வாறு கூறிய பரமேசுவரன் சிரித்துக் கொண்டே நதியில் ஸ்நானம் செய்தார். வெகு காலமாக அவர் மனத்தில் இருந்த துயரம் நீங்கி, அவர் நெற்றியிலும் முகத்திலும் ஒளி வீசுவதைப் பிரதிபலிப்பது போல உதய சூரியனின் ஒளி தண்ணீரில் தங்க மயமாக ஜொலித்தது!

## மழை வருமா?



மனைவி:—நாளைக்குக் கடைக்குப் போய்ப் பட்டுப் புடவை வாங்கலாமென்று இருக்கிறேன். போக முடியாமல் மழை கிழை ஏதேனும் வருமா? பேப்பரில் போட்டிருக்கிறதா, பாருங்கள்!

கணவன்:—ஆமாம், நாளைக்கு நல்ல மழை, இடி, மின்னல், புயல் காற்று, உம்......... பூகம்பம் எல்லாம் பிரமாதமாக வரப் போகின்றனவாம். பேப்பரில் போட்டிருக்கிறது!

REPUTATION over a quarter of a CENTURY







யாவர்க்குமே உகந்த

ஸைகிள்கள்

பெரியோர்களுக்கும் சிறியோர்களுக்கும்
பெண்மணிகளுக்கும் சிறுமியருக்கும்

காற்றடிக்கும் டயர்களுடன் கூடிய
'டீலக்ஸ்', 'ஸூபர் டீலக்ஸ்' மாடல்
மூன்று சக்கர ஸைகிள்களும்
குழந்தைகளுக்கான தள்ளு வண்டிகளும்





இப்போது காட்சியிலுள்ள பல ரகங்களிலிருந்து உங்களுக்குத் தேவையானவற்றைப் பொறுக்கி எடுத்துக்கொள்ளுங்கள்.

ROYAL CYCLE & MOTOR Co.
13/14, BROADWAY, MADRAS.
AND
THE PIONEER CYCLE HOUSE,
WEST TOWER STREET, MADURA

ads. 153

# அரசியல் உலகில் அபூர்வ வித்தைகள்

கழைக் கூத்து

மந்திரக்கம்பளம்

புதும் புதுத் திட்டங்கள்

சென்னை சர்க்கார்

விஷமக் காரர்கள்

உலக சமாதானத்தை நிலைநாட்டுவதற் காக உலகையே தூக்கித் தலையின் வைத் துக்கொண்டு நேரு கழைக்கூத்தாடுகிறார்.

○

மந்திரவாதியைப் போல் ராஜாஜி புதும் புதுத் திட்டங்களை அள்ளி வீசு கிறார். விஷமக்காரர்களின் பாணங்கள் திரும்பி, சுருண்டு விழுகின்றன.


கோமாளி கோஷ்டி
கிருபளானி
ஆச்சார்ய கிருபளானியின் கூத்துக்கு ஸ்ரீ அசோக் மேத்தா மத்தளம் கொட்டுகிறார்.
ஸ்ரீ என். ஜி. ரங்காவும் டாக்டர் கரேயும் "எங்கள் கபந்த நாட்டியத்துக்கும் பத்திரிகை விமர்சனம் சரிவரக் கிடைப்பதில்லை!" என்று குறைப்படுகிறார்கள்.


கபந்த நாட்டியம்






○ நேப்பாளத்தில் அண்ணன் தம்பிகள் தார் பூசிக் கொண்டிருக்கிறார்கள்.

○ அசுவமேத யாகக் குதிரையை அவிழ்த்து விட்டு விட்டு, ஸ்ரீ தாண்டனும், ஸ்ரீ சேத் கோவிந்த தாஸும் திக்விஜயம் புறப்பட்டிருக்கிறார்கள்.

○ ஆந்திர கேசரி பிரகாசம் தள்ளாத வயதில் அபாயகரமான விளையாட்டில் இறங்கியிருக்கிறார்.










தீபாவளி வாழ்த்துக்கள்




சந்திரசேகர் மாடியின் தெற்குத் தாழ்வாரத்துக் திறந்த வெளியிலே சாய்வு நாற்காலியில் சாய்ந்தவண்ணம் இருந்தான். வான மண்டலத்தைப் பார்த்தவாறு இயற்கையின் எழிலை அநுபவித்துக் கொண்டிருந்தான்.

நக்ஷத்திரக் கூட்டங்களுக்கு நடுவில், பிறைச் சந்திரன் தன் அமுதமயமான கிரணங்களைப் பொழிந்து கொண்டிருந்த அந்தக் காட்சி, கம்பனுடைய பாட்டு ஒன்றை அவனுக்கு நினைவூட்டியது. சந்திரசேகர் வாய்விட்டுப் பாடத் தொடங்கினான்.

"தேயா நின்றும் மெய்வெளுத்தாய்
உள்ளம் கறுத்தாய் நிலைதிரிந்து

காயா நின்றும் ஒருநீயும்
கண்டார் சொல்லக் கேட்டாயோ"

மீதி இரண்டு அடிகளையும் அவன் பாடி முடிக்கவில்லை. அதற்குள் மல்லிகைப் பூவின் பரிமளகந்தம் அவன் சிந்தனையைக் கலைத்தது. திரும்பிப் பார்த்தான். அவன் அருமை மனைவி மீனாட்சி ஒய்யாரமாக நின்று கொண்டிருந்தாள், கையில் வெற்றிலைத் தட்டுடன்.

"பாட்டு பலமாக இருக்கிறதே! அடியாளுக்குத் தெரியாமல், தங்கள் கருத்தில் கள்ளத் தனமாகப் புகுந்த காரிகை யாரோ? அவளை அடியாள் அறிந்து கொள்ளலாமோ?" என்று நாடக தோரணையில் கேட்டாள். அவள் பேச்சில் பரிகாசமும் விஷமமும் தொனித்தன.

"ஓ! பேஷாக அறியலாமே. அவள் வேறு யாரும் இல்லை. சாக்ஷாத் இந்த மீனாட்சி தேவியேதான்" என்று பரவசத்துடன் சொல்லிக் கொண்டே, அவள் மலர்க் கரங்களைப் பற்றி அவளைத் தன் சமீபத்தில் இழுத்துக் கொண்டான் சந்திரசேகர்.

"உங்களை ஒன்று கேட்கப் போகிறேன். வாங்கிக் கொடுப்பீர்களோ" என்று ஆரம்பித்தாள் மீனாட்சி.

"என்ன மீனு அப்படிக் கேட்டாய்? நீ எது கேட்டு நான் வாங்கித் தரவில்லை?"

"அப்புறம் முடியாதென்றால்?"

"எதற்காக இந்தப்பீடிகை எல்லாம்? உடனே கேள்."

"தீபாவளிக்கு இன்னும் ஒரு மாசம் இருக்கிறது. இப்பொழுதே சொல்லி வைக்கிறேன். எனக்கு இந்த வருஷம் பச்சை நிறத்தில் ஒரு பட்டுப் புடவை வேண்டும்."

"நீல நிறத்தில் ஒரு பட்டுப் புடவை இருக்கிறதே? இந்தத் தீபாவளிக்கு நூல் புடவை போதாதா, மீனு?"

"போதாதென்று சொன்னேனா? என்னமோ, ஆசை வெட்கமறியாது என்று சொல்லுவார்கள். கேட்டு விட்டேன். பிறகு உங்கள் இஷ்டம்" என்று கண்ணைக் கசக்கிக் கொண்டாள் மீனாட்சி.

"அசடே, எதற்காக இந்தக் கண் கலக்கம்? நீ கேட்டபின் அதை நான் வாங்கித் தர மறுப்பேனா? பட்டுப்புடவை வாங்குவ தென்றால் கொஞ்சம் சிரமப்பட வேண்டியிருக்குமே என்று யோசிக்கிறேன். அதிருக்கட்டும், திடீரென்று உனக்கு இந்தப் பச்சைக் கலர்ப் புடவையின் மீது மோகம் ஏற்படக் காரணம் என்ன?"

"சரியான காரணம் இருக்கிறது."

"அது தானே கேட்டேன். இல்லாமல் மீனு இப்படியெல்லாம் திடுதிப்பென்று கேட்க மாட்டாளே என்று நினைத்தேன். என்ன காரணமோ?"

"சொன்னால் நீங்கள் சிரிப்பீர்கள். இப்படியும் ஒரு பெண் உண்டா என்று கேலி செய்வீர்கள். இருந்தாலும் சொல்லி விடுகிறேன். அன்று பதினெட்டாம் பெருக்கின் போது நானும் என் தோழிகளுடன் காவேரிக்குப் போனேன். எனக்கு முன் பல பெண்கள் படித் துறையில் உட்கார்ந்து கொண்டு ஊர் வம்பு பேசிக் கொண்டிருந்தனர். அவர்களுள் ஒருத்தி, 'இந்த மீனுவுக்கு நாள் கிழமைகளில் உடுத்திக் கொள்வதற்கு அரக்குக் கரைப் புடவையைத் தவிர வேறு ஒன்றுமே கிடையாதோ' என்று சொல்லிச் சிரித்தாள். அவளுக்கு ஒத்துப் பாடுவது போல் மற்றப் பெண்களும் சிரித்தார்கள். எனக்கு வெட்கம் தாங்க முடியவில்லை. காவேரிக்கு ஏன் போனோம் என்றாகி விட்டது. இருந்தாலும், இந்த ஊர்ப் பெண்களுக்கு இவ்வளவு வாய் வேண்டாம். யார் எந்தப் புடவை கட்டிக் கொண்டிருந்தால் இவர்களுக்கு என்ன? அது அவரவர்களுடைய சௌகரியம்."

"யார் அந்தப் பெண்? ரொம்பப் பொல்லாதவள் போல் இருக்கிறதே!"

"அவள் யாராக இருந்தால் என்ன? அன்று அவள் காவேரிக்கு உடுத்தி வந்த அதே மாதிரி பச்சை நிறப்புடவை ஒன்று கட்டாயம் இந்தத் தீபாவளிக்கு வாங்கித் தர வேண்டும். எங்கே, 'வாங்கித் தருகிறேன்' என்று உங்கள் வாயால் சொல்லுங்கள்."

இவ்விதம் சொல்லி மீனாட்சி முகத்தை ஒரு குலுக்குக் குலுக்கினாள். அப்போது, அவள் காதில் அணிந்திருந்த அந்த நீண்ட லோலாக்குகள் துள்ளிக் குதித்தன. அவற்றின் அழகைப் பார்த்துக் கொண்டு சற்று நேரம் சுந்தரேசன் ஒரு வார்த்தையும் பேசாமல் இருந்தான்.

"என்ன பார்க்கிறீர்கள்? முடியுமா, முடியாதா? சொல்லி விடுங்கள்."

"புடவைதானே. வாங்கித் தந்துவிட்டேன், என்று வைத்துக் கொள்" என்று சொல்லிக் கொண்டே சுந்தரேசன் எழுந்தான்.

* * *

அவர்கள் இருவருக்கும் விவாகமாகி நாலு வருஷங்கள் தான் ஆகின்றன. இந்த நாலு வருஷங்களாக அவர்களுடைய வாழ்க்கை தேனும் தித்திப்புமாகக் கழிந்தது.

மீனாட்சியை அழகுப் போட்டியில் தேறியவள் என்று சொல்லலாம். வெடவெடவென்று ஒற்றை நாடி தேகம். சிவந்த மேனி. அவள் சௌந்தர்யத்திலே சுந்தரேசன் மயங்கிப் போனதில் ஆச்சரியமில்லை. அவளை அவன் ஒரு தடவையாவது 'சீ' என்று ஒரு வார்த்தை சொல்லி இருப்பானா? எனவே, அவர்களுடைய வாழ்க்கை இன்ப மயமாக இருந்து வந்தது.

ஒரு நாளும் இல்லாமல் இன்று தான் முதன் முதலாக மீனாட்சி வாய் திறந்து ஒரு பட்டுப் புடவை வேண்டும் என்கிறாள்; நியாயமான அவள் விருப்பத்தை எந்த விதத்திலாவது பூர்த்தி செய்யத்தான் வேண்டும் என்ற தீர்மானத்துக்கு வந்தான் சுந்தரேசன்.

ஆனால், அந்த மாதிரி ஒரு பட்டுப் புடவை வாங்குவதற்கு, குறைந்தபட்சம் நூறு ரூபாயாவது வேண்டுமே? அவனிடம் அப்போது நூறு அணா கூட இல்லையே!

'என்ன செய்யலாம்? யாரைக் கேட்கலாம்? யார் கொடுப்பார்கள்?—இப்படியெல்லாம் யோசித்துக் கொண்டிருந்த போது திடீரென்று அவன் சகோதரி ஜானகியின் நினைவு அவனுக்கு வந்தது.

ஜானகி நல்ல பணக்கார இடத்தில் வாழ்க்கைப்பட்டவள். அவள் கணவனுக்கு உத்தியோகம் எதுவும் இல்லாவிட்டாலும், யாதொரு கவலையுமின்றி வீட்டிலே உட்கார்ந்து சாப்பிடுவதற்குப் போதிய சொத்து இருந்தது.

'இனாமாகக் கொடுக்க வேண்டாம். கடனாக நூறு ரூபாய் கொடு. தீபாவளிச் செலவுக்கு வேண்டும். இரண்டு மூன்று மாதங்களில் திருப்பிக் கொடுத்து விடுகிறேன்' என்று எழுதினால் நிச்சயம் கொடுப்பாள் என்று நினைத்தான். அப்படியே அவன் சகோதரி ஜானகிக்கு ஒரு கடிதம் எழுதினான் சுந்தரேசன்.

ஒரு வாரத்துக்கெல்லாம் அந்தக் கடிதத்துக்குப் பதில் வந்தது. 'பணம் கொடுத்த இடத்தில் திரும்பி வரவில்லை.



மழை பெய்யவில்லை. நிலம் சரியாக விளையவில்லை. முழு சாக ஐம்பது ரூபாயைப் பார்ப்பது குதிரைக் கொம்பாக இருக்கிறது' என்ற தோரணையில் மீனாட்சி 'இல்லை' பாட்டுப் பாடிப் பதில் எழுதி விட்டாள்.

'உயிருக்குயிராக நான் எண்ணிக் கொண்டிருந்த சகோதரி ஜானகியா இப்படி எழுதினாள்? நினைத்தால் நூறு இல்லை, இருநூறு இல்லை, ஆயிரம் ரூபாய் அவளால் புரட்ட முடியாதா? இதற்கு முன் அவளை எப்போதாவது கேட்டிருக்கிறேனா? இப்போது புத்தி கெட்டுப் போய் அவளுக்குக் கடிதம் எழுதினேனே' என்று வருந்தினான் சுந்தரேசன். 'அக்காளாவது, தம்பியாவது! பணம் என்றதும் உறவு முறையெல்லாம் ஓடி விடுகிறது' என்று வாய்க்குள் முணு முணுத்தான்.

சொந்தச் சகோதரியே கையை விரித்து விட்டபோது, அவனுக்கு அந்தச் சமயத்தில் யார் உதவி செய்ய இருக்கிறார்கள்? அவனும் எங்கெல்லாமோ முயற்சி செய்து பார்த்தான். ஆனால், பலன் கிடைக்கவில்லை.

நாட்கள் வேகமாக ஓடிக் கொண்டிருந்தன. தீபாவளி நெருங்கிக் கொண்டிருந்தது.

மீனாவைப் பார்க்கும் போதெல்லாம், சுந்தரேசனுக்கு என்னவோபோல் இருந்தது. ஆனால் அவள் வாயைத் திறந்து மறுபடியும் புடவையைப் பற்றிய பேச்சை எடுக்காமல் இருந்தது அவனுக்கு ஆச்சரியமாக இருந்தது. எப்படியும் தீபாவளியின்போது அவள் கேட்ட அந்தப் புடவை கிடைத்து விடும் என்ற நம்பிக்கையால், அதைப் பற்றிப் பிரஸ்தாபமே செய்யவில்லை போலிருக்கிறது என்று எண்ணினான். தான் அந்த நம்பிக்கைக்குப் பாத்திரமாகாமற் போய்விட்டால், தன்னைப் பற்றி அவள் என்ன நினைப்பாள்? அப்போது அவள் மனம் என்ன பாடு படும் என்றெல்லாம் எண்ணி மனம் பதறினான்.

தீபாவளிக்கு இன்னும் இரண்டு நாட்கள்தான் இருந்தன. சுந்தரேசனுக்கு ஆபீஸில் வேலை ஓடவில்லை. எப்படி ஓடும்? பிரமை பிடித்தவன் போல ஆபீஸ் காகிதங்களையெல்லாம் புரட்டிக் கொண்டிருந்தான்.

அச்சமயம் தபால்காரன் "ஸார், உங்களுக்கு ஒரு பார்ஸல்" என்று சொல்லிக் கொண்டே அவனிடம் ஒரு பெரிய பொட்டலத்தைக் கொண்டு வந்து கொடுத்தான். தபால்காரன் ரூபத்தில் ஒரு தேவதையே எதிரில் தோன்றி அவன் கோரிய வரத்தைக் கொடுப்பதுபோல் இருந்தது சுந்தரேசனுக்கு!

அவன் யாரிடமும் எந்தப் பார்ஸலையும் எதிர்பார்க்கவில்லை. எனவே, தனக்குத்தான் அது வந்ததா, வேறு யாருக்காவதுமா என்று சந்தேகித்தவனும், விலாசத்தை ஒரு முறைக்கு நாலு முறையாகப் பார்த்தான்.

நிச்சயமாக அவனுக்குத்தான். அதுவும் அவன் மைத்துனன் கோபாலன் திருச்சியிலிருந்து அனுப்பி யிருக்கிறான் என்று அவன் அறிந்தபோது அவன் அடைந்த ஆச்சரியத்துக்கு அளவே இல்லை.

அவசர அவசரமாகப் பார்ஸலைப் பிரித்தான். உள்ளே பளபள வென்ற ஒரு பட்டுப் புடவை மின்னிக் கொண்டிருந்தது. அத்துடன் ஒரு கடிதமும் இருந்தது.

**"நமஸ்காரம். இத்துடன் மீனாவுக்கு ஒரு புடவை அனுப்பி யிருக்கிறேன். தீபாவளிக்கு உபயோகித்துக் கொள்ளச் சொல்ல வேண்டும். —கோபு."**

சுந்தரேசனுக்கு ஆனந்தம் பொங்கியது. அப்போது அவன் கோபாலனைத் தன் மைத்துனனாகக் கருதவில்லை.

கௌரவர்கள் சபையில் திரௌபதியைத் துகில் உரியும்போது, அவள் மானத்தைக் காத்தானே, அதே கோபாலனாக அவனுக்குத் தோன்றியது! மீனாட்சிக்குக் கொடுத்த வாக்குறுதி வீணாகாமல் தன்னுடைய மானத்தைப் பாதுகாத்தான் அல்லவா?

மானேஜரிடம் சொல்லிவிட்டு, ஒரு மணி நேரம் முன்பாகவே வீட்டுக்கு விரைந்து சென்றான் சுந்தரேசன்.

"இன்று கொஞ்சம் சீக்கிரமாகவே வந்து விட்டீர்கள் போல் இருக்கிறதே? கையில் என்ன பார்ஸல்!" என்று கேட்டாள் மீனாட்சி.



"என்னவாக இருக்கும்?" என்று உற்சாகத்துடன் சொல்லிக் கொண்டே பார்ஸலை அவளிடம் கொடுத்தான் சுந்தரேசன்.

மீனாட்சி காகிதத்தைப் பிரித்தாள். உள்ளே பட்டுப் புடவையைக் கண்டதும் அவளுக்குச் சந்தோஷம் தாங்கமுடியவில்லை.

"இந்தப் புடவைக்கு என்ன பெயர்?"

"பெயர் என்னமோ சொன்னான். இதைப் பொறுக்கி எடுப்பதற்கு நூறு கடை ஏறி இறங்கிவிட்டேன். புடவை உனக்குப் பிடிக்கிறதா, இல்லையா?"

"நன்றாய்ச் சொன்னீர்கள்? பிடிக்காமல் என்ன? அருமையான புடவை அல்லவா? விலை அதிகமிருக்குமே!"

"விலை கிடக்கிறது! ஆனால் ஒரு குறை. நீ கேட்ட அந்த பச்சை நிறப் புடவைதான் கிடைக்கவில்லை. ஒரு கடை பாக்கி இல்லை, தேடி விட்டேன்."



“அது கிடைக்காமற் போனால் போகட்டும். அதை விட இது நன்றாக இருக்கிறது. உங்களுக்கு இப்படி யெல்லாம் புடவை வாங்கத் தெரிந்திருக்கிறதே” என்று சொல்லி ஆச்சரியப்பட்டாள் மீனாட்சி.

புடவை பச்சை நிறமாக இராததைக் குறித்து மீனாட்சி எதுவும் குறை சொல்லாதது சுந்தரேசனுக்குக் கொஞ்சம் வியப்பாகத்தான் இருந்தது.

* * *

தீபாவளி வைபவங்கள் எல்லாம் இனிது முடிந்து இரண்டு மூன்று நாட்களுக்குப் பிறகு, ஒரு நாள் மீனாட்சி தயங்கித் தயங்கி ஏதோ சொல்ல விரும்புபவள் போல, தன் கணவன் எதிரில் வந்து நின்றாள்.

அவளது முகத்தை ஏறிட்டுப் பார்த்த சுந்தரேசன், “என்ன மீனு, என்ன வேண்டும்?” என்று கேட்டான்.

“நான் திருச்சி வரைக்கும் போய், என் அண்ணா கோபுவைப் பார்த்து விட்டு வரவேண்டும்.”

சுந்தரேசனுக்குச் சுருக்கென்றது. “இப்பொழுது திடீரென்று அவனைப் பார்க்க எதற்காகப் போவது? அண்ணா கடிதம் ஏதாவது போட்டிருக்கிறானா?” என்று வியப்புடன் கேட்டான் அவன்.

“தீபாவளிக்கு முன் அண்ணாவுக்கு ஒரு கடிதம் எழுதி னேன். இன்று வரைக்கும் அவனிடமிருந்து ஒரு பதிலும் வரவில்லை. என் அண்ணா அப்படி எல்லாம் அலட்சியமாக இருக்க மாட்டான். அவனிடமிருந்து கடிதம் வராததி லிருந்து, எனக்குக் கவலையாக இருக்கிறது. அவனுக்கு உடம்பு ஒன்று மில்லாமல் இருக்க வேண்டுமே! போய்ப் பார்த்து விட்டு வந்துவிடுகிறேன். நீங்களும் ஒருநாள் லீவு போட்டு வந்தால் கூட நல்லதுதான்” என்று மீனாட்சி அழாக் குறையாகக் கெஞ்சினாள்.

“மீனாட்சி, என்னை நீ மன்னிக்க வேண்டும். உன் அண்ணா தீபாவளிக் காக உனக்குக் கொடுக்கும்படி கடி தம் எழுதி ஒரு புடவையும் அனுப்பி யிருந்தான். அந்தப் புடவை தான் நீ தீபாவளிக்கு உடுத்திக் கொண்ட புடவை. ஏதோ தீபாவளிக்கு அவனாக உனக்கு அனுப்பியிருக்கிறான் என்று எண்ணினேன். விஷயம் தெரிந்திருந் தால், இந்தக் குறும்புத் தனமெல்லாம் செய்திருக்க மாட்டேன். போனது போகட்டும். உன் அண்ணா சௌக்கிய மாக இருக்கிறான். கவலைப்படாதே. நீ எப்படியும் அதிர்ஷ்டசாலி. உனக்கு ஒரு நல்ல அண்ணன் வாய்த்தது போல், எனக்கு ஒரு தங்கையோ, அக்காளோ வாய்க்கவில்லை. அவ்வளவுக்கு நான் அதிர்ஷ்டம் செய்யவில்லை. ஜானகிக்குப் பணத்திற்கு என்ன குறை? தீபாவளிக்கு நீ கேட்ட புட வையை வாங்கிக் கொடுக்க வேண்டும் என்பதற்காகப் பணம்கேட்டு அவளுக் குக் கடிதம் எழுதி யிருந்தேன். நூறு ரூபாய் கூடப்பெற மாட்டேனா? அவள் அனுப்பாதது தான் எனக்கு மிகவும் வருத்தமாக இருக்கிறது” என்று சொல்லி முடித்தான் சுந்தரேசன்.

“இப்பொழுது நீங்கள் என்னை மன்னிக்க வேண்டிய கட்டம் ஒன்று வந்திருக்கிறது. ‘மன்னித்தேன்’ என்று சொல்லுங்கள்” என்று ஒரு பெரிய புதிரைத் தூக்கிப் போட்டாள் மீனாட்சி.

“என்ன மீனு! ஒரே மன்னிப்பு மயமாக இருக்கிறதே. விஷயத்தைத் தெளிவாகச் சொல்லேன்” என்றான் சுந்தரேசன் சற்றுப் பரபரப்புடன்.

“என் அண்ணாவிடமிருந்து உங்களுக்குப் பார்சல் வந்த அதே தினத்தில் உங்கள் சகோதரியிடமிருந்து எனக்கும் ஒரு பார்சல் வந்தது. பிரித்துப் பார்த்தால், என்ன ஆச்சரியம்! நான் எந்த மாதிரியான புடவை வேண்டும் என்று ஆசைப் பட்டேனோ, அந்தப் புடவை அதில் இருந்தது” என்று சொல்லிக் கொண்டே, உள்ளே ஓடிப்போய்ப் பெட்டியைத் திறந்து ஒரு பட்டுப்புடவையை எடுத்துக் கொண்டு வந்து, அவன் முன்பு வைத்தாள்.

மீனு விரும்பிய அதே பச்சை நிறப் புடவையைப் பார்த்ததும், சுந்தரேசனுக்கு ஒன்றும் தோன்றவில்லை. அவன் கண்களில் நீர் மல்கியது.

“ஜானகியை நான் புடவை கேட்க வில்லையே! பணந்தானே கேட்டேன்” என்றான்.

“என் ஆசையையும் உங்கள் விருப்பத்தையும் ஞான திருஷ்டியினால் அறிந்து கொண்டவர் போல் அனுப்பியிருக் கும் ஆச்சரியத்தைப் பாருங்கள்! இதுதான் மன ஒற்றுமை என்பது! அதுவும் நான் விரும்பின அதே புடவையை அனுப்பியிருக்கிறார். நான் அதிர்ஷ்டசாலி தானே?”

“சந்தேகம் என்ன? நீ அதிர்ஷ்டசாலி தான். இல்லா விட்டால், ஒரு புடவைக்கு இரண்டு புடவைகளாகத் தீபா வளிக்குக் கிடைத்திருக்குமா?” என்று கூறிச் சுந்தரேசன் அவள் கன்னத்தை மெதுவாகத் தட்டினான்.

# கவுண்டர் & கம்பெனி லிமிடெட்

கூட்ஸ் ஷெட் ரோடு :: பொள்ளாச்சி

## போர்டு, செவர்லேட்

மற்றும் இதர மோட்டார்களுக்கு அவசியமான எல்லா சாமான்களும்

**டயர்கள், டியூப்புகள், பேட்டரி வகைகளும்**

விற்பனை செய்யப்படும்.



பஸ், லாரிகளுக்கு பாடிகள் போட்டுக் கொடுப்பதுடன் எல்லாவிதமான மோட்டார் ரிப்பேர்களும் சிறந்த முறையில் செய்து கொடுக்கப்படும்.



**நா. மகாலிங்கம்**

மேனேஜிங் டைரக்டர்.

---

For good quality

PAINTS

VARNISHES

ENAMELS

DISTEMPERS

OILS

Look for the name

"GOODLASS WALL"

It's your Hallmark of Quality

USE

KERALA SANDALWOOD SOAP

AND

WASHWELL BAR SOAP

FOR VERY BEST RESULTS

Distributors

**T. A. TAYLOR & CO. (Madras) LTD.**

100, ARMENIAN STREET, MADRAS-1

# அம்பிகையின் திருவுள்ளம்

'மாயா'



அம்பாள் சன்னதியை விட்டுப் பிராகாரத்திற்கு வந்தார் ராம சர்மா. அவர் மனம் முன்னிலும் அதிகமாகக் குழம்பியிருந்தது. சிக்கலான பிரச்னை ஒன்றுக்கு முடிவு காண வேண்டியே அவர் அன்று கோவிலுக்கு வந்திருந்தார். அவரது மனப் போராட்டம் ஒருபுறமிருக்க, அவருக்கு ஆலோசனை சொல்ல வந்தவர்களும், பேதலித்திருந்த அவரது புத்தியை மேலும் குழப்பி விட்டனர்.

உறுதியானதொரு முடிவு காணும் வழி அவருக்குப் புலப்படவில்லை. திருவுளச் சீட்டின் முடிவும் அவருக்குத் திருப்தி அளிப்பதாயில்லை. தெய்வத்தின் கட்டளை இப்படி இருக்கும் என்று அவர் எதிர்பார்க்கவில்லை.

அவர் கால்கள் மேலே நடக்க மறுப்பது போல் அவருக்குத் தோன்றியது. திரும்பிச் சன்னதியை நோக்கினார். தீப மங்கள ஜோதிக்கு நடுவே அம்பிகையின் சான்னித்தியம் கண் கொள்ளாக் காட்சியாயிருந்தது. சர்மாவின் கண்களுக்கு, சன்னதியை விட்டு வெளி வரும் ஒவ்வொருவர் முகத்திலும் மனக் குறைகளைத் தீர்த்துக் கொண்ட தெளிவு பளிச்சிட்டது. ஆனால் அவர் மனமோ முன்னரைக் காட்டிலும் அதிகமாகக் குழம்பி யிருந்தது.

அவருக்கு முன்னே விரைவாகச் சென்று கொண்டிருந்த அவர் மனைவி அலமேலுவும் பெண் கமலியும் திரும்பிப் பார்த்தனர். சர்மா மேலே நடந்து வராமல் தயங்கி நிற்பதைக் கண்ட அலமேலு திரும்பி வந்தாள். "இனி என்ன யோசிக்க இருக்கிறது? அம்பிகையே சொல்லிவிட்டாள். பேசாமல் வாருங்கள், போகலாம்" என்று அவரைத் துரிதப்படுத்தினாள்.

"இதோ பார் அலமு! எனக்கு மனசு சமாதானப்படவில்லை. என்ன இருந்தாலும் நாம் கொடுக்கத் தான் வேண்டும். இதெல்லாம்" சீட்டுப் போட்டு எடுத்து முடிவு கட்டுகிற காரியமா?" என்றார் ராம சர்மா.

அதே சமயத்தில் அம்பிகையின் கட்டளையை மீறலாமா என்ற பீதியும் ஒரு புறம் அவர் மனத்தை உறுத்திக் கொண்டுதான் இருந்தது.

"நன்றாக இருக்கிறது உங்கள் விவகாரம்! அப்படியானால் இங்கு ஏன் வரவேண்டும்! தாராளமாகக் கொடுங்களேன். நான் வேண்டாம் என்று குறுக்கே நிற்கவில்லை. நான் சொல்வதைச் சொல்லி விட்டேன். தெய்வமும் அதையே தான் சொல்கிறது. அதையும் மீறிக் காரியம் செய்ய உங்களுக்குத் துணிச்சல் இருந்தால் செய்யுங்கள்" என்று சொல்லிவிட்டு விடுவிடுவென்று முன்னே நடந்தாள் சர்மாவின் தர்மபத்தினி அலமு.

அலமுவின் நடத்தையைக் கண்டு சர்மா திகைத்துப் போனார். உண்மையில் தன்னைவிட அவள் அதிகப் பரிவு காண்பிக்க வேண்டிய விஷயம் அல்லவா அது! அலமு அவளது உண்மையான மன நிலையை மறைத்துத் தன்னை ஏமாற்றுவதற்காக அவ்விதம் வேஷம் போடுகிறாளோ என்று கூட அவருக்குச் சந்தேகம் ஏற்பட்டது.

அலமு வார்த்தையை மீறிச் சர்மா எந்தக் காரியமும் செய்து வழக்கமில்லை. அலமு சர்மாவுக்கு இனியவளாக வாழ்க்கைப் பட்டவள். வாரிசின்றி இருந்த குறையைப் போக்கியவள். தங்கம் போல் ஒரு பெண் குழந்தையைப் பெற்றுத் தன் நீண்ட கால தாபத்தைத் தீர்த்தவள். எனவே அலமு வார்த்தைக்கு என்றுமே அவர் மதிப்புக் கொடுக்கத் தவறியதில்லை. அதனாலேயே அவரால் இப்போது அவள் வார்த்தையை மீறி ஓர் உறுதியான முடிவுக்கு வர முடியவில்லை. அலமுவின் ஆட்சேபனை காரணமாக, தன் மனதிற்குச் சரியென்று பட்ட ஒரு காரியத்தைக் கூட, அவரால் செய்ய முடியவில்லை.

சர்மா கோவிலின் வெளி மதிலுக்கு அருகே வந்து நின்றார். ஓங்கி உயர்ந்து நின்ற கோபுரமும் அதன் உச்சியிலிருந்து ஒளி வெள்ளம் பாய்ச்சிய 'சேர்ச்லைட்' விளக்கும், அற்ப விஷயங்களில் ஈடுபட்டுள்ள அவரது மனத்தைப் பரிகசிப்பது போல் இருந்தன.

அங்கிருந்து வீடு நோக்கி நடந்தார் சர்மா. வழி நெடுக, 'நாளை மாலை என்ன முடிவைத் தெரிவிப்பது' என்ற கேள்வி அவர் மனத்தை இடைவிடாமல் அரித்துக் கொண்டிருந்தது.



சீப்பிரமான காவிரி நதியின் ஒய்யாரப் போக்கையும், அதன் கரைகளில் அமைந்த கிராமங்களின் செழிப்பையும், கிராம மக்களின் அமைதியான வாழ்க்கையையும் நன்கு அறிந்த சர்மாவுக்கு, வயது ஆக ஆக பட்டண வாழ்க்கையில் வெறுப்பு அதிகமாகி வந்தது; உத்தியோகத்தில் உள்ள ஆசை குறைந்து கொண்டே வந்தது.

அவருக்கிருந்ததோ ஒரே பெண் தான். பதின்மூன்று வயது நிரம்பிய கமலிக்குக் கல்யாணம் ஆகிவிட்டால், பிறகு இந்த உலகில் அவருக்குக் கவலை எதுவும் இல்லை. ஆகவே அளவு மீறிச் சம்பாதித்து யாருக்குச் சேர்த்து வைக்கப் போகிறோம் என்ற எண்ணமே தலையெடுத்தது. வாலிப வயதில் வடக்கே ரயில்வே உத்தியோகத்தில் நுழைந்த சர்மா, தமது முப்பது வருட வடநாட்டு வாழ்வுக்கும் வேலைக்குமாக ஒரு முழுக்குப் போட்டு விட்டுக் காவிரி நதிக் கரையோரத்துக் கிராமம் ஒன்றில் குடியேறத் தீர்மானித்துவிட்டார்.

சர்மாவின் மைத்துனி திருச்சியில் இருந்ததால், அவர் முதலில் திருச்சிக்கே நேராக வந்து சேர்ந்தார்.

சர்மா தம்பதிகளின் திடீர் வருகை மைத்துனியின் கணவன் ராமையாவுக்கு வியப்பை அளித்தது. எனினும் சர்மாவின் உத்தேசத்தைத் தெரிந்து கொண்டதும் அவரது முடிவை ராமையாவும் வரவேற்றார். தாமே சர்மாவுக்கென்று நல்ல வீடு ஒன்று பார்த்து விலைக்கே வாங்கிக் கொடுப்பதாயும், அது வரை தமது வீட்டிலேயே இருந்து வரும்படிக்கும் வேண்டிக் கொண்டார்.

சர்மா வந்து சேர்ந்த சில நாட்களுக்குப் பின் ராமையாவின் பெண் பவானியின் கல்யாணத்தைப் பற்றிய பேச்சுகள் அடிபடத் தொடங்கின.

பவானியை ஐந்து வயதில் பார்த்தவர் சர்மா. சில வருஷங்களுக்கு முன் ஒரு முறை அவர் லீவில் வந்து திரும்புகையில் தம்முடன் கூட பவானியையும் அழைத்துச் சென்றார். அப்போது பவானி ஒரு வருடம் வரையில் அவர்களுடைய வீட்டிலேயே இருந்து வந்தாள்.

அப்பொழுது சர்மாவுக்குக் கமலி பிறக்கவில்லை. தங்களுக்கென ஒரு குழந்தை இல்லையே என்ற ஏக்கம் தம்பதிகளை வாட்டி வந்தது.

அந்த நாட்களிலெல்லாம் சர்மா தன் பூரண அன்பையும் ஆசையையும் அள்ளிச் சொரிந்து பவானியைப் போற்றி வந்தார். விதவிதமான ஆடைகளை வாங்கிக் கொடுத்தார். கழுத்தில் பவுன் சங்கிலி ஒன்று செய்து போட்டார்.

அலமுவும் தன் தங்கையின் பெண் என்ற காரணத்துக்காகப் பவானியிடம் அன்புடன் நடந்து கொண்டாள். எவ்வளவு அன்பைச் சொரிந்தாலும் பவானி அலமுவின் சொந்த மகளாகி விடுவாளா! இந்தக் கேள்வி அடிக்கடி அலமுவின் மனத்தில் எழுந்தது.

பவானி பெற்றோருக்கு ஒரே பெண்ணாதலால், வெகு நாள் அவளைச் சர்மாவிடம் விட்டு வைக்க ராமையா விரும்பவில்லை. பவானியை அனுப்பி வைத்தால் பழைய சூன்யம் தமது வீட்டை மறுபடி வந்து சூழ்ந்து கொள்ளும் என்றே சர்மா நினைத்தார். ஆனால் கடவுள் கிருபையால் அலமு கர்ப்பம் தரித்து ஒரு பெண் குழந்தையைப் பெற்ற போது, தாபத்தினால் தவிக்கப் பட்டு வந்த சர்மாவின் மனம் குளிர்ந்தது

* * *

தாம் வந்ததும் வராததுமாக பவானியின் கல்யாணப் பேச்சுகள் நடப்பதைக் குறித்து சர்மாவுக்கு மகிழ்ச்சி பொங்கியது. பழுத்த கனியைப் போல, பௌர்ணமி நிலவைப் போல பவானியிடம் அறிவும் அழகும் பருவமும் நிறைந்து விளங்குவதைக் காணக் காண, சர்மாவுக்கு அந்தப் பெண்ணிடம் ஒரு தனி அபிமானம் வளர்ந்தது. கண் நிறைந்த கணவன் அவளுக்கு வாய்க்க வேண்டும் என்று மனதார அவர் வேண்டிக் கொண்டார். பவானியும் கமலியும் ஒருவரை யொருவர் நிழலைப் போலத் தொடர்ந்து பழகி வந்ததைப் பார்த்துச் சர்மாவின் மனம் பூரித்தது.

இரத்தப் பாசமற்ற சர்மாவும் ராமையாவும் யாதொரு அபிப்பிராய பேதமுமின்றி அன்னியோன்னியமாக இருந்தனர். ஆனால் இரத்தப் பாசமுள்ள சகோதரிகளின் நிலைமை அதற்கு நேர் மாறாக இருந்தது. அவர்களுக்குள் அடிக்கடி ஏற்பட்ட



றிய அபிப்பிராய பேதங்கள் மலையாக வளரத் தொடங்கின.

எனவே நிலைமை முற்றுவதற்குள் சர்மா திருவல்லிக்கேணிக்கு அருகிலுள்ள சீனிவாச நகரில் ஒரு வீடு பார்த்துக் கொண்டு போகத் தீர்மானித்தார். ராமையாவும் இந்த ஏற்பாட்டிற்கு இடம் கொடுக்க வேண்டியதாயிற்று.

சர்மா தனியாகப் பிரிந்து போய் இரண்டு மாதங்கள் கடந்தன. இரு குடும்பத்தினரும் பரஸ்பரம் ஒருவர் வீட்டுக்கு ஒருவர் போய் வந்து கொண்டிருந்தனர். பிரிந்திருப்பதன் காரணமாக, பரஸ்பர மனஸ்தாபங்கள் முற்றுவதற்கு இடமிராமற் போனது சர்மாவுக்கு மிகுந்த திருப்தியளித்தது.

இச் சந்தர்ப்பத்தில், பவானிக்கு வரன் ஒன்று நிச்சயமாகியது. பிள்ளை வீட்டார் பெண் பார்க்க வரப் போவதாகவும் அதற்குக் குழந்தை கமலியுடன் சர்மா தம்பதிகள் வர வேண்டும் என்றும் அழைப்பு அனுப்பியிருந்தார் ராமையா. சர்மா, அலமு, கமலி மூவருமாகப் புறப்பட்டுச் சென்றனர்.

மாப்பிள்ளை கண்ணுக்கு லட்சணமாக இருந்தான். பவானியைப் பார்த்த உடனே அவனுக்கு மாத்திரமல்ல, அவன் பெற்றோர்களுக்குக்கூடப் பிடித்து விட்டது. பையன் நல்ல உத்தியோகத்திலிருந்தான். கண்ணியமான குடும்பத் தொடர்பும் இருந்ததால், 'இந்தக் கல்யாணம் எப்படியாவது முடிய வேண்டும்' என்று சர்மா பிரார்த்தித்தார்.

நடுவில் மார்கழி மாதம் குறுக்கிட்டதால், தை மாதத்தில் கல்யாண நாள் குறிப்பிடப் பட்டது.

## 2

திடீரென்று ஒரு நாள் சர்மாவைத் தேடி ராமையா வந்தார். அவர் முகத்தில் பிரதிபலித்த பரபரப்பையும் கவலையையும் அளவிட்டுச் சொல்ல முடியாது.

"சர்மா! உங்களைத்தான் கடைசியாக நம்பி வந்திருக்கிறேன். நான் சொன்ன வார்த்தை பிசகி வழக்கமில்லை. அவர்களுக்கும் பாக்கு வெற்றிலையும் கொடுத்தாகி விட்டது. மிகவும் நம்பிக்கையான இடத்தில் பணத்துக்கு ஏற்பாடு பண்ணியிருந்தேன். பணம் கைக்கு வந்தது போலத்தான் என்ற பூரண நம்பிக்கையுடன் காரியங்களை ஆரம்பித்து விட்டேன். கடைசியில் யாரைப் பிடித்த துரதிர்ஷ்டமோ, என் நண்பர் கையை விரித்து விட்டார். அவர் மீது சிறிதும் குற்றமில்லை. அவருக்கு இந்த மாதம் பெரும் நஷ்டம் ஏற்பட்டு விட்டது. அவர் மனம் இடிந்து போய் உட்கார்ந்து விட்டார். பங்கு மார்க்கட் விஷயங்களே இப்படித்தான்!

"இனிமேல் அவரை நம்புவதில் பிரயோஜனமில்லை. கல்யாணத்தை இப்போது நிறுத்துவதற்கும் இல்லை. நீங்கள் ரொக்கம் கொடுத்து உதவினால், கல்யாணமாகி இரண்டொரு மாதத்திலே வீட்டைக் கிரயம் செய்து உங்களுக்குத் திருப்பிக் கொடுத்து விடலாம் என்று நினைக்கிறேன்" என்று தழுதழுத்த குரலில் சொன்னார் ராமையா.

ராமையாவின் தர்ம சங்கடமான நிலைமை நன்கு அறிந்து கொண்ட சர்மாவின் மனம் இளகியது. இருந்தாலும் தன் அருமை மனைவி அலமுவைக் கலந்து கொள்ளாமல் அவராக ஒன்றும் வாக்குக் கொடுக்க விரும்பவில்லை.

அக்காவான தன்னை மதித்துத் தன்னிடம் நேரே வராமல் அத்திம்பேரிடம் தன் கணவனை அனுப்பி மசிய வைக்க முயற்சித்ததாக, அலமுவுக்குத் தங்கை மீது கோபம் பொங்கியது.

"சொத்துக்காரர்களிடம் பணம் கொடுக்கல் வாங்கல் வைத்துக் கொள்வது கடைசியில் விபரீதமாகவே முடியும். வீண் சண்டைக்கும் மனஸ்தாபத்திற்கும் இடம் ஏற்படும். முதலில் பணத்தைக் கையிலே வாங்கி வைத்துக் கொள்ள வேண்டும் என்ற முன் யோசனை கூட இல்லாமல் இப்படி ஒரு காரியத்தில் குதித்து விட்டு ஏன் திண்டாடவேண்டும்! இப்படி இருப்பவரை நம்பி மூவாயிரம் நாலாயிரம் என்று கொடுத்துவிட்டு நாம் என்ன செய்வது! அவரிடம் நாம் நோட்டு எழுதி வாங்குவது நன்றாயிருக்குமா! நோட்டு இல்லாமல் அத்தனை பெரிய தொகை கொடுப்பதும் பிசகுதான். கல்யாணம் ஆன பிறகு, இதோ அதோ என்று இழுக்கவிட்டால், நாம் நெருக்கிக் கேட்கத்தான் முடியுமா! கோர்ட்டு வரையிலும் போய்ச் சந்தி சிரிக்க நேரலாம். கொடுத்தாலும் கஷ்டம், கொடுக்கா விட்டாலும் கஷ்டம். கொடுத்து விட்டுக் கஷ்டப்படுவதைக் காட்டிலும் கொடுக்காமல் கஷ்டப்படுவது மேல்" என்று அலமு தன் அபிப்பிராயத்தைச் சர்மாவிடம் ரகசியமாகக் கூறினாள்.

அலமுவின் குட்டிப் பிரசங்கத்தைக் கேட்ட சர்மா அசந்து போய் விட்டார். ஆனால் அவள் கூறுவதில் உள்ள உண்மையையும் அவரால் ஒதுக்கித் தள்ள முடியவில்லை. பணத்தைக் கொடுத்துப் பெரும் மனஸ்தாபத்தை விலைக்கு வாங்குவது போலாகி விட்டால்......!

அலமு மீண்டும் தொடர்ந்தாள். "உங்களைப் போல அவரும் 'ரிடையர்' ஆனவர் தானே! இனிமேல் பென்ஷனைத் தவிர அவருக்கு வேறு சம்பாத்தியமில்லை. எப்படிப் பணத்தைத் திருப்பிக் கொடுப்பாராம்! வீடு பெரிய வீடுதான். அவ்வளவு பெரிய வீடு அவருக்கு வேண்டாம் தான். அத்தனை பெரிய வீட்டை வாங்கிக் கொள்ள யார் தயாராக இருக்கிறார்கள்! நாம் வந்த உடனே வீட்டை பாதியாகத் தடுத்து நமக்குக் கொடுத்திருக்கலாம். அதற்கெல்லாம் மனம் வரவில்லை. பணத்



துக்கு மட்டும் இப்போது உதவி வேண்டியிருக்கிறது. நாம் இரண்டொரு மாதம் அவர்கள் வீட்டில் இருக்கிறதற்குக் கூட, அதற்கு, இதற்கு என்றெல்லாம் பணம் வாங்கி விட்டார்கள். இவர்களால் நமக்கு என்ன பிரயோசனம்! நாம் அவர்கள் பெண்ணை அழைத்து ஒரு வருஷம் சீராட்டினோமே! நம்முடைய சமயத்துக்கு அவர்கள் கையாலே ஒரு பட்டுத் துணிக்கு வழியுண்டா!"

அலமு கூறியதெல்லாம் அப்படியே உண்மைதான். இருந்தாலும் தாம் உதவி செய்யாவிட்டால், கல்யாணம் நின்று விடுமே என்று சர்மா கலங்கினார். எனினும் இறுதியில் அலமுவின் அபிப்பிராயத்துக்கு விரோதமாக நடந்து கொள்ள அவர் விரும்பவில்லை.

"'பிராவிடெண்ட் பண்டு' பணம் கைக்கு வர நாள் ஆகும்போல் இருக்கிறது. கல்யாண காரியம் அல்லவா! ஆகவே வேறு யாரையாவது அனுப்பி ஏற்பாடு செய்வதுதான் நல்லது" என்று சர்மா ஒரே போடாகப் போட்டுவிட்டார்.

சர்மாவின் பதிலைக் கேட்ட ராமையா பிரமை தட்டிப் போனார். வெகு நேரம் திகைத்துப் போய் ஒன்றும் பேச முடியாமல் உட்கார்ந்திருந்தார். கடைசியாக, ராமையா அழாக் குறையாக விடை பெற்றுக் கொள்வதைக் கண்ட சர்மாவின் மனச் சாட்சி அவரை உறுத்தத் தொடங்கியது.

## 3

ராமையா சென்ற பின் அவருடைய நிராதரவான நிலைமை சர்மாவின் மனக் கண் முன் உருவெடுத்து நின்றது. அந்த உருவம் ராமையாவைக் காட்டிலும் பன்மடங்கு அதிக உணர்ச்சியுடன் அவருக்காகப் போராடுவது போலிருந்தது. அமைதியாக வாழ வந்த இடத்தில், வாழ்க்கையின் அந்த மண வேளையில், பணத்துக்காகப் பொய் சொல்லத் தான் துணிந்ததை எண்ணிச் சர்மா வெட்கமடைந்தார். பவானியின் வாழ்வில் ஏற்படக்கூடிய பல பலன்களைச் சிந்திக்க முற்பட்ட போது அவர் மனம் புழுவாய்த் துடித்தது.

"இந்த விஷயம் பவானிக்குத் தெரிந்தால், அவள் என்ன நினைப்பாள்......! அவளுடைய இளம் உள்ளம் என்ன பாடுபடும்! அவளது இன்பக் கனவுகள் எப்படிச் சிதறிப்போகும்! ஒருவேளை அவள் கல்யாணம் நின்று விடுமோ! அப்படியாகிவிட்டால்......! அதற்கு முழுப் பொறுப்பாளியும் நான்தானே!"

இத்தகைய சிந்தனைகளில் ஆழ்ந்திருந்த சர்மாவின் மனத்தில், 'பணம் கொடுக்கத் தான் வேண்டும்' என்ற எண்ணமே வலுத்துக் கொண்டு வந்தது. அவர் தன் மன நிலையை அலமுவிடம் கூறியபோது அவள் வெகுண்டாள்.

சர்மா பிடிவாதமாக இருக்கவே, 'கொடுப்பதா, வேண்டாமா' என்பதைக் கோவிலில் சீட்டுப் போட்டுப் பார்த்து முடிவு கட்டுவதாக ஏற்பாடாயிற்று.

நல்ல காரியத்துக்குத் தெய்வம் துணை செய்யும் என்று நினைத்தார் சர்மா. ஆனால் திருவுளச் சீட்டின் முடிவு......! அலமுவுக்குச் சாதகமாயிற்று!

மறு நாள் பிற்பகல் மூன்று மணி வரைக்கும் நல்ல உறக்கத்திலிருந்த சர்மா, திடீரென்று அலறியடித்துக் கொண்டு எழுந்து உட்கார்ந்தார்.

"என்ன! என்ன!" என்று பதறிக் கொண்டு அவர் அருகில் வந்தாள் அலமு.

"பணம் கிடைக்காததினால் பவானி இரண்டாம் தாரமாக வாழ்க்கைப் படுவது போல் கனவு கண்டேன். கல்யாணத்தில் வயோதிக மாப்பிள்ளையைப் பார்த்து விட்டுப் பவானி குலுங்கக் குலுங்க அழுகிறாள். எல்லோரும் நான்தான் குற்றவாளி என்று என்னைத் திட்டுகிறார்கள்.—இப்படி யெல்லாம் கனவில் தோன்றியது" என்றார் சர்மா. அவர் குரலில் தொனித்த பீதி அலமுவை என்னவோ செய்தது.

சர்மா மீண்டும் பலத்த சிந்தனையில் ஆழ்ந்தார்.

சுமதி பிறக்காமல் இருந்திருந்தால் பவானியைத் தானே பெண் போலக் கருத வேண்டும்! அப்படியிருக்க அவளுடைய கல்யாணத்தில் நியாயமாகத் தனக்கும் பொறுப்பு இருக்கிறதல்லவா!

"அலமு! நான் பவானியின் கல்யாணத்துக்குப் பணம் கொடுக்கத் தான் போகிறேன்! என்ன ஆனாலும் சரி! இது நிச்சயம்! இதை யாரும் தடுக்க முடியாது" என்று வெறி பிடித்தவர் போலச் சர்மா பலமாகக் கத்தினார்.

எதிர்த்துப் பேசும் தைரியம் கூட அப்போது அலமுவை விட்டு எங்கேயோ ஓடி ஒளிந்து கொண்டது! அலமு அவரையே கண் கொட்டாமல் பார்த்தபடி நின்றாள்.

கல்யாணத்தை நிறுத்தி வைக்க வேண்டி நேர்ந்த நிர்ப்பந்தத்தைக் குறித்து ராமையா சம்பந்திக்கு ஒரு கடிதம் எழுதி யிருந்தார். அதைத் தபால் பெட்டியில் போடுவதற்காக வந்த ராமையாவை வழியிலேயே சந்தித்தார் சர்மா.

"பாதிப் பணத்திற்கு அவசரமாகத் தந்தி யடித்திருக்கிறேன். பணம் இரண்டொரு நாட்களில் வந்துவிடும். கல்யாண காரியங்களை நிறுத்த வேண்டாம். மேற்கொண்டு நடத்துங்கள்" என்றார் சர்மா.

அதைக் கேட்டதும் ராமையாவின் கையிலிருந்த கடிதம் நழுவிக் கீழே விழுந்தது. சர்மாவின் கைகளை அழுத்திப் பிடித்தவாறே, "சர்மா! இந்த உதவியை என் ஆயுள் பூராவும் மறக்க மாட்டேன்" என்று உணர்ச்சி மேலிட நாத் தழுதழுக்கக் கூறினார் ராமையா.

அம்பிகையின் சன்னதி வழியாகச் சென்ற சர்மா, "அம்பிகே! ஆத்மாவை அழுக்காக்கிக் கொண்டு உன்னிடம் ஆலோசனைக்கு வந்தேன். என்னைப் பெரிதும் சோதனை செய்து விட்டாய்! போதும். என் மனம் இப்படி மாறியதற்கு உன் அருளே காரணம். பவானியின் துயரத்துக்கு நான் காரணமாகி விடாமல் என்னைக் காப்பாற்றினாய்" என்று கண்களில் நீர்மல்க, பக்திப் பரவசமாகி வணங்கி நின்றார்.

அதே சமயம் சர்மாவின் வீட்டில் அம்பிகையின் படத்தை அலமு ஹிருதய பூர்வமாக நமஸ்கரித்தாள்.

"அம்பிகே! கோவிலில் அவருக்குத் தெரியாமல் திருவுளச் சீட்டை நான் மாற்றியதன் மூலம் மகா அபசாரம் செய்து விட்டேன். எதிலும் என்னைப் பரிபூரணமாக நம்பும், என் வார்த்தைக்கு மதிப்புக் கொடுக்கும் உத்தமரான கணவருக்குத் தெரியாமல் அப்படிச் செய்தது பெரிய குற்றம். என்னையும் என்னுடைய குடும்பத்தையும் காத்தருள். அவரது மனத்தை மாற்றி, கல்மஷம் அடைந்திருந்த என் மனமும் தெளிவடையும்படி செய்த உன் பெருமையே பெருமை" என்று கண்ணீர் பெருகப் பிரார்த்தித்தாள் அலமு.

திண்ணையடி ஜன்னலருகே உட்கார்ந்த வண்ணம் வெளியுலகை நோக்கிக் கொண்டிருந்தாள் ஜயம். வானம் மப்பும் மந்தாரமுமாய் விளங்கியது. வெளியுலகைப் போலவே அவள் உள்ளமும் சோர்ந்து போய்க் கிடந்தது.

"ஜயம்!" என்று யாரோ வாசலில் கூப்பிடும் குரல் கேட்டதும் அவள் எழுந்திருந்து வாசல் பக்கம் வந்தாள். பக்கத்து வீட்டுப் பர்வதம் வாசலில் வந்து நின்றாள்.

"என்ன ஜயம்! நீ வீட்டிலா இருக்கிறாய்? நாடகத்துக்குப் போயிருப்பாய் என்றல்லவோ நினைத்தேன்! உன் அகத்துக் காரர் நடிக்கிற நடிப்பைப் பார்த்து ஊரெல்லாம் அதிசயிக்கிறது. நாடகம் பார்க்க வருகிறவர்களையெல்லாம் அவர் வயிறு வெடிக்கும்படி சிரிக்கப் பண்ணுகிறாராம். நீயானால்.."

"போதுமே! என் பிழைப்பே ஒரே சிரிப்பாய்ச் சிரிக்கிறது. இந்த அழகில் நாடகம் பார்க்க வில்லை என்று நீ குறைப்பட்டுக் கொள்கிறாயே?"

"அடடா! நாடகம் பார்க்கப் போகவில்லையா என்று கேட்டால் உன் சொந்தப் புராணத்தைச் சொல்ல ஆரம்பித்து விட்டாயே?"

"ஆமாம்! உன்னைப் போலவே சிலருக்குப் பிறத்தியாரின் கஷ்டம் தெரிவதில்லை. உன் அகத்துக்காரர் நிறையச் சம்பாதித்து உனக்கு நகையும் நட்டும் செய்கிறார் என்கிற பெருமையில், நீ இப்படிப் பிறத்தியார் மனத்தைப் புண்படுத்துகிறாய்" என்றாள் ஜயம்.

"நீ ஏன் இப்படிக் குதர்க்கமாக எடுத்துக் கொள்கிறாய்? உன் வீட்டுக்காரர் நடிக்கும் நாடகத்துக்குப் போகவில்லையா என்று கேட்டதில் என்ன தவறு? அப்படி ஏதாவது தவறு இருந்தால் சொல்லு, அம்மா! உன் காலில் விழுந்து மன்னிப்புக் கேட்டுக் கொள்கிறேன்" என்று எக்காளத்துடன் மொழிந்தாள் பர்வதம்.

"போதும்! நீ எனக்காக ஒன்றும் முதலைக் கண்ணீர் வடிக்க வேண்டாம். எரிகிற கொள்ளியில் எண்ணெயை வார்ப்பதுபோல ஏன் என்னைச் சித்திரவதைக் குள்ளாக்குகிறாய்?" என்று கூறிவிட்டு மேலும் பேச்சு வளராமல் இருப்பதற்காக வீட்டினுள் சென்று விட்டாள் ஜயம்.

"உன்னையும் ஒரு தோழி என்று நினைத்துப் பேச வந்தேனே, என் புத்தியைச் சொல்லணும்" என்று முணுமுணுத்துக்கொண்டே பர்வதம் அங்கிருந்து நகர்ந்தாள்.

வீட்டினுள் வந்த ஜயத்துக்குத் துக்கம் தாங்க முடியவில்லை. பர்வதத்தின் மேலுள்ள கோபமெல்லாம் அவளுக்குத் தன் தந்தைமேல் திரும்பியது.

'இந்த அப்பா என்னைக் குளத்திலோ குட்டையிலோ தள்ளுவது போல், ஒரு வக்கீல் குமாஸ்தாவிடம் கொண்டு போய்ப் பிணைத்து விட்டாரே! உணவுக்கும் உடைக்கும் ஒரு குறையுமின்றி இருந்தவளை இப்படிச் சங்கடப்படும்படி வைத்து விட்டாரே! இல்லாவிட்டால் பர்வதம் இடித்துக் கூறும்படி நான் இருக்க வேண்டி நேருமா?' என்று தனக்குள் கூறிக் கொண்டாள். வீட்டில் ஓரிடத்தில் படுத்துக் கொண்ட ஜயத்தின் கண்கள் அசதியினாலும், துயரத்தினாலும் தாமாகவே மூடிக்கொண்டன.




ஜயம் நடுத்தரப் பணக்காரக் குடும்பத்தில் பிறந்தவள்தான். அவளுக்கு மூன்று சகோதரிகளும் ஒரு தம்பியும் இருந்தனர். அவளுடைய சகோதரிகளையெல்லாம் அவள் தகப்பனார் நல்ல இடத்தில் நிறையச் செலவழித்துக் கல்யாணம் செய்து கொடுத்திருந்தார். ஆனால் ஜயத்தின் துரதிர்ஷ்டமோ என்னமோ, அவளுக்குக் கல்யாண வயதான பொழுது அவருடைய கை நொடித்து விட்டது. எனவே அவர் ஏழைக் குடும்பத்தில் பிறந்த மகாதேவனுக்கு ஜயத்தை மணமுடித்து வைக்கும்படி ஆகி விட்டது.

முதலில் மகாதேவனுடைய அழகில் மதிமயங்கி அவனுடைய ஏழைமையை மறந்திருந்தாள் ஜயம். நாளாக ஆக மகாதேவனுடைய சொற்ப வருவாயில் தன்னுடைய தேவைகளை நிறைவேற்றிக் கொள்ள இயலாதபோது, ஜயத்துக்கு வாழ்க்கை வேம்பாகக் கசந்தது. அன்பும் ஆசையும் மிகுந்த மகாதேவன் மீது அவளுக்கு வெறுப்பு மிகுந்தது. அடிக்கடி அவன்மீது எரிந்து எரிந்து விழுந்தாள். ஆனால் மகாதேவன் அவளிடம் சிறிதளவாவது வருத்தமோ, கோபமோ அடையவில்லை. அதற்குப் பதிலாக அவனுக்கு அவள் மீதுள்ள அன்பும் ஆசையும் பெருகி வளர்ந்தன.

மகாதேவன் வக்கீல் வேதாசலத்தினிடம் குமாஸ்தாவாக இருந்தான். நாள் முழுதும் கேஸ் கட்டைக் கையில் தூக்கிக் கொண்டு கோர்ட்டுக்கும் வக்கீல் வீட்டுக்கும் அலைவான். எவ்வித மனச் சலிப்புமின்றி நாள் முழுதும் உழைப்பான். மாதம் பிறந்ததும் நாலைந்து தேதிகளில் ஐம்பது ரூபாய் அழுவார் வக்கீல் வேதாசலம். ஆம், சட்டியில் இருந்தால்தானே அகப்பையில் வரும்? வக்கீலுக்கே சொற்ப வருமான வரும் பொழுது அவர் எங்கிருந்து சந்தோஷத்துடன் கொடுப்பார்?

மகாதேவனுக்கு ஏழைமையை அளித்த கடவுள், அவனுக்கு இலக்கிய ரசனையிலும், நடிப்பிலும் திறனையும்

# பத்து ரூபாய்

பி.எஸ்.மணி

குறை வைக்க வில்லை. வக்கீல் குமாஸ்தாக்கள் சேர்ந்து நடத்தும் அமெச்சூர் நாடக சபையில் மகாதேவன்தான் ஹாஸ்ய நடிகனாக விளங்கினான். பகீர் என்று வெடிக்கும் அவனுடைய ஹாஸ்யங்களைக் கேட்டுச் சிரிக்காதவர் இல்லை. நாடகம் பார்க்க வருபவர்களை எல்லாம் வயிறு வெடிக்கும்படி சிரிக்கப் பண்ணுவதில் அவனுக்கு நிகர் அமெச்சூர் நாடக சபையில் யாரும் இல்லை என்று புகழ் பெற்றிருந்தான்.

எத்தனை பேர் அவன் நடிப்பைப் போற்றிப் புகழ்ந்தாலும் மகாதேவனுக்குத் தன் மனைவி ஜயம் ஒரு தடவையாவது தன் நடிப்பைப் பார்த்துப் பாராட்ட வேண்டும் என்று ஆசையாக இருந்தது. அவன் நாடகம் நடக்கும் தினங்களிலெல்லாம் ஜயத்தை வருந்தி வருந்தி அழைப்பான்.

ஆனால் அவள், "போதுமே! நம்முடைய ஏழைமை நிலை வீட்டோடு இருந்தால் போதாதா? அங்கே போயும் நிலைகாட்ட வேண்டுமா? நான் வரவில்லை" என்று மறுத்து விடுவாள்.

அவளுடைய பதிலைக் கேட்டு மகாதேவன் சிறிதளவாவது மனமிடிந்து போவானா" என்று கேட்டால், அதுதான் இல்லை! 'அவள் சொல்வதிலும் நியாயம் இருக்கத்தானே செய்கிறது?' என்று தன்னைத் தானே தேற்றிச் சமாதானம் செய்து கொள்வான்.

அன்றிரவு வெகு நேரங் கழித்து வீடு திரும்பினான் மகாதேவன். 'மண வாழ்க்கை' என்ற நாடகத்தில் பிரமாதமாக நடித்த மகாதேவனை எல்லோரும் கொண்டாடிப் புகழ்ந்தனர். பலருடைய பாராட்டுதல்களைப்பெற்று அவன் உள்ளம் பூரிப்பிலும் [illegible] இருந்தது.

ஆனந்த மிகுதியால் கால் தரையில் பாவாமலே நடந்துவந்த மகாதேவன் வீட்டினுள் நுழைந்ததும், நுழையாததுமாக, "ஜயம்! ஜயம்!" என்று கூவினான். ஆனால் ஒரு பதிலும் வரவில்லை. அதற்குப் பதிலாக வீட்டில் ஆழ்ந்த மௌனம் குடிகொண்டிருந்தது. ஜயத்தின் குரல் கேட்காததைக் கண்டதும் அவள் தூங்கி விட்டாளோ என்று எண்ணித் தேடிப் பார்த்தான்.

ஒரு மூலையில் ஜயம் அலங்கோலமாகப் படுத்திருப்பதைக் கண்டதும் அவன் திடுக்கிட்டான். ஆனந்த மிகுதியில் துள்ளிக் குதித்துக் கொண்டு வருபவனுக்குத் திடீரென்று காலில் கல் இடறினால் எப்படி இருக்கும்? அதே நிலையில் தான் அப்பொழுது மகாதேவன் இருந்தான்.

"ஜயம்! எழுந்திரு! உன் உடம்புக்கு என்ன?" என்று கூறித் தட்டி எழுப்பினான் மகாதேவன். ஜயம் திடுக்கிட்டு விழித்தெழுந்தாள்.

"என்ன? அசந்து போய்த் தூங்கி விட்டாயா? வீடு திறந்து கிடக்கிறது என்ற சிந்தனையில்லாமலேயே உறங்கிக்கொண்டிருக்கிறாயே?"

"உங்கள் வீட்டில் இருக்கும் லட்ச ரூபாய் ஆஸ்தியை யாராவது தூக்கிக் கொண்டு போய் விடுவார்களா?" என்ற ஜயத்தின் ஆக்ரோஷமான பதில் அவனைத் தூக்கி வாரிப் போட்டது.

அவன் சமாளித்துக் கொண்டு, "ஜயம்! நீ நாடகத்துக்கு வராதது எனக்கு எவ்வளவு குறை, தெரியுமா? என் நடிப்பைப் பாராட்டி எத்தனை பேர் புகழ்ந்தார்கள்? அதைக் கண்டு களிக்க நீ வரவில்லையே? இதோ, பார்! எனக்குப் போட்ட ரோஜாப் பூ மாலையைக் கொண்டு வந்திருக்கிறேன். அந்த மாலையிலுள்ள அழகிய ரோஜா மலர்களையெல்லாம் தொடுத்து உன் தலையில் சூட்டி மகிழவேண்டும் என்று எனக்கு ஆசை" என்றான்.

"போதுமே! உங்கள் சுய புராணத்தைக் கொஞ்சம் மூட்டை கட்டி வையுங்கள். நகையும் நட்டும் போட்டு அழகு பார்த்தாகிவிட்டது. இப்பொழுது என் தலையில் பூச் சூட்டி அழகு பார்க்காததுதான் குறைந்து போய் விட்டதாக்கும்!"

அவளுடைய தாக்குதலைக் கண்டு மகாதேவன் அயர்ந்து போய்ப் பின் வாங்கினான். அவனையுமறியாமல் அவன் கையிலிருந்த ரோஜா மாலை நழுவிக் கீழே விழுந்தது. மாலையிலுள்ள பூக்கள் விழுந்த வேகத்தில் உதிரியாகச் சிதறி விழுந்தன. அவையெல்லாம் அவனுடைய ஆசை நிராசையாகிவிட்டதை எடுத்துக் காட்டின.

இரண்டு நாட்கள் கழிந்தன. ஜயம் காலையில் காப்பி அடுப்பை மூட்டிக் கொண்டிருந்தாள். மகாதேவன் தயங்கியபடி அவளருகில்

வந்து, "ஜயம்! இன்று வக்கீல் வீட்டுக் குழந்தைக்குப் பிறந்த நாள். அந்த அம்மாள் உன்னை அழைத்து வரச் சொன்னாள்" என்றான்.

"நான் ஒன்றும் அவர்கள் வீட்டுக்கு வரவில்லை. நீங்கள்தான் அவர்கள் வீட்டில் வேலை செய்கிறீர்கள். போக வேண்டும். நான் எதற்கு?"

"வக்கீல் வீட்டு அம்மாள், நீ வந்தால் தனக்கு ஒத்தாசையாயிருக்கும் என்றாள். நூறு தடவை உன்னை அழைத்து வரும்படி......"

"பார்த்தீர்களா? என்னை எதற்காக வக்கீல் வீட்டு அம்மாள் அன்புடன் அழைத்தாள் என்பதற்குக் காரணம் இப்பொழுதுதான் புரிந்தது. சமையல்காரனைப் போட்டால் செலவழிந்து விடுமே என்று எண்ணி என்னை அழைத்திருக்கிறாள்" என்றாள் ஜயம்.

"ஜயம்! தயவு செய்து எனக்காக இன்று மட்டும் வந்துவிடு. உன்னை அழைத்துப் போகாவிட்டால் அந்த அம்மாள் ரொம்பக் கோபப்படுவாள்!"

"கோபப்பட்டால் படட்டுமே! நீங்கள்தான் ஒரு நாளைக்குப் பதினறு மணி நேரம் அவர்களுக்காக உழைக்கிறீர்கள். நானும் அவர்கள் வீட்டில் சமையல் காரியாக உழைக்க வேண்டுமா?" என்றாள் ஜயம் கோபத்துடன்.

மகாதேவன் பல தடவைகள் கெஞ்சிக் கேட்டுக் கொண்டதால், ஜயம் வேண்டாவெறுப்பாகச் சம்மதித்தாள்.

"சரி! உங்களுடைய வற்புறுத்தலுக்காக நான் மத்தியானமாக வந்து வெற்றிலைப் பாக்கு வாங்கிக் கொண்டு வருகிறேன்" என்றாள்.

* * *

ஜயம், மத்தியானம் பன்னிரண்டு மணிக்குச் சாப்பிட்டு விட்டு வக்கீல் வீட்டுக்குப் புறப்பட்டாள். அவர்கள் வீட்டில் நுழைந்தபோது பிரமாதமாக விருந்து நடந்து கொண்டிருந்தது. வக்கீல் வீட்டார் விருந்தினர்களை உபசரிப்பதில் முனைந்திருந்ததால், ஜயம் வந்ததைக் கவனிக்கவில்லை. ஜயத்துக்குத் தன்னை யாரும் 'வா' வென்று அழைக்காதது மன வருத்தத்தை யளித்தது.

அதைச் சமாளித்துக் கொண்டு அவள் உள்ளே சென்றாள். அவளை யாரும் 'உட்காரு' என்று சொல்லவில்லை. திக்குத் தெரியாத காட்டில் திசை தப்பி வந்தவள் திண்டாடுவதைப் போல, அவள் உள்ளே போகவும் முடியாமல் வீட்டுக்குத் திரும்பிப் போகவும் முடியாமல் திகைத்து நின்றாள். சிறிது நேரம் அப்படியே பதுமை போல் நின்று விட்டு, கோபமும் அவமானமும் தாங்க முடியாமல் அங்கிருந்து ஓட்டமும் நடையுமாய் வீட்டை நோக்கி விரைந்தாள் ஜயம்.

வீட்டுக்கு வந்ததும் அவளுக்கு அடக்கி வைத்திருந்த துக்கமெல்லாம் பீறிக் கொண்டு கிளம்பியது. வக்கீல் வீட்டாரின் மீது அவளுக்கு ஆத்திரம் வந்தது. அதை விடத் தன்னை வற்புறுத்தி அழைத்துச் சென்ற கணவனின் மீது கோபம் பொங்கிக் கொண்டு வந்தது.

மூன்று மணிக்கு மகாதேவன் வீட்டுக்கு வந்தான். வந்ததும் வராததுமாக, "என்ன ஜயம்! நீ அவர்கள் வீட்டில் அரை நிமிஷங்கூடத் தாமதியாமல் வந்து விட்டாயே? அந்த அம்மாள் வந்தவர்களை உபசரித்து விட்டு உன்னை வந்து பார்த்தபொழுது காணவில்லையாம். அவர்கள் மிகவும் வருத்தப் பட்டார்கள்" என்றான்.

அதைக்கேட்டதும் அடங்கியிருந்த அவளுடைய ஆத்திரம் மறுபடியும் பொங்கிப் பிரளயமாகியது. "இந்தாருங்கள்! நான் உங்கள் வீட்டில் இனி ஒரு கணமும் தங்கியிருக்க மாட்டேன். என்னை இப்பொழுதே பிறந்தகத்தில் கொண்டு போய் விட்டு விடுங்கள்" என்றாள் ஜயம் அழுது கொண்டே.

"ஜயம்! அவர்கள் வேண்டுமென்று உன்னை அவமானப்படுத்தவில்லை. விருந்தினர்களை உபசரிக்கும் மும்முரத்தில் உன்னைக் கவனிக்கவில்லை" என்று சாந்தப்படுத்தினான் அவன்.

"போதும்! அவர்களுக்காக நீங்கள் பரிந்து பேச வேண்டாம். நான் நாலு பேர்கள் முன்னிலையில் அவமானப் பட்டது போதும். இனி நான் இங்கே இருக்கத் தயாராயில்லை" என்று குதித்தாள் ஜயம்.

"ஜயம், அவசரப்படாதே! இப்பொழுது என் கையில் பணமில்லை. சம்பளம் வந்ததும் நானே உன்னைப் பிறந்தகத்தில் கொண்டு போய் விட்டு விடுகிறேன்" என்றான் அவன்.

"அதெல்லாம் முடியாது. இன்றே நான் போயாக வேண்டும்."

ஜயத்தின் பிடிவாதத்தைக் கண்டு மனமுடைந்து போய் மகாதேவன் வெளியில் சென்றான். ஜயம் தன் புடவை, துணி மணிகளையெல்லாம் ஒரு பெட்டியில் அடைத்து வைத்துக் கொண்டு ஊருக்குப் புறப்படத் தயாரானாள். தன் கணவனின் வரவை ஆவலுடன் எதிர்பார்த்து வாசலுக்கும் உள்ளுக்குமாக நூறு தடவை நடந்தாள்.

வெகு நேரம் கழித்து மகாதேவன் வீடு திரும்பினான். அவன் முகம் களையிழந்திருந்தது. அவன் உடல் சோர்ந்திருந்தது. அவன் தள்ளாடி நடந்து கொண்டே ஜயத்தின் அருகில் வந்து, "இந்தா ஜயம்! ரயில் செலவுக்கு வேண்டிய பணம்!" என்று கூறிப் பையிலிருந்து பத்து ரூபாய் நோட்டை எடுத்துப் போட்டான். பணத்தோடு ஒரு சீட்டும் சேர்ந்து கீழே விழுந்தது.

ஜயம் குனிந்து பணத்தை எடுத்தாள். அந்தப் பணத்தோடு விழுந்த சீட்டையும் எடுத்துப் பார்த்தாள். அதில் எழுதி யிருந்த விஷயத்தைப் படித்ததும் ஜயத்துக்குத் தலை 'கிர்' ரென்று சுற்றியது.

அவளை மெய் சிலிர்க்கும்படி செய்தது அந்தச் சீட்டில் எழுதி யிருந்த கீழ்க்கண்ட வாசகந்தான். "**ஜெனரல் ஆஸ்பத்திரியிலிருந்து இரத்த தானத்துக்காகப் பெற்றுக் கொண்டது ரூபாய் பத்து.**"

திக்பிரமை பிடித்தவள்போல் அவள் அப்படியே நின்றாள். அவள் மனத்தில் பலவித மனப் போராட்டமும், கொந்தளிப்பும் எழுந்தன.

"ஆஹா! என்னுடைய சிறிய ஆசையைப் பூர்த்தி செய்வதற்காக அவர் எத்தகைய துணிச்சலான காரியத்தில் புகுந்து விட்டார்! அவருடைய பேரன்பின் எல்லைக்கு ஈடு இணை உண்டா? அதைத் தெரிந்து கொள்ளாத பாவி நான்......" என்று அவள் வாய் அரற்றியது.

ஏதோ ஆவேசம் வந்தவளைப்போல் ஓடினாள். தன் கணவனின் கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு, "என்னை மன்னித்து விடுங்கள். உங்களுக்குப் பெருந் தீங்கு செய்துவிட்டேன். என்னை மன்னித்து ஏற்றுக் கொள்ளுங்கள்!" என்று விம்மலுக்கிடையில் கூறினாள் ஜயம். அவள் கரு விழிகளிலிருந்து பெருகிய நீர் அவன் பாதங்களை நனைத்தது.

"ஜயம்! உன்மீது எனக்குச் சிறிதும் கோபமில்லை. உன் இஷ்டம்போல் பிறந்தகத்துக்குப் போய்விட்டு வா" என்றான் மகாதேவன் தளர்ந்த குரலில்.

"முடியாது! உங்களைப் பிரிந்து செல்ல முடியாது. நீங்கள் இருக்குமிடந்தான் எனக்குச் சொர்க்கம். தாங்கள் என்ன கட்டளை யிட்டாலும் இனி சிரமேற் கொண்டு பணியாற்றுவேன்" என்று மொழிந்தாள் ஜயம்.

அவன் கண்களில் தோன்றிய கலக்கம் இருந்த இடந் தெரியாமல் மறைந்தது. அவன் முகத்தில் என்றும் கண்டிராத மலர்ச்சி அப்பொழுது தோன்றியது. ஜயத்தின் மன மாற்றத்தைக் கண்டு அப்படியே திகைத்துப் போய் விட்டான் மகாதேவன்.

அன்று தீபாவளி. ஜயம் புதிய நூல் புடவையைக் கட்டிக் கொண்டு மலர்ச்சியுடன் மகாதேவன் முன் தோன்றினாள். புத்தாடை புனைந்து நின்ற மகாதேவன் அவள் வந்ததை பார்த்ததும், "ஜயம்! இன்று மாலை எங்கள் அமெச்சூர் நாடக சபையினர் நாடகம் நடத்தப் போகின்றனர். நானும் நடிக்கப் போகிறேன். உனக்கு இஷ்டமிருந்தால்.." என்று இழுத்தான்.

"என்ன! இஷ்டமிருந்தால் என்று சொல்லிவிட்டீர்கள்! நீங்கள் நடிக்கும் நாடகத்தைப் பார்க்க நான் துடித்துக் கொண்டிருக்கிறேன். என்னைக் கட்டாயம் அழைத்துப் போங்கள்" என்று ஆனந்தத்துடன் கூறினாள் ஜயம்.

# 'அன்புள்ள ரேவதி'

ஸோமாஸ்





மகாராணிக் கல்லூரி மாணவிகள் எந்தக் காரியம் செய்தாலும், உமாவும் ரேவதியும் அதில் முக்கிய அங்கம் வகிக்காமல் இருக்க மாட்டார்கள். பிரசங்கம், வாக்குவாதம், இலக்கிய விமர்சனம், நடனம், சங்கீதம் முதலிய எல்லா விஷயங்களிலும் அவர்கள் இருவருடைய பெயர்கள்தான் அடிபடும். 'ரேவதிக்கு உடம்பு சரியில்லையாம். நம் சங்க ஆண்டு விழாவை ஒத்திப் போட வேண்டியதுதான்', 'உமா, ரேவதி இருவருக்கும் வருவதற்குச் சரிப்படவில்லையாம். நமது உல்லாசப் பிரயாணத்தை ஒத்திப் போடவேண்டியதுதான்!' என்று மாணவிகள் எல்லாவற்றுக்கும், உமா, ரேவதியின் சௌகரியத்தை ஒட்டியே ஏற்பாடு செய்வார்கள்.

உமாவும் ரேவதியும் இணைபிரியாத தோழிகள். அவர்களைப் பற்றி மற்ற மாணவிகள் குறிப்பிடும் போது, 'பூவும் மணமும் போல, பாலும் நீரும் போல' என்றெல்லாம் உபமானங்களைச் சொல்லிக் கொண்டு திருப்திப்பட மாட்டார்கள். உமாவையும் ரேவதியையும் போல என்று அவர்களுக்கு அவர்களையே உபமானமாகச் சொல்லி விடுவார்கள்!

உமா, ரேவதி இருவரும் நல்ல அழகிகள். வயதும் சம வயதுதான் — பதினெட்டு. ஆனால் செயற்கை அழகுச் சாதனங்களைக் கொண்டு அவர்கள் தங்கள் இயற்கை அழகைக் கெடுத்துக் கொள்ள வில்லை. பொதுவாக, இருவரும் அழகிகள் தான் என்றாலும் அவர்கள் அழகில் வித்தியாசம் இருக்கத்தான் செய்தது.

ரேவதியைக் கொடியில் மலரும் புஷ்பத்துக்கு ஒப்பிட்டால், உமாவைச் செடியில் மலரும் புஷ்பத்துக்கு ஒப்பிடலாம். கொடியில் மலரும் புஷ்பம் ஆடி அசைந்து மணம் வீசி அனைவரையும் தன்னிடத்துக்கு இழுத்துக் கொள்ளும். ஆனால் செடியில் பூத்த மலர் அப்படியல்ல; தான் இருந்த இடத்தில் இருந்தே மணம் வீசித் தன்னை அணுகி வருபவரை மட்டும் மகிழ்வூட்டும்.

ரேவதி, எல்லோரிடத்திலும் கலகலப்பாகப் பேசித் தன் சரள சுபாவத்தினால் யாரையும் எளிதில் கவர்ந்து விடுவாள்.

அதற்கு நேர்மாறாக உமா யாருடனும் தானாக வலுவில் பேச மாட்டாள். ஆனாலும் மலர்ந்த முகத்தோடு எல்லாச் சம்பாஷணைகளிலும் கலந்து கொள்ளுவாள். ரேவதி இல்லாமல் அவளுக்கு யாருடனும் பேச வராது. யாரா விருந்தாலும் ரேவதி தன் வாய்ச் சாதுரியத்தினால் அடித்து மடக்கி உட்கார வைத்து விடுவாள். அவள் எப்போதும் உமாவுக்குப் பக்க பலமாக இருப்பாள்.

கலாசாலை ஹாஸ்டலில் ரேணுகா என்று ஒரு மாணவி இருந்தாள். ரேவதியும் உமாவும் அடிக்கடி அவளது அறைக்குப் போய்ப் பேசிச் சிரித்துக் கொண்டிருப்பார்கள். அங்கேயும் உமா வாயைத் திறந்து அதிகமாய்ப் பேச மாட்டாள்.

“உமா, நீ இப்படிப் பேசாமடந்தையாக இருப்பது கொஞ்சங்கூட நன்றாயில்லை!” என்று அவளை ஒரு நாள் மட்டந்தட்ட ஆரம்பித்தாள் ரேணுகா.

“ரேணு, எனக்கு உங்களையெல்லாம் போலப் பேசத் தெரியவில்லையே! உங்களுடைய பேச்சைக் கேட்பதில் தான் எனக்கென்னவோ ஆசையாயிருக்கிறது. மேலும் என் பேச்சு உங்களுக்கெல்லாம் ரசிக்காது!” என்றாள் உமா.

அதற்குள் அவளுக்குப் பரிந்து கொண்டு ரேவதி, “உனக்கு உமாவைப் பற்றித் தெரியாது, ரேணு! அவள் நல்ல ரசிக உள்ளம் படைத்தவள். சமயம் பார்த்து வாயரட்டைக் காரர்களின் வாயெல்லாம் அடைத்துப் போகும்படி ஒரு வெடி குண்டைத் தூக்கிப் போடுவாள். அவள் இளைப்பட்டவள் என்று நினைத்து விடாதே!” என்று ஒரு பெரிய போடு போட்டாள்.

சிறிது நேரத்துக்கெல்லாம் மாணவிகளெல்லோரும் கலைந்து அவரவர்கள் இடத்துக்குச் சென்றனர். உமாவும் ரேவதியும் தங்கள் அறைக்குச் சென்றார்கள். ரேவதி அவளுக்காக எத்தனை சப்பைக் கட்டுக் கட்டினாலும் தன் நிலைமை உமாவுக்குத் தெரிந்துதான் இருந்தது.

எல்லாரும் பேசிக் கொண்டிருக்கும் போது உமாவுக்கும் ஏதாவது பேசுவதற்குத் தோன்றாமல் இல்லை. ஆனால், மனத்தில் தோன்றியதைச் சமயத்தில் எடுத்துச் சொல்லும் தைரியம் தான் அவளோடு ஒத்துழைக்கவில்லை. அவள் என்ன செய்வாள், பாவம்!

இத்தகைய ஒரு சுபாவத்தின் காரணமாக உமாவின் நடத்தையில் ஒரு விசித்திரப் போக்கு தென்பட ஆரம்பித்தது. அவள் யாருடனும் பழகுவதில்லை. ஆனால் ரேவதி மாத்திரம் அதற்கு விதிவிலக்கு. ரேவதியை விட்டு விட்டு உமா எங்கும் போக மாட்டாள். அவள் பேச்சைத் தட்டி நடக்கும் தைரியமும் உமாவுக்கு வருவதில்லை. உமாவும் ரேவதியும் காலேஜ் ஹாஸ்டலில் வெவ்வேறு அறையில் வசித்து வந்தாலும் எந்தக் காரியத்தையும் அவர்கள் தனியாகச் செய்வதில்லை.

இவர்களுடைய தோழி ரேணுகா தன் மாமா வீட்டிலிருந்து கொண்டு காலேஜில் படித்துக் கொண்டிருந்தாள். உமாவுக்கும் ரேவதிக்கும் அவள் தன் வீட்டிலிருந்து அருமையான பட்சணங்களையெல்லாம் கொண்டு வந்து தருவாள். விநாயக சதுர்த்திக்குக் கொழுக்கட்டை, கிருஷ்ண ஜயந்திக்குச் சீடை, முறுக்கு முதலியவைகளையெல்லாம் எடுத்துக் கொண்டு வந்து தருவாள். இதனால் அவர்களுடைய நட்பு மிகவும் வலுப்பட்டிருந்தது.

ஒரு நாள் ரேணுவின் அண்ணா ரமணி திருச்சியிலிருந்து வந்தான். அவன் சென்ற வருஷம்தான் 'பி. காம்' பாஸ் செய்தான். வேலை தேடும் நிமித்தமாகச் சென்னைக்கு வந்திருந்தான்.

ரமணி பார்வைக்கு மிகவும் நன்றாயிருப்பான். சிரிக்கச் சிரிக்கப் பேசி எல்லோரையும் களிப்பூட்டும் இனிய சுபாவம் உள்ளவன். அதுவும், வாழ்க்கையைப் பற்றி இன்பக் கனவு காணும் இள நங்கையர்களின் உள்ளங்களில் சட்டென்று இடம் பிடித்துக் கொள்ளும் ஒரு தனி ஆற்றல் அவனிடம் அமைந்திருந்தது.

அன்று பெண்கள் கல்லூரியில் கலை விழா. மேற்படி விழாவை யொட்டி, நடனம், நாடகம், இசை விருந்து முதலிய லலித கலைகளுக்கெல்லாம் ஏற்பாடு செய்யப்பட்டிருந்தது. அந்த நிகழ்ச்சிகளிலெல்லாம் உமாவும் ரேவதியும் முக்கிய அங்கம் வகித்தனர் என்று கூறத் தேவையில்லை.

ரேவதி எல்லா நிகழ்ச்சிகளிலும் பங்கெடுத்துக் கொண்டு நிரம்ப நடித்துச் சபையோர்களின் கரகோஷங்களைப் பெற்ற வண்ணம் இருந்தாள். நடனம், நாடகம் எல்லாம் அவளுக்குச் சர்வ சாதாரணமான விஷயங்களாயிருந்தன.

ரேவதியைப் போலத் துள்ளலும் தொடிப்பும், வேகமும் நடிப்பும் இல்லாவிட்டாலும் உமாவிடம் எல்லோரையும் பிரமிக்க வைக்கும் பாவம் இருந்தது. அவள் தன் இனிய குரலில் பாடிய போது சபையில் எல்லோருடைய உள்ளங்களும் ஒன்றுபட்டு அன்று மெழுகென உருகின. அவள் நாடகத்தில் நடித்த போது, அவள் நடிப்பில் இனந் தெரியாத இன்பமும் ஆழங் காண முடியாத சோகமும் கலந்து உருப் பெற்றன.

ரேணுகாவின் விசேஷ அழைப்பின் மேல் அவள் அண்ணா ரமணியும் அந்த விழாவுக்கு வந்திருந்தான். கலை நிகழ்ச்சி

கலையெல்லாம் கண்டு அவள் மிகவும் உற்சாகமாக ரசித்தாள்.

நிகழ்ச்சிகளெல்லாம் முடிவடைந்து எல்லோரும் வீட்டுக்குப் போகும் தருணத்தில் ரேணு தன் அண்ணா ரமணிக்குத் தன்னுடைய தோழிகளையெல்லாம் அறிமுகப் படுத்தி வைத்தாள். முக்கியமாக உமாவையும் ரேவதியையும் அறிமுகம் செய்து வைத்த போது, அவன் இந்த உலகத்திலேயே இல்லை. உமாவும் ரேவதியும் கூடக் கண் கொட்டும் கவர்ச்சிகரமான அவனுடைய முகத்தைக் கண்டதும் ஒரு மாதிரி தான் ஆகிவிட்டார்கள்.

அந்த அறிமுகப் படலத்தோடு அவர்கள் நட்பு முடிந்து விடவில்லை. இரண்டு மூன்று நாள் சந்தித்துப் பழக அவர்களுக்குச் சந்தர்ப்பம் கிடைக்கவே, அந்த நட்பு வெகு துரிதமாக வளர்ந்தது.

ரமணியும் ரேணுகாவோடு தன் மாமாவின் வீட்டிலேயே தங்கி யிருந்தான். மாலை வேளைகளில் கல்லூரி வாசலுக்கு வருவான். அங்கே அவன் தங்கை ரேணு, ரேவதி, உமா சகிதம் அவனுக்காகக் காத்துக் கொண்டிருப்பாள். பிறகு நால்வரும் சேர்ந்து, கடற்கரைக்கோ சினிமாவுக்கோ உல்லாசமாகப் போவார்கள்.

ரேவதியும் உமாவும் ரமணியை ரொம்பவும் கவர்ந்து விட்டார்கள். இருவரில் யாருடைய அன்பு அதிகம் என்று அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை.

ரேவதியின் களங்கமற்ற கலீர் என்ற சிரிப்பும், சங்கோசமின்றிப் பழகும் சரள சுபாவமும் அவனைக் கவர்ந்து விட்டன. ஆனால் அதே சமயத்தில், உமாவின் சாந்த குணமும் தன்னடக்கமான சுபாவமும், யாரும் கவனிக்காத சமயத்தில் அவன்மீது அவள் வீசிய மின்வெட்டும் பார்வையும், கணத்தில் தோன்றி மறைந்த புன்முறுவலும் அவனைப் பெரிதும் அலைத்தன.

ரமணி சென்னையில் தங்கி யிருந்த இரண்டு மூன்று நாட்களும் ரேவதியுடன் தான் அதிகமாகப் பேசிப் பழக முடிந்தது. அவன் சென்னைக்கு வந்த மறுநாளே, கல்கத்தாவிலிருந்து வேலைக்கு உத்தரவு வந்து விட்டது. அவன் முன்பு எப்போதோ மனுச் செய்திருந்த ஒரு உத்தியோகம் இப்பொழுது தானாகவே வலிய வந்து சேர்ந்தது. நல்ல சம்பளத்துடன் பெரிய உத்தியோகம் என்றால் அவனுடைய உற்சாகத்துக்குக் கேட்பானேன்? உடனே நேரில் வந்து பார்க்கும்படி மேற்படி கம்பெனியிலிருந்து கடிதம் வந்திருந்தது. ரமணி எல்லோரிடமும் விடை பெற்றுக் கொண்டு கல்கத்தாவுக்குப் புறப்பட்டு விட்டான்.

ரமணியை வழியனுப்ப, ரேணுகா சென்ட்ரல் ஸ்டேஷனுக்கு வந்திருந்தாள். அவளுடன் உமாவும் ரேவதியும் வந்திருந்தார்கள். ரயிலில் ஏறியதும் ரமணி எல்லோரையும் பார்த்து விடை பெற்றுக் கொண்டான். அந்தச் சமயம் அவன் உமா, ரேவதி இருவரையும் பார்த்த பார்வையில் இன்னதென்று விவரிக்க முடியாத ஒரு உணர்ச்சி யிருந்தது. சந்தேகம் இல்லாமல் ரேவதி அந்தப் பார்வையைத் தன் உடைமையாக்கிக் கொண்டாள். அத்துடன் பதிலுக்கும் ரமணியின்மீது தன் காந்தப் பார்வையை வீசினாள். இந்த நாடகத்தை உமா கவனிக்காமலில்லை.

இந்தச் சிறு 'நிகழ்ச்சி' அவள் மனத்தில் விசுவரூபம் எடுத்து அவள் எதிரில் நின்று அவளை ஏளனம் செய்தது. அதற்குள் வண்டி நகர்ந்து விட்டது. வண்டி நகரும்போது உமா ரமணியைப் பார்த்த பார்வையில் இன்ன சக்தி யிருந்தது என்று குறிப்பிட்டுச் சொல்ல முடியாவிட்டாலும், அந்தப் பார்வைக்கு இந்த வையத்தையும் வானத்தையும் அளந்துவிடும் சக்தி யிருந்ததாகவே தோன்றியது. ஆனால் அந்தச் சக்தியை உமா உணரவில்லை.

உமாவுக்குத் தன்மீது கொஞ்சங்கூட நம்பிக்கை இல்லாததனால், ரமணி ஸ்டேஷனில் கடைசியாகப் பார்த்த பார்வை ரேவதியை நோக்கித்தான் என்பதில் அவ



ளுக்குத் துளியும் சந்தேகம் இருக்கவில்லை. ஹாஸ்டலுக்கு வந்து அவள் தன் அறையில் புகுந்துகொண்டு படுத்து விட்டாள்.

எப்பொழுதும் ரேவதிக்காகக் காத்துக் கொண்டிருந்து ஒவ்வொரு காரியத்தையும் செய்கிறவளுக்கு இன்றைக்கு என்னவோ அப்படி யெல்லாம் செய்யத் தோன்றவேயில்லை; சாப்பிடவேண்டும் என்ற உணர்ச்சியே எழவில்லை. இலேசாக அவள் இதயத்தை ஏதோ ஒன்று அழுத்துவது போலிருந்தது. இத்தனை நாட்களாக ரேவதியை யாராவது கொண்டாடிப் பேசினால் உமாவுக்கு மகிழ்ச்சி நிலை கொள்ளாது. ஆனால் சென்ற நாலைந்து நாட்களாக அவள் மனம் அந்தப் பழைய நிலையிலிருந்து கொஞ்சம் இலேசாக விலகியிருந்தது. முக்கியமாக ரமணி வந்து விட்டுப்போன பிறகுதான் அந்த மாற்றம்.

ரமணி பேச்சுக்குப் பேச்சு ரேவதியின் சாதுரியத்தைப் பாராட்டுவான். இப்பொழுது அதை யெல்லாம் நினைத்துப் பார்க்க உமாவின் மனம் கூசியது.

'என் மனம் ஒருவேளை என்னையும் அறியாமல் ரமணியினிடம் லயித்து விட்டதோ!' என்று உமா தன்னையே கேட்டுக் கொண்டாள். அந்தக் கேள்விக்கு அவளது உள்மனம் பதில் சொன்னது, 'உன் மனம் அவனிடம் ஈடுபடுவது கிடக்கட்டும். அந்த அழகனிடம் உன் மனம் ஈடுபட்டிருந்தால் அதில் ஒன்றும் வியப்பில்லை. ரமணியின் மனதைப் பற்றி நீ என்ன சொல்லுகிறாய்! அது உன்னிடம் ஈடுபடுமா! அதைத்தான் ரேவதி எப்பொழுதோ ஈடுபடுத்தி விட்டாளே!' என்று கூறிக் கொக்கரித்தது. உமாவுக்குத் தலைவலிக்க ஆரம்பித்தது.

எப்பொழுதும் அதிகமாகப் பேசாத உமா, இப்பொழுது அசோகவனத்துச் சீதையின் சோகத்தைப்போல உன்மத்தம் பிடித்தமாதிரி யிருப்பது எல்லோருக்கும் ஆச்சரியத்தையே அளித்தது. அவளுக்குக் கூடச் சோகமுண்டாக்கக்கூடிய சம்பவம் விசேஷமாக என்ன நிகழ்ந்து விட்டது என்று ஒருவருக்கும் தெரியவில்லை. சாமர்த்தியக் காரியான ரேவதியினாலேயே அதன் காரணத்தை அறிந்து கொள்ள முடியவில்லையென்றால் மற்றவர்களால் எங்கே முடியப் போகிறது!

ரேவதியிடமிருந்து 'கேப்ரேசி' புஸ்தகத்தை வாங்கி வந்த உமாவுக்கு அதைப் படிக்கவே ஓடவில்லை. புஸ்தகத்தைப் பிரித்ததும் அதிலிருந்து விழுந்த ஒரு கடிதம்தான் காரணம். அதுமட்டும் அல்ல. அந்தக் கடிதம் ரமணியிடமிருந்து வந்திருந்தது என்பது தான் ரொம்ப ரொம்ப முக்கியமான காரணம். "அன்புள்ள ரேவதி" என்று முத்து முத்தான எழுத்தில் ஆரம்பமாகி யிருந்தது. அது ரமணியின் எழுத்துத்தான் என்பதில் உமாவுக்குத் துளிக்கூடச் சந்தேகம் இருக்கவில்லை. அவள் அந்தக் கடிதத்தை அதற்கு மேலே படிக்கவில்லை. புஸ்தகத்துக்குள்ளேயே மறுபடியும் வைத்து விட்டாள். சற்று நேரத்துக்கெல்லாம் அந்தப் புஸ்தகத்தை ரேவதியிடம் கொண்டு போய்க் கொடுத்து விட்டாள்.

ரமணியின் மனம் ரேவதியினிடம் ஈடுபட்டு விட்டதில் உமாவுக்கு ஆச்சரியம் ஏதும் உண்டாகவில்லை. ரேவதியினிடம் இது காரணமாகப் பொறாமையும் உண்டாகவில்லை. ஆனால் அவளுக்குத் தன் மீதே ஒரு வெறுப்பு உண்டாயிற்று. தன் பெண்மையே பாழாகி விட்டதைப் போன்றதோர் உணர்ச்சி ஏற்பட்டது. எவ்வளவு முயன்றும் அந்த உணர்ச்சியை அவளால் அகற்ற முடியவில்லை.

ஆனால் இது விஷயமாக உமா ஒரு வார்த்தைகூட ரேவதியிடம் பேசவில்லை. எப்பொழுதும் போலத்தான் அவளிடம் பழகினாள். இருந்தாலும் தான் இப்பொழுது பழகும் மாதிரியில் முன்பு இருந்த நட்பு இல்லை என்றே அவளுக்குத் தோன்றியது.

ரேவதியும் கொஞ்சம் மாறித்தான் போயிருந்தாள். எப்பொழுதும் கலகலப்பாக மனத்தில் ஒரு விஷயமும் வைத்துக்

சொல்லாமல் பேசிப் பழகும் ரேவதி இப்பொழுது சில விஷயங்களில் மிகவும் மௌனத்தைக் கையாண்டாள். குறிப்பாகச் சொல்ல வேண்டுமானால், ரமணியைப் பற்றி அவள் ஒரு வார்த்தைகூட மனசைத் திறந்து பேசவில்லை. இது உமாவுக்கு ஆச்சரியமாயிருந்ததுடன் வருத்தமாகவும் இருந்தது. வித்தியாசம் எள்ளத்தனையும் இல்லாமல் இவ்வளவு காலமாகப் பழகி வந்து இப்பொழுது இருவருக்கும் மத்தியில் ஒரு மெல்லிய திரை விழுந்திருப்பதைக் காண அவள் மனம் பட்ட வேதனை கொஞ்ச நஞ்சமல்ல. 'ரேவதியா இப்படி நடந்து கொள்ளுகிறாள்!' என்று அவள் ஆச்சரியப்பட்டாள்.

ரமணியிடமிருந்து ரேவதிக்குப் பல கடிதங்கள் வந்தன. அவற்றுக்கெல்லாம் ரேவதி புன்னகை தவழும் முகத்துடன் மிகவும் உற்சாகமாகப் பதில் உடனுக்குடன் எழுதி வந்தாள். ஆனால் ரமணியிடமிருந்து வந்த கடிதங்களையோ அவைகளுக்குத் தான் எழுதிய பதில் கடிதங்களையோ அவள் உமாவிடம் காண்பித்ததில்லை. அந்தக் கடிதத்தைப் பற்றிய பேச்சையே அவளிடம் எடுத்ததில்லை.

இதுதான் உமாவுக்கு ரொம்பவும் வேதனையைத் தந்தது. அவள் தானாக வலிய ரேவதியை இது பற்றிக் கேட்க வில்லை. மகா ரோஷக்காரியான அவளால் அது முடியவில்லை. ஆனால் மனசுக்குள்ளேயே நினைத்துப் புழுங்கினாள்.

ஒரு மாதத்துக்கெல்லாம் கல்லூரி மூடப்பட்டது. மாணவிகள் யாவரும் அவர் அவர்கள் ஊருக்குப் புறப்பட்டார்கள். ரேவதி தன் பெற்றோர்கள் இருக்கும் பெங்களூருக்குப் போனாள். உமா கிராமத்திலிருக்கும் தன் பெற்றோர்களிடம் போனாள். எவ்வளவோ காலமாக மனசில் வேற்றுமை என்பது ஒரு சிறிதும் இன்றிப் பழகி வந்த ரேவதி மாறிப் போனது உமாவின் மனசில் சொல்ல முடியாத வேதனையை உண்டாக்கியிருந்தது. ஆகையினால் அவளால் தன் ஊருக்குப் போயும் அமைதியாக இருக்க முடியவில்லை. இதெல்லாம் போதாக்குறைக்கு ரமணியின் நினைவு வேறு அவளை வாட்டியது.

ரமணியை விரும்புவது பயனற்றது என்று உமா உணராமலில்லை. ரூபவதியும் புத்திசாலியுமான ரேவதிதான் அவனுக்கு ஏற்றவள் என்று அவள் உள்மனம் அவளுக்கு நன்றாய் எடுத்துக் கூறியது. ஒருத்திக்குப் பூரண உடைமையாகி விட்ட ரமணியைப் பற்றித் தான் நினைப்பது தவறு என்பது அவளுக்குத் தெரிந்திருந்தது. பார்க்கப் போனால் அவளும் இவளுடைய அருமைத் தோழிதானே! இவ்வளவும் தெரிந்திருந்தும் அவள் பேதை நெஞ்சு எதையோ நினைத்து ஏங்கியது. ஆழ்கடலில் மூழ்கி அருமையான ஒரு முத்தைக் கண்டெடுத்துக் கடைசியில் அதைக் கைநழுவ விட்ட மாதிரி இருந்தது!

ரேவதி உமாவுக்குக் கடிதம் எழுதிக் கொண்டுதான் இருந்தாள். உமாவும் வேண்டா வெறுப்பாக அந்தக் கடிதங்களுக்கெல்லாம் பதில் எழுதி வந்தாள். ரேவதி ஒரு வார்த்தை கூட ரமணியைப் பற்றி எழுதவில்லை. அப்படியிருக்கையில் உமா மாத்திரம் தானாக அவனைப் பற்றி விசாரித்து எழுதிவிடுவாளா என்ன!

அன்று ரேவதியிடமிருந்து வந்த கடிதம் ஒரு விசேஷச் செய்தியையும் கொண்டு வந்திருந்தது. அது ரேவதியின் கல்யாணப் பத்திரிகைதான். உமா கல்யாணப் பத்திரிகையைப் பார்த்ததும் பரபரப்புடன் மாப்பிள்ளை யார் என்று கவனித்தாள். என்ன ஆச்சரியம்! ரமணி இல்லை!

அவசியம் உமா தன் கல்யாணத்துக்கு வர வேண்டும் என்று வருந்தி வருந்தி எழுதியிருந்தாள். உமாவினாலும் அந்தக் கல்யாணத்தைத் தட்டிக் கழிக்க முடியவில்லை. ரேவதியின் கல்யாணம் சென்னையிலேயே நடந்த படியால் உமாவுக்கு அது சௌகரியமாயிருந்தது. எப்படியும் கல்லூரிப் படிப்புக்காகச் சென்னைக்கு வந்து தானே ஆக வேண்டும்! கல்யாணம் முடிந்த சில தினங்களில் உமாவுக்குக் கல்லூரி திறந்து விட்டது.

உமா எப்போதும் போல் சிரத்தையாகப் படிக்கத்தான் முயன்றாள். ஆனால் அவளால் அது முடியவில்லை. முதல் காரணம், ரேவதி கல்யாணம் ஆனதும் தன் கணவனுடன் போய் விட்டபடியால் கல்லூரியே வெறிச்சோடிப் போய் விட்டது போல் இருந்தது. இன்னொரு காரணம், அவளையும் அறியாமல் ரமணி அவள் நினைவில் புகுந்து விட்டதுதான்.

அன்று வழக்கம் போல் கல்லூரி விட்டதும் உமா ரேணுவின் வீட்டுக்குப் போனாள். அங்கே எதிர்பாராத விதமாக ரமணியைப் பார்த்ததும் அவள் முகம் நாணத்தால் சிவந்தது.

"ஹலோ, ரேவதி! என்ன பார்க்காதவள் மாதிரி வருகிறாயே! அன்பெல்லாம் கடிதத்தில் மட்டுந்தானா! நேரில் வந்தால் ஒன்றும் கிடையாதா!" என்று உற்சாகத்துடன் கேட்டான் ரமணி.

உமாவுக்குத் தூக்கி வாரிப் போட்டது. அடுத்த கணம் கோபத்தால் அவள் தேகம் கிடுகிடு என்று நடுங்கியது.

"நான் ரேவதியும் இல்லை. உங்களுக்கு நான் கடிதம் எழுதவும் இல்லை...!"

அம்மாடி! இதை எப்படி அவ்வளவு தைரியத்தோடு சொன்னாள் என்பது அவளுக்கே ஆச்சரியமாயிருந்தது.

ரமணிக்கு ஒன்றும் தோன்றவில்லை. பாவம், அவன் முகத்தில் அசடு வழிந்தது. ஏதோ செய்யத் தகாததைச் செய்து விட்டவன் மாதிரி தவித்தான்.

அவர்கள் இரண்டு பேரையும் பார்த்து ரேணுகா கலகல வென்று சிரித்தாள்.

"உமா, கோபித்துக் கொள்ளாதே! என் அண்ணா செய்ததுதான் தப்பு. உன் பெயர்தான் ரேவதி என்று நினைத்துக் கொண்டிருக்கிறான். நீ உன்னையும் அறியாமல் அவனிடம் ஈடுபட்டு விட்டாய் என்று எனக்கும் ரேவதிக்கும் தெரியும். உங்கள் இருவரையும் எப்படியாவது சேர்த்து வைக்க வேண்டும் என்று நாங்கள் தீர்மானித்து விட்டோம். உனக்குச் சங்கோசம் அதிகம். தைரியம் கிடையாது. உன் கஷ்டங்களைப் பிறரிடம் சொல்லிப் பரிகாரம் தேடும் சுபாவமே உன்னிடம் கிடையாது. எதையும் மனசில் வைத்துக் கொண்டு புழுங்கி வேதனைப் படுவாய். என் அண்ணா ரமணியிடம் உன் மனம் ஈடுபட்டு விட்டதை நீ உன் அர்த்தமற்ற கூச்சத்தினாலும் உன்னைப் பற்றி எப்போதும் தாழ்வாக நினைத்துக் கொள்ளும் அசட்டுச் சுபாவத்தினாலும், எங்களிடம் கூடச் சொல்லாமல் மறைத்து வைக்க முயன்றாய். ஆனால் உன் பெரு மூச்சும், ரமணியைப் பார்த்த போதெல்லாம் உன் முகத்தில் தெரிந்த ஏக்கம் கலந்த பார்வையும் உன் இருதய அந்தரங்கத்தை நன்றாக வெளிப் படுத்தி விட்டன. ரமணி உன் பெயர் ரேவதி என்று நினைத்துக் கொண்டு கடிதம் எழுதியது நல்லதாய்ப் போயிற்று. உனக்கே அவன் எழுதியிருந்தால் பயந்து கொண்டு தவித்துப் போயிருப்பாய். பாவம், ரேவதி உனக்குப் பதிலாக ரொம்பச் சிரமம் எடுத்துக் கொண்டு உன் அசட்டுச் சுபாவத்துக்குப் பொருத்தமாக இருக்கும்படி யோசித்து யோசித்துப் பதில் எழுதி வந்தாள். ஒவ்வொரு கடிதத்தையும் என்னிடம் காட்டி விட்டுத்தான் தபாலில் சேர்ப்பாள். அவள் மகா புத்திசாலி...!" என்று ரேணுகா கூறிக் கொண்டு வரும் போதே உமாவின் முகம் நாணத்தினால் சிவந்தது. ரமணி தன் அசட்டுத்தனத்தை நினைத்துச் சிரித்து விட்டான்.

"அண்ணா, இனிமேல் இவளை ரேவதி என்று கூப்பிடாதே! இவள் பெயர் உமா! தெரிந்ததா! அடி அசட்டுப் பெண்ணே, உமா! என் அண்ணா ரமணியை நன்றாய்ப் பார்த்துக் கொள். அவனை நினைத்து நீ தவித்துக் கொண்டிருந்தாய் அல்லவா! அண்ணா, உமாவுக்குத் தைரியம் சொல்லு. அப்பப்பா! உங்கள் இருவரையும் சேர்த்து வைப்பதற்குள் ரேவதி எவ்வளவு சிரமப் பட வேண்டியிருந்தது! சரி, முதலில் அவளுக்குக் கடிதம் எழுதிக் கல்யாணத்துக்கு அவளை அவசியம் வரவழைக்க வேண்டும்!" என்றாள் ரேணுகா.

இதற்குள் உமாவின் கூச்சம் கொஞ்சம் விலகிப் போய் விட்டது. இல்லாவிட்டால் அவள் அப்படி தன்னை மறந்து ரமணியிடம் நெருங்கி நிற்பாளா!

ரமணி, தன்னை நெருங்கி வந்த உமாவின் தளிர்க் கரங்களைப் பற்றிக் கொண்டு, "உமா, என்னை ஏமாற்றி விட்டாயே! முதல் முதலில் உன்னைப் பார்த்ததுமே என் மனம் உன்னிடம் ஈடுபட்டு விட்டது. உன் சங்கோசம், பயந்த சுபாவம், அடக்க குணம், நாணம் கலந்த பார்வை எல்லாமே என்னை உன்னிடம் லயிக்க வைத்து விட்டன. இரண்டு மூன்று நாள் பழக்கத்தில் உன் பெயரைத் தவறாக ரேவதி என்று நினைத்துக் கொண்டு கடிதம் எழுதி விட்டேன். எனக்கு வந்த பதில் உன் சுபாவத்துக்கு ஏற்ற முறையில் மிகவும் அற்புதமாக எழுதப் பட்டிருந்தது. அந்தக் கடிதங்களையெல்லாம் நீ எழுதினதாகவே நான் நினைத்தேன்! அந்தக் கடிதங்களில் காட்டப் பட்டிருந்த அன்பை நினைத்துத்தான், நான் உன்னைப் பார்த்ததும் அவ்வளவு சகஜமாகக் கூப்பிட்டுப் பேசி விட்டேன். உமா, என்னை மன்னித்து விடு!" என்று அன்போடு சொன்னான்.

அந்தப் பேதைப் பெண் உமாவுக்கு என்னென்னவோ பேச வேண்டும் போல் இருந்தது. ஆனால் பேச நா எழவில்லை. இப்பொழுது அவளால் ரேவதியை நினைக்காமல் இருக்க முடியவில்லை. அவள் இருந்தால் உமாவுக்குப் பதிலாகத் தான் பதில் சொல்லியிருப்பாளே! நாணமும் மித மிஞ்சிய மகிழ்ச்சியும் சேர்ந்து அவள் முகத்தில் சிவப்பை ஏற்றி விட்டன. அவள் கண்களில் நீர் துளித்து நின்றது. விஷயம் தெரிந்த ரேணுகா மெல்ல அங்கிருந்து நழுவி உள்ளே சென்று விட்டாள்.




பீங்கான் தட்டிலிருந்த இரண்டு சோமாசிகளையும் தின்று விட்டான் மீரான். மூன்றாவது சோமாசிக்காகக் காத்துக் கொண்டிருந்தான்.

மூன்றாவது சோமாசி வரவில்லை. கோபித்துக் கொண்டு எழுந்திருந்து விட்டால், சோமாசி கிடைக்காமலே போய்விடும். பேசாமல் கடையைப் பார்த்துப் போக வேண்டியதுதான். மனதில் ஸரீனு மீது எரிச்சல்தான் மிஞ்சியிருக்கும். அவனுக்கும் அன்று மன நிம்மதி குலைந்து விடும். புருஷன் கோபித்துக் கொண்ட பிறகு, சோமாசியைத் தொடவா போகிறாள்? ஆத்திரத்துக்கும் கோபத்துக்கும் இடம் கொடுப்பதால் லாபமில்லை. எப்படிப் பார்த்தாலும் கஷ்டந்தான்!

மீரா முகைதீன் இவ்வாறு மனக்குள் கணக்குப் போட்டுக் கொண்டிருக்கையில், வந்து விட்டாள் ஸரீனு. அவளது கையில் ஒரு அழகிய தட்டும், அந்தத் தட்டில் ஒரு சோமாசியும் காட்சியளித்தன.

"வாயைத் திறந்துதான் சொல்லுங்களேன், சோமாசி எப்படி இருக்கிறது என்று? புளிக்கிறதா, கசக்கிறதா என்று எனக்குத்தெரியவேண்டாமா?"

மூன்றாவது சோமாசி வரத் தாமதித்தது ஏன் என்பதைப் புரிந்து கொண்டான் மீரான். சோமாசியைப் புகழ்ந்து பேசாவிட்டால், தட்டில் ஒன்றும் வைக்க மாட்டாள் தன் அருமை ஸரீனு என்பதையும் அவன் நிச்சயப் படுத்திக் கொண்டான்.

"இரண்டே இரண்டைத் தின்று விட்டு ருசியைச் சொல் என்றால் எப்படிச் சொல்ல முடியும்? குறைந்தது ஒரு அரை டஜனாவது—"

ஸரீனு கணவனைப் பார்த்துச் சிரித்துக் கொண்டே இடைமறித்தாள்.

"முடியாது ஸாஹேப், முடியாது. ருசியாக இருக்கிறதா, இல்லையா? அதைச் சொன்னால்தான் மேற்கொண்டு கிடைக்கும். இல்லாவிட்டால் இல்லைதான்" என்று உதட்டைக் குவித்தாள் ஸரீனு.

பசிக்கிற நேரத்தில் மனைவியின் விளையாட்டுப் பேச்சு முகைதீனுக்கு அவ்வளவாக ரசிக்கவில்லை.

"ஸரீனுவின் கையினால் தயாரிக்கப்பட்ட சோமாசியின் ருசிக்குக் கேட்கவேண்டுமா? சாயாக்கடை சதக்கத்துல்லா உன்னிடம் கையைக் கட்டித்தான் நிற்க வேண்டும்! என்ன ருசி, என்ன வாசனை! சரி, வை சோமாசியை" என்று கூறினான் முகைதீன்.

ஏதோ மனைவி கேட்டாள், கணவன் புகழ்ச்சியாக இரண்டு வார்த்தை பேசினான் என்றுதான் நீங்களும் நானும் முடிவு கட்டுவோம். ஆனால் ஸரீனுவுக்கு அப்படியில்லை. புருஷனின் புகழுரை ஒவ்வொன்றும் தேன் துளியாக இனித்தது அவளுக்கு!

மீரா முகைதீன் ஐந்தாவது சோமாசியைப் பதம் பார்த்துக் கொண்டிருந்தான். அவன் முகத்தில் படர்ந்த திருப்தியை உற்றுப் பார்த்து மனமகிழ்ந்தாள் ஸரீனு.

"சோமாசி செய்தது நான் என்று தானே நினைத்தீர்கள்?"

மீரா முகைதீனின் பசி, பேச்சுக் கொடுத்துப் பேச்சு வாங்கும் அளவுக்குத் தணிந்திருந்தது.

"சோமாசி ரொம்ப ஜோர்! நீ செய்யவில்லை என்றால், இதை சாயாக்கடை சதக்கத்துல்லாதான் செய்திருக்க வேண்டும். அவனைத் தவிர வேறு ஒரு பயலுக்கும் இந்தப் பக்குவம் அமைந்து விடாது" என்றான் மீரா முகைதீன் உற்சாகத்துடன்.

ஸரீனுவின் முகத்தில் ஏளனமும் பெருமையும் ஒன்றாக விளையாடின.

"உங்களுக்குத் தெரிந்தது அவ்வளவுதான் என்று சொல்லுங்கள். சதக்கத்துல்லா போட்ட சோமாசியை நான் பார்த்தாகி விட்டது. கடலை எண்ணெய் நாற்றம் அல்லவா! இப்பொழுது நினைத்தாலும் குமட்டுகிறது எனக்கு! இதையும் அதையும் ஒப்பிட்டுச் சொல்ல வந்து விட்டீர்களே!"

"பின்னே யார் செய்தது இது?"

ஸரீனுவுக்குப் பெருமை தாங்க முடியவில்லை.

"வேறு யாருக்குச் செய்யத் தெரியும் இந்த ஊரிலே! மைமூன்தான் இத்தனை நேரமும் இருந்து செய்து கொடுத்து விட்டுப் போகிறாள்."

மீரா முகைதீன் ஆச்சரியத்தால் திகைத்துப் போவான் என்றுதான் அவள் எதிர்பார்த்தாள். ஆனால் அவனோ 'அப்படியா?' என்று அசுவாரஸ்யமாகச் சொல்லி விட்டுச் சாயாவை உறிஞ்ச ஆரம்பித்தான்.

* * *

ஸரீனா தன் தோழி மைமூனைப் பற்றி இது வரையில் ஆயிரந்தடவை புகழ்ந்து உச்சாணிக் கிளையில் ஏற்றி வைத்துப் பேசி விருப்பாள். அந்தச் சந்தர்ப்பங்களிலெல்லாம் மீரான் 'அப்படியா' போடுவதோடு சரி! அதைக் காது கொடுத்துக் கேட்பதே கிடையாது. இருந்தாலும் ஸரீனா விடுவதாக இல்லை. மைமூனின் சிவந்த மேனி அழகையும், அவள் கூந்தலின் நீளத்தையும், அவள் சமையல் திறமையையும், அவள் தங்கக் குணத்தையும் உயர்த்திப் பேசாத நாள் கிடையாது!

'இவளை இந்த 'மைமூன் பித்து' விடவே விடாது போலிருக்கிறதே! எப்பொழுது பார்த்தாலும் மைமூன் பேச்சுத்தான்!' என்று ஆத்திரம் ஆத்திரமாக வந்தது மீரானுக்கு.

ஸரீனா சமையல் கட்டுப் புகைக்குள்ளிருந்து வெளியே வந்தாள். மீரா முகைதீனுக்கு ஷவ்வால் மாதத்து மூன்றும் பிறை ஞாபகத்துக்கு வந்தது.

"வெளியே போகும்போது, மறக்காமல் கதவைச் சாத்திக் கொண்டு போங்கள். நான்......"

"எங்கே அதற்குள் புறப்பட்டு விட்டாய், ஸரீனா?"

அப்பொழுதுதான் மீரா முகைதீன் அவள் இடுப்பில் பலகாரத் தட்டு வைத்திருப்பதைக் கவனித்தான். தட்டை மூடியிருந்த வர்ண ஓலைப் பெட்டி அவள் சேலைத் தலைப்புக்குள்ளிருந்து சிறிது தலையை நீட்டியது.

"உங்கள் சத்தம் கேட்டதும், மைமூன் ஓடிவிட்டாள். அவளுக்குச் சில சோமாசிகளை எடுத்துக் கொண்டு போகிறேன்."

மீரானுக்கு எரிச்சல் வந்துவிட்டது.

"அதற்கு இவ்வளவு அவசரமா? நான் கடைக்குப் புறப்பட்ட பிறகு கொண்டு போனால் என்ன? சோமாசி ஊசிப் போய்விடுமோ?"

அவன் வாயிலிருந்து சற்றுக் கடுமையாகவே வந்தன வார்த்தைகள்.

"உங்களுக்குக் கடைக்குப் போக வழி தெரியாதா, என்ன? மைமூன், கொஞ்ச நேரமானாலும் வீட்டில் இருக்க மாட்டாள். சாயங்காலந்தான் திரும்பி வருவாள். சீக்குக்காரப் புருஷனுக்கு நான் பூராவும் விசிறிக்கொண்டே இருக்கிறாளாம். பாவம்! அவள் கணவனுடன் இல்லற இன்பத்தையே அனுபவிக்க வில்லை. ஒரு நிமிஷத்தில் இதைக் கொடுத்துவிட்டு, ஓட்டமாக ஓடி வந்து விடுகிறேன்."

இவ்வாறு அவசரமாகச் சொல்லிக் கொண்டே நடையை விட்டுக் கீழே இறங்கினாள் ஸரீனா.

"ஸரீனா!"

கணவனின் கடுமையான குரலைக் கேட்டுத் திரும்பினாள் அவள்.

"உள்ளே போகிறாயா, இல்லையா? புத்தி கெட்டவளே! சொல்லிக் கொண்டே இருக்கிறேன், நீ பாட்டுக்குப் போகிறாயே? உள்ளே போ, முதலில்! இனிமேல் மைமூன் பேச்சை எடுத்தாயோ, நான் மிகவும் பொல்லாதவனாக இருப்பேன். எப்பொழுது பார்த்தாலும், மைமூன் பெயரையே ஓதிக் கொண்டிருக்கிறாயே!"

மீரா முகைதீன் மனத்தில் அடக்கி வைத்திருந்த சிறு சிறு எரிச்சல்களெல்லாம் ஒன்று சேர்ந்து கொண்டன.

ஸரீனா தலை குனிந்தாள். பதில் பேச வரவில்லை. 'நிக்காஹ்' (விவாகம்) நடந்து இந்த மூன்று வருஷங்களில், மீரா முகைதீனுக்கு இப்படிக் கோபம் வந்ததே கிடையாது!

"கேட்டுக் கொள், ஸரீனா! இனிமேல் எதற்காவது மைமூன் பேச்சு வந்தாலும், பொறுக்க முடியாது நம்மாலே!" என்று இறுதியாகக் கூறி விட்டு வேகமாகக் கடைக்குச் சென்றான் மீரா முகைதீன்.

ஸரீனா இரண்டாங் கட்டு நடையில் உட்கார்ந்தபடி யோசனையில் ஆழ்ந்தாள்.

தன் உயிர்த்தோழி மைமூனைத் தன் கணவன் ஏன் வெறுக்க வேண்டும்?

மைமூனும் ஸரீனாவும் எப்போதோ சிறு வயதில் குரான் ஓதக் கற்றுக் கொள்ளச் சென்ற சமயத்தில் "தோழி" போட்டுக் கொண்டார்கள். "தோழி" போட்டுக் கொள்வது என்றால், அது ஒரு அறுத்துக் கொள்ள முடியாத சம்பந்தம். உயிருள்ளவரை, இன்பத்திலும் துன்பத்திலும் என்றென்றைக்கும் பிரிக்க முடியாத ஒரு பிணைப்பு! சுருங்கச் சொன்னால், இரண்டு களங்கமில்லாத சிறுமிகளுக்கிடையில் ஒரு அன்புத் 'திருமணம்' எனலாம்!

* * *

மைமூனுக்கும் ஸரீனாவுக்கும் 'நிக்காஹ்' நடந்தது.

முதலில் மைமூன் தையற் கடை முகம்மது கௌஸுக்கு வாழ்க்கைப் பட்டாள். அவன் உள்ளூரிலேயே தையற் கடை வைத்திருந்தான்.

அயலூர் பிள்ளைகளுக்கு முடியாது என்று சொல்லி விட்டு, உள்ளூர்க்காரன் ஒருவன் வந்து சேரும் வரை பொறுமையோடு காத்திருந்தாள் ஸரீனா. அயலூருக்குப் போய் விட்டால், தோழியைப் பிரிய வேண்டி வருமல்லவா?

காரணத்தோடும் காரணமில்லாமலும் தோழிகள் சந்திப்பார்கள். அவர்கள் சந்திப்புக்குக் காலம் கிடையாது, நேரமும் கிடையாது!

இத்தனை ஒற்றுமையாக இருந்தாலும்தானோ என்னவோ அவர்கள் இருவருக்குமே குழந்தை இல்லை. கையைப் பிடித்தவர்களால் பிரிக்க முடியாத அன்பை, ஒரு வேளை குழந்தைகள் பிறந்து விட்டால் பிரித்து விடக் கூடும் அல்லவா?

மைமூனின் கணவன் கௌஸ் நோய் வாய்ப் பட்டு ஆஸ்பத்திரியிலேயே இருந்தான். மைமூன் கஷ்டப்படுகிறதை எண்ணி, ஸரீனா அரிசி என்றும் பணமென்றும் எத்தனையோ சிறு ஒத்தாசைகள் செய்து வந்தாள். அவள் கணவன் இதற்கெல்லாம் ஒரு நாள் கூட எதுவும் சொல்லியதே இல்லை. திடீரென்று இன்றைக்குப் பார்த்து ஏன் கோபம் வந்து விட்டது?

ஸரீனாவின் மனம் என்றுமிராத வாறு மிகவும் கலங்கியது.



இரவு கணவன் வீட்டுக்கு வந்த பிறகு மைமூனைப் பற்றி எடுத்துச் சொல்லி, அவன் தப்பபிப்பிராயத்தை மாற்றிச் சமாதானப்படுத்த வேண்டும் என்று துடித்துக் கொண்டிருந்தது அவள் பேதை நெஞ்சு.

"ஆமாம், மைமூனை அவர் வெறுக்கக் கூடாது. அவளுக்காக இரக்கப்பட வேண்டும், அவள் பெருமையை உணர வேண்டும்."

"அல்லா" என்று கையை உயர்த்தி ஆண்டவனை நோக்கி 'துஆ' கேட்டாள் ஸரீனு!

* * *

பிறைகள் தோன்றி மறைந்தன.

அன்று பெருநாள்! மீரா முகைதீன் கட்டிலில் உட்கார்ந்தபடி தெருக் குழந்தைகளுக்குப் பெருநாள் காசு கொடுத்து அனுப்பிக் கொண்டிருந்தான். வெளியில் உள்ள பூவரசமரங்களிலிருந்து தொங்கிய ஊஞ்சல்களில் ஆடி மகிழும் சிறுவர் சிறுமியர்களின் ஆரவாரச் சிரிப்பு காதில் வந்து விழுந்து கொண்டிருந்தது.

ஸரீனு குளித்து விட்டு வந்து தலையைத் துவட்டிக் கொண்டிருந்தாள். ஒரு பழைய துண்டுத் துணியைத் தலைமுடியோடு சேர்த்து முறுக்கித் தண்ணீரைப் பிழிந்து விட்டுக் கொண்டிருந்தாள்.



"உன் தலை முடி இவ்வளவு நீளமென்று எனக்கு இத்தனை வருஷமாகத் தெரியாது" என்றான் மீரா முகைதீன் வியப்புடன்.

"இதெல்லாம் ஒரு நீளமா? மைமூன் கொண்டையை அவிழ்த்து விட்டாள் என்றால், முடி குதிகாலில் வந்து இடிக்கும்" என்றாள்.

மீரா முகைதீனுக்குச் சுருக்கென்றது. 'பெருநாளும் இதுமையுமாக யாரை ஞாபகமூட்டுகிறாள், பார்த்தாயா?' என்று இடிந்து போனான். எத்தனை தடவை கண்டித்தாயிற்று, மைமூன் பேச்சை எடுக்காதே என்று? எத்தனை நாள் சண்டை போட்டு அவளை அழ வைத்திருக்கிறான்?

மீரா முகைதீனுக்கு அந்த அதிர்ஷ்டம் கெட்ட மைமூன்மீது பொறாமை வந்தது. கணவனைப் பறி கொடுத்து இரண்டு மாதங்கூட ஆகாத அபலைப் பெண்ணின் மேல் இரக்கப்படுவதற்குப் பதிலாகப் பொறாமை கொண்டு பொருமினான் மீரா முகைதீன்.

அந்தப் பெண் பின்னே, ஸரீனுவின் நெஞ்சில் எப்பேர்ப்பட்ட இடத்தைப் பிடித்துக் கொண்டு விட்டாள்? அவளிடம் என்ன மந்திர சக்தி, மாய சக்தி இருக்கிறதோ, தெரியவில்லையே!

மைமூனைப் பற்றி ஸரீனு வர்ணித்த வர்ணனை யெல்லாம் அவனுக்கு அப்போது ஞாபகத்துக்கு வந்தன.

மைமூன் பூவரசமரத்துக் கிளி! குரானில் முப்பது ஜுஸு ஓதிய சிறந்த அறிவுக் கிளி!

மைமூன் சிரித்தால், வெயில் நிலவாகும். அவள் கூந்தல் கருமேகம். அவள் கண்கள் கற்கண்டு! மைமூன் அதிசயப் பெண், அவள் குணம் தங்கம், அவள் குரல் தாலாட்டு!

மீரா முகைதீன் பொறுமைத் தீயில் கனிந்தான்.

ஸரீனு உயிரை விட்டாலும் விடுவாளே தவிர மைமூனை மறக்க மாட்டாள்! பின் எதற்காகச் சந்தோஷம் பொங்கும் பெருநாளில், கணவனை இழந்து நின்ற மைமூனைப் பற்றிப் பேச்செடுக்க வேண்டும்?

* * *

கடைசியாக ஒரு வழி தோன்றியது மீரானுக்கு. அந்த வழியும் பலன் தராவிட்டால்? இல்லை, இல்லை. ஸரீனு பெண்தானே? அவள் மனம் இம்முறை நிச்சயம் மாறிப் போகும். இல்லாவிட்டால்...!

"ஸரீனு...உன் தோழிக்கு இந்தக் கதி வருமென்று யார்தான் நினைத்தார்கள்? அவள் அழகுக்கும் குணத்துக்கும் எவ்வளவோ சந்தோஷமாக வாழ்ந்திருக்க வேண்டும். அந்த அப்பாவி கௌஸ் அவளை 'நிக்காஹ்' செய்து இந்த நிலைமைக்கு ஆளாக்கி விட்டுப் போய் விட்டான். மைமூனைப் போல ஒரு தங்கமான பெண்ணுக்கு வாழ்வு பாழாகி விடக் கூடாது. அதிலும் அவள் உன் தோழி. உங்கள் இருவருக்கும் உள்ள பாசம் சொல்லி முடியாது. ஆகையினால் கேள், ஸரீனு! ஒரு காரியம் செய்வதாகத் தீர்மானித்து விட்டேன். மைமூன் கண்ணீர் சிந்தக் கூடாது என்பதற்காக அவளைக் கல்யாணம் செய்து கொள்ளப் போகிறேன். நீயும் அவளை எப்போதும் பக்கத்திலேயே வைத்துப் பார்த்துக் கொண்டிருக்கலாம்..."

ஸரீனுவின் கண்களில் எங்கிருந்தோ கண்ணீர் வந்து பொங்கிற்று. உதடுகள் துடித்தன.

மீரா முகைதீன் கூறியதை அக்கறையுடன் கேட்ட ஸரீனுவின் கண்கள் மூடிக் கொண்டன. அவள் முகத்தைக் கவ்விய உணர்ச்சி, வேதனையா அல்லது திருப்தியா என்று சொல்ல முடியாத புதிராக இருந்தது. கைகள் குவிந்து பிரார்த்திக்கும் பாவனையில் ஆண்டவனை நோக்கின. உதடுகள் அசைந்தன. அவள் முகத்தில் சிறந்திய பார்வையை எடுக்க வில்லை மீரா முகைதீன்.

கண்ணைத் திறந்து ஸரீனு தெளிந்த குரலில் பேசினாள்.

"அல்லா என் துஆவுக்கு இரங்கி விட்டார்! நான் கேட்ட வரத்தைத் தந்து விட்டார்! உங்களிடம் இதை எப்படிச் சொல்லுவதென்று தவித்துக் கொண்டிருந்தேன். அல்லா உங்களிடமே சொல்லி விட்டார்! இதுவரையில் எங்கள் இருவரையும் ஒரே ஊரில் வைத்திருந்த ஆண்டவன், இனிமேல் இருவரையும் ஒரே வீட்டில் வைக்கப் போகிறார்! என் வாழ்க்கையில் இதைக் காட்டிலும் இன்பம் தரக்கூடியது வேறு என்ன இருக்க முடியும்?" என்றாள் ஸரீனு உணர்ச்சியுடன்.

மைமூன்—ஸரீனுவின் தெய்வீக நட்பு மீரா முகைதீனை மெய் சிலிர்க்கச் செய்து விட்டது!




# ஆற்றங்கரை

துஷ்யந்தன்

மதன் நாடகக் கொட்டகையில் அன்று ஏராளமான கூட்டம் கூடியிருந்தது. மதுரையில் அன்று எங்கள் நாடகத்தின் கடைசி நாள். வழக்கம் போல நானும் மாலதியும் ஆயிரமாயிரம் மக்களுக்கு நடுவில் அன்றும் கொஞ்சி ஆரம்பித்தோம்.

ஆமாம், அந்த நாற்பத்திரண்டாம் ஆண்டின் ஆகஸ்டு மாதத்திலேகூட நாங்கள் நிம்மதியாக உலகை மறந்து காதல் நாடகம் ஆடிக் கொண்டிருந்தோம்! அதையும் மக்கள் அந்தக் கொந்தளிப்பினிடையே மிகவும் ரசித்துக் கொண்டுதான் இருந்தார்கள்!

உலகத்திலே இரண்டாவது மகா யுத்தம் நடந்து கொண்டிருந்த காலம் அது. பாரத நாட்டிலே சுதந்திரப் போராட்டம் நடந்து கொண்டிருந்த காலம் அது. இருந்தாலும் எதிரிலிருந்த ரசிகர்கள் நிச்சிந்தையாக உட்கார்ந்திருந்தார்கள். என் காதல் நாடகத்தை மெச்சிக் கை தட்டுவதற்காகவேதான் அவர்கள் இந்த உலகில் பிறவி எடுத்திருப்பது போலத் தோன்றியது!

ஓரே உணர்ச்சி மிக்கவையாக இருந்தன என் நாடக வசனங்கள். எனக்குத் துணையாக மாலதி யிருந்தாள். அவளிடம் கேரள நாட்டுப் பகமை குன்றாத அழகிருந்தது. காதல் கட்டங்களில் கிளிபோலக் கொஞ்சுவாள். வேறு என்ன வேண்டும்? மதன் நாடக சபைக்கு நாங்களிருவரும் மாபெரும் சொத்து!

சொத்து என்றதும் நினைவுக்கு வருகிறது. உலகத்தின் இலக்கியம் எங்கள் வரையில் பொதுச் சொத்து. ஆகவே எவரிடமிருந்தும் தாராளமாகக் கதை வசனங்களையும் காவியங்களையும் நாங்கள் எடுத்துக் கொள்வோம் உரிமையோடு.

அன்றும் அப்படித்தான் நான் மகா கவி தாகூரிடமிருந்து இரவல் வாங்கிக் கொண்டேன்.

"மாலதி! உன்னிடம் நான் எதையுமே ஒளித்து வைக்கவில்லை. இதயத்தைக்கூட இதோ உன்னிடம் திறந்து காட்டி விட்டேன். அது ஒரு ரத்தினக் கல்லாயிருந்தால் அதை ஆயிரம் சுக்கலாக்கி உனக்கு மாலையாகக் கோத்துப் போடுவேன். அது ஒரு சின்னஞ் சிறிய அழகான ரோஜாப் பூவாயிருந்தால், உடனே பறித்து உன் ஒய்யாரக் கூந்தலிலே பதித்து விடுவேன். ஆனால் அது என் இருதயமாயிற்றே, மாலதி! அதை நான் உன்னிடம் எப்படி எடுத்துக் கொடுப்பது? கரையற்ற மகா சமுத்திரம் அது. எல்லையற்ற சாம்ராஜ்யம் அது. அதன் அரசி நீதான்...... நீ என்னைப் புறக்கணித்தால், பிறகு எனக்கு இந்த உலகமே இருண்டு விடும்......"

அந்தச் சமயத்தில் பலமான கரகோஷத்தை நான் எதிர்பார்த்தேன். கரகோஷம் வந்தது. ஆனால் கொட்டகைக்கு வெளியே யிருந்து! மறு நிமிஷம் எல்லா விளக்குகளும் சட்டென்று நின்று விட்டன. அந்த இருளில் மாலதி என் கைகளை இறுகப் பிடித்துக் கொண்டாள். பயத்தால் அவை நடுங்குவதை நான் நன்கு உணர முடிந்தது. வேகமாக அவளை இழுத்துக் கொண்டு பின் பக்கத்து வாசல் வழியாக இருட்டில் தடுமாறியபடியே வெளியே வந்தேன். வேஷத்தை நாங்கள் கலைக்கவில்லை. அதற்கு அவசியமோ அல்லது அவகாசமோ அப்போது இல்லை.

வெளிப்புறத்திலும் விளக்குகள் கிடையாது. ஆனால் குறுக்கும் நெடுக்குமாகச் சிலர் தீப்பந்தங்களை ஏந்தி நட

மாடிக் கொண்டிருந்தார்கள். சற்று தூரம் அப்பால் போய் நாடகக் கொட்டகைப் பக்கம் திரும்பிப் பார்த்தேன். அங்கே நான் கண்ட காட்சி!

ஆயிரம் விளக்குகள் சேர்ந்து எரிவது போல வெளிச்சம் தெரிந்தது. ஆனால் வெளிச்சத்தின் காரணம் விளக்குகள் அல்ல. நாடகக் கொட்டகை தீப்பற்றி எரிந்து கொண்டிருந்தது! என் உள்ளத்தையும் உடலையும் சுட்டெரிப்பதுபோல இருந்தது அந்தத் தீ. மாலதியைத் திரும்பிப் பார்த்தேன். அவள் தன் கண்களைக் கைகளால் பொத்திக்கொண்டு விசித்துக் கொண்டிருந்தாள்.

தொலை தூரத்தில் 'வெள்ளையனே, வெளியேறு' என்ற கூச்சல் காதைத் துளைத்தது. வெள்ளையன் காதுகளில் அது விழுந்ததோ, என்னவோ? அவன் அப்போது வெளியேறவில்லை. நானும் மாலதியும்தான் நாடகத்திலிருந்து வெளியேறி அகதிகளாகத் தெருவில் நின்றோம். கொஞ்ச நேரத்துக்கு முன்னே கொஞ்சிக் கொண்டிருந்த நாங்கள் மதுரைமா நகரின் வெளிச்ச மில்லாத வீதிகளிலே, அப்பொழுது மௌனமாக நடந்து கொண்டிருந்தோம். நாடக சாம்ராஜ்யத்திலே ராஜாவும் ராணியுமாக இருந்த நாங்கள் அப்போது நடுத்தெருவிலே கேட்பாரற்ற அனாதைகளாக நடந்து கொண்டிருந்தோம்!

எவ்வளவு நேரம் இப்படி நடந்தோம் என்று எனக்குத் தெரியாது. வைகை ஆற்றங் கரையிலே ஒரு மண்டபத்தின் அருகில் வந்தபோதுதான் எங்களுக்கு எங்களுடைய சுய உணர்வு திரும்பி வந்தது.

# மண்டபம்



"மகாராஜா, இனி என்னால் ஒரு அடி கூட எடுத்துவைக்கமுடியாது" என்றாள் மாலதி.

எனக்கு மாலதியின் இந்த வழக்கமான குரலைக் கேட்டதும் சிரிப்பு வந்தது. அந்தப் பயங்கரமான நிலையில்கூட மாலதி நாடகபாஷையில் பேசியது என் மனப் புண்ணுக்கு சஞ்சீவிபோல் இருந்தது. "இதோ நமது வசந்த மண்டபம், மகாராணி! இங்கே நாம் உட்கார்ந்து சிறிது இளைப்பாறலாமா?" என்றேன்.

இருவரும் சிரித்துக் கொண்டே அந்த இருள் கவிந்த மண்டபத்தில் நுழைந்தோம். எங்களுக்கிருந்த அலுப்பில் எங்கேயாவது படுத்தால் போதும் என்றிருந்தது. ஒரு மூலையைத் தட்டித் துடைத்து விட்டு நிம்மதியாகக் காலை நீட்டி நிமிர்ந்து படுத்தோம்.

ஆனால் அந்தச் சூழ் நிலையில் தூக்கம் மட்டும் வரவில்லை.

சற்றைக் கொருதரம் வௌவால்கள் சடசடவென்று அங்கே நுழைந்து இடம் பிடித்தன, எங்களுக்குத் துணையிருப்பது போல. ரொம்ப நேரம் வரையில் அந்த இருளின் மத்தியில் மண்டபத்தின் மேல்தளத்தைப் பார்த்தபடியே இருந்தேன். நல்ல வேளையாக ஒரு காலத்தில் ராணி மங்கம்மா இருந்தாலும் இருந்தாள், இந்தமாதிரி சற்றே ஒதுங்கியிருக்க மண்டபங்களும் சத்திரங்களும் கட்டி வைத்திருக்கிறாள் புண்ணியவதி. நம்மைப் போன்றவர்களுக்கு இது எவ்வளவு உபயோகமா யிருக்கிறது என்று நினைத்தேன். இதை வாய் விட்டுச் சொல்லி விட்டேன் போலிருக்கிறது.

"ஆமாம், தம்பி. இது ராணி மங்கம்மா கட்டியது தான். பாளையக்காரன் சத்திரம் என்று பெயர். இதைக் கட்டினதே ஒரு கதை" என்று யாரோ சொல்வது கேட்டது. முதலில் திடுக்கிட்டாலும் பின்னால் சமாளித்துக் கொண்டேன். அந்த மண்டபத்தில் வேறு யாராவது



வழிப்போக்கர்கள் நாங்கள் வருவதற்கு முன்பே வந்து படுத்திருக்கலாமல்லவா?

"அந்தக் கதையைத்தான் சொல்லேன், கேட்போம்" என்றேன் தைரியத்தை வரவழைத்துக் கொண்டு.

## 2

வழிப்போக்கர் சொல்லத் தொடங்கினார்:

ராணி மங்கம்மாளின் கணவர் காலத்தில் திருச்சிராப்பள்ளி தலைநகராகி விட்டதால், மதுரைப் பக்கத்தை முழுக்க முழுக்கப் பாதுகாக்க வேண்டிய பொறுப்பு பாளையக்காரர்களிடம் விடப்பட்டது. இவர்களில் ஒருவர் தான் ஜகவீர மீனாக்ஷி சுந்தரத் தேவர்.

மகாராணி இவரிடம் அபார நம்பிக்கை வைத்திருந்தாள். நல்ல பராக்கிரமசாலி. குதிரை யேற்றத்திலும் வாட் போரிலும் மகா சமர்த்தர். ஆகவே மற்ற பாளையக்காரர்களும் இவரிடம் மதிப்பு வைத்திருந்தனர். கலியாணமாகாத இவருக்குப் பெண் கொடுக்க எல்லோருமே போட்டி போட்டுக் கொண்டு வந்தனர். ஏன்? ராணி மங்கம்மாவே தன் அந்தரங்கத் தோழிகளில் ஒருத்தியை இவருக்கென்று தேர்ந்தெடுத்து வைத்திருந்தாள்!

இந்தச் சமயத்திலேதான் திருவாங்கூர்ச் சீமையிலிருந்து அந்த நாடகக்காரர்கள் வந்து சேர்ந்தார்கள். அவர்களுடைய பாட்டும் கூத்தும் அப்பொழுது மதுரையை அப்படியே சொக்க வைத்தது. அதுவும் அந்தப் பெண் மாதவி யிருந்தாளே, அவள் ஆட்டம் ஜகவீர மீனாட்சி சுந்தரத் தேவரைக் கடகடவென்று ஆட்டி வைத்து விட்டது! இரவும் பகலும் அவர் அந்த நாடகக்காரியிடமே இருந்தார். வாள் பிடித்த அவர் கைகள் இப்பொழுது தாளம் போட்டுக் கொண்டிருந்தன மாதவியின் நடனத்துக்கு!

மாதவியின் ஆட்டத்தை எல்லோருமே விரும்பினாலும், பாளையக்காரரின் இந்தக் காதல் அவர்களுக்குப் பிடிக்க வில்லை. அவரிடம் துணிந்து இதைக் கூறவும் அவர்களால் முடியவில்லை. ஆனாலும் விஷயம் மட்டும் எப்படியோ ராணி மங்கம்மா வரையில் போய் விட்டது. முதலில் ராணி இதை நம்பவில்லை. பிறகு தானே இதை நேரில் பார்க்க மதுரைக்கு கிளம்பி விட்டாள். ஒரே ஒரு மெய்க்காப்பாளனோடு அவள் மாறு வேஷத்தில் திருச்சியை விட்டுப் புறப்பட்டு மதுரை வரும் வழியிலேயே மற்றொரு செய்தி அவளுக்குக் கிடைத்தது. ராமநாதபுரத்திலிருந்து வந்த சேதுபதி இப்பொழுது ராணி மங்கம்மாவின் ஆட்சியின் கீழ் இருக்கப் போவதில்லை யென்றும், அவளுக்குக் கப்பம் கட்ட முடியாதென்றும் சொல்லி விட்டான். இவ்வளவு காலம் மதுரையின் கீழ் சிற்றரசாகவே இருந்த சேதுபதிக்கு இந்தத் துணிவு வந்தது மங்கம்மாவுக்கு ஆத்திரத்தைக் கொடுத்தது. அந்த ஆத்திரமெல்லாம் இப்பொழுது பாளையக்காரர் மீனாட்சி சுந்தரத் தேவர்மீது திரும்பியது.

மதுரையை அவள் அடைந்த போது இருட்டி விட்டது. பல்லக்கோ பரிவாரங்களோ சூழ வராததால் அவளை யாருமே கவனிக்கவில்லை. ராணி நாடகமாடுமிட இடத்துக்கு வந்து ஒரு மூலையில் உட்கார்ந்தாள். அவள் கண்கள் சுற்றிச் சுழன்று வந்தன. அவள் எதிர்பார்த்தபடி அங்கே எங்கேயும் மீனாக்ஷி சுந்தரத்தேவர் தென்படவில்லை.

நாடகம் ஆரம்பமாயிற்று.

மாதவி சகுந்தலையாக வந்து ஆடியபோது மங்கம்மா அவளையே கவனித்துக் கொண்டிருந்தாள். அங்கமெல்லாம் பொங்கி வழியும் அவள் அழகில் ராணி ஒரு கணம் தன்னை மறந்தாள். அவள் உடலின் நெளிவிலே மகாராணியின் கோபம் கூட நெகிழ்ந்து கொடுத்தது. மறு கணம் அவள் முகம் கோபத்தால் சிவந்தது. துஷ்யந்த மகாராஜனாக மேடையின் மேலே காட்சி யளித்தது யாரென்று அவளால் ஊகிக்க அதிக நேரம் ஆகவில்லை. தேவரின் உடல் கட்டுப்போல் சாதாரண நாடகக்காரர்களிடம் காண முடியாது. வேஷங்கட்டி நிற்பது பாளையக்காரர்தான் என்பது தெரிந்ததும் ராணியின் பொறுமை எல்லை கடந்து விட்டது. வேகமாக மேடைப் பக்கம் வந்து, "என்ன பாளையக்காரரே! உமது வீரம் வெறும் நாடக வேஷமாகி விட்டது, பார்த்தீர்களா?" என்றாள் மனச் சலிப்புடன்.

தேவர் முகம் சிறுத்துவிட்டது. அவர் கனவில்கூட இதை எதிர்பார்க்கவில்லை. தன் முன் நிற்பது ராணி மங்கம்மாதானா என்று அவரால் நம்ப முடியவில்லை. வேஷங் கட்டி யாடும் இந்த நிலையில் தன்னை மகாராணி மங்கம்மா பார்த்து விட்டதை நினைத்தபொழுது அவரை வெட்கமும் அவமானமும் பிடுங்கித் தின்றன.

மகாராணி இன்னும் பேசிக் கொண்டே போனாள்.

"தேவரே, உமது கூத்தும் பாட்டும் எவ்வளவு தூரம் போய் விட்டது, தெரியுமா? ராமநாதபுரம் சீமையிலே கிழவன் சேதுபதி கப்பம் கட்ட மாட்டேனென்று மார் தட்டுகிறான். தஞ்சாவூரிலே மகாராஷ்டிரர்கள் எப்போது இந்தப் பக்கம் படையெடுக்கலா மென்று காத்துக்கொண்டிருக்கிறார்கள். திருவாங்கூர் அரசர் அநேகமாக வந்து

விடுவார். படை திரட்டியாகி விட்டதாம். நீர் காவல் செய்யும் அழகு இப்படித்தான்.........."

பாளையக்காரர் தலையைக் கீழே போட்டபடி நின்று கொண்டிருந்தார். அவருக்குப் பேச நா எழவில்லை.

"சரி, இன்று முதல் நீர் காவல் வேலையை விட்டு விடலாம். தேவரே, உமது பாளையம் மாறிவிட்டது. நீர் நாடு கடத்தப்பட்டிருக்கிறீர். நாளை இந் நேரத்திற்குள் இந்த மதுரைச் சீமையிலிருந்து நீர் வெளியே போய்விட வேண்டும். இதற்கெல்லாம் காரணமான இந்தப் பெண்ணை நான் என்னுடன் சிறைப் பிடித்து அழைத்து கொண்டு செல்கிறேன்......"

ராணி மங்கம்மா இதைச் சொல்லி விட்டு வெகு வேகமாக வெளியேறிப் போய் விட்டாள்.

தலை நிமிர்ந்து பாராமலேயே அங்கே நின்று கொண்டிருந்த தேவர் வெகு நேரத்திற்குப் பின் மெதுவாக வெளியே வந்தார். அங்கே கட்டியிருந்த தம் குதிரைமேல் ஏறி உட்கார்ந்தார். வழக்கமாக அவரிடம் காணப்படும் உற்சாகத்தைக் காணுததால் அவர் குதிரையும் தலையைக் குனிந்தபடியே மெதுவாக நடந்து சென்றது.

## 3

இப்பொழுது இந்த மண்டபம் இருக்குமிடத்தில் அப்பொழுது ஒரு பெரிய ஆலமர மிருந்தது. அதன் அடியிலே வந்து உட்கார்ந்தார் பாளையக்காரர், குதிரையை ஒரு பக்கமாக விட்டு விட்டு. அவருடைய உள்ளமும் உடலும் சோர்ந்து கிடந்தன. எதிரே வைகையில் புது வெள்ளம் பெருகிக் கொண்டே யிருந்தது. அந்த வெள்ளத்தைப் போலவே அவருடைய மனதிலும் எண்ணக் குமிழிகள் கொந்தளித்துக் கொண்டிருந்தன.

திடீரென்று ஏதோ கூச்சல் கேட்கவே, அவர் உணர்ச்சி பெற்ருர். எதிரே ஆற்றுக்கு அக்கரையில் தீவட்டி வெளிச்சமும் கூக்குரலும் அவரைத் தட்டி யெழுப்பின. மின்வெட்டு வேகத்தில் அவர் குதிரைமேல் பாய்ந்து வைகையில் இறங்கி விட்டார். எப்படித்தான் அக்கரைக்கு வந்தாரோ, அவருக்கே ஆச்சரியமாக இருந்தது. க்ஷணத்தில் அங்கே என்ன நடக்கிறதென்பதைப் புரிந்து கொண்டு விட்டார். பல்லக்கிலேறி வந்து கொண்டிருந்த யாரையோ வழிமறித்துக் கொள்ளை யடிக்க முயன்று கொண்டிருந்தனர் சில கொள்ளைக்காரர்கள்.

பாளையக்காரரின் குதிரையும் வாளும் அவர்கள் கண்களில் பட்டதுமே அவர்கள் ஓடி விட்டனர். கையிலே பிடித்திருந்த தீப்பந்தங்களை விட்டெறிந்து விட்டு அவர்கள் ஓடியதைக் கண்டதும் தேவர் அவற்றிலொன்றை எடுத்துக் கொண்டு பல்லக்கின் பக்கம் வந்தார். அப்பொழுதுதான் நிலைமையைச் சற்றே புரிந்துகொண்ட பல்லக்குக்காரர்கள், பாளையக்காரரைப் பார்த்ததும் மெதுவான குரலில் பல்லக்குக்குள் இருந்தவர்களிடம் என்னமோ சொன்னுர்கள்.

தீப்பந்தத்தைக் கையிலேந்தி நெருங்கி வந்த தேவர் அப்பொழுதுதான் திரைச் சீலையை விலக்கி விட்டு வெளியே பார்த்த மகாராணியைக் கவனித்தார். ராணி மங்கம்மாளை இப்படி ஒரு சூழ் நிலையில் மறுபடியும் சந்திப்போம் என்று அவர் நினைக்கவே யில்லை. அவருக்கு இன்னும் வெட்கமாகவே யிருந்தது. மதுரைப் பக்கத்தில் கொள்ளைக்காரர்களும் ஏற்பட்டு விட்டார்கள் என்பதை அறிந்து மகாராணி தம்மை என்ன சொல்வாளோ என்று அவர் அஞ்சினுர். ஆகவே இப்பொழுது அவள் பேசுவதற்கு முன்னுல் அவரே முந்திக் கொண்டு விட்டார்.

"தாயே, மன்னிக்க வேண்டும். இந்த முறை பொறுத்துக் கொள்ளுங்கள். எனக்கு இன்னும் ஒரே ஒரு சந்தர்ப்பம் கொடுங்கள். போருக்கு வரும் திருவாங்கூர் அரசரை எதிர்த்து நிற்கப் படைதிரட்டி நான் போகிறேன். எனக்கேற்பட்ட அவமானக் கறையைப் போக்கப் போரில் வெற்றி பெற்றுத் திருவாங்கூர் அரசரின் வாளைக் கொண்டு வந்து உங்கள் கால்களிலே வைக்கிறேன்."

ராணி மங்கம்மா சிரித்துக்கொண்டே சொன்னுள் :

"நல்லது, தேவரே! உமது தோள் வலியில் எனக்குப் பூர்ண நம்பிக்கை யிருக்கிறது. வெற்றியோடு திரும்பி வாரும். நாடக மேடையை விடப் போர்க்களம் தான் உமக்குச் சிறந்த இடம்."

மறுகணம் பல்லக்கு அப்பால் நகர்ந்தது.

* * *

சில நாட்களுக்குப் பிறகு அதே வைகை நதிக்கரையில் பிரம்மாண்டமான கூட்டம், வெற்றி மாலையுடன் திரும்பி வரும் ஜகவீர மீனுட்சி சுந்தரத் தேவரை வரவேற்கக் கூடி யிருந்தது. ராணி மங்கம்மாளும் புன்னகையுடன் அங்கே நின்று கொண்டிருந்தாள்.

குதிரையிலிருந்து குதித்திறங்கிய பாளையக்காரர் பளபளவென்று மின்னும் திருவாங்கூர் அரசரின் வாளை ராணி மங்கம்மாளின் காலடியில் வைத்தார்.

மகாராணி சந்தோஷத்தோடு கேட்டாள். "தேவரே, உமது வெற்றிக்குப் பரிசாக என்ன வேண்டுமானுலும் கேளும். தருகிறோம்."

பாளையக்காரர் கொஞ்சமும் தயங்காமல் கேட்டார்: "மகாராணி, என் மாதவியை எனக்கு மீண்டும் கொடுங்கள். எங்களிருவரையும் மனப்பூர்வமாக மன்னித்து விட்டு உங்கள் ஆசியைக் கொடுங்கள்."

ராணி மங்கம்மா அவர்களைத் தம்பதிகளாக்கிப் பாளையத்தையும் கொடுத்தாள். அந்த ஜகவீர மீனுட்சி சுந்தரத் தேவரின் வெற்றிக்கு நினைவுச் சின்னமாக இந்தப் பாளையக்காரன் சத்திரத்தையும் கட்டி வைத்தாள்.

## 4

"உம்...... நாடகக் காரியைக் கல்யாணம் பண்ணிக்கொள்வதென்ருல் இத்தனை கஷ்ட மிருக்கிறதா?......" என்று சொல்லியபடியே புரண்டு படுத்தேன்.

"என்ன, மகாராஜா! தூக்கம் தெளியவில்லையா?" என்ற இனிமையான குரலைக் கேட்டு விழித்துக் கொண்டேன். என் பக்கத்தில் மாலதி நேற்றுக் கட்டிய அதே ராணி வேஷத்தில் உட்கார்ந்திருந்தாள். குனிந்து என்னைப் பார்த்துக் கொண்டேன். ஆமாம், நானும் ராஜா வேஷத்திலேயே இருந்தேன்! "ராணி மங்கம்மா புண்ணியத்தில் அருமையான நாடகம் கிடைத்தது. மாலதி இந்த மதுரைச் சீமையை விட்டு உடனே போகக் கூடாது. கோட்டைப் பக்கம் போய் நமது சகாக்களில் இன்னும் யாராவது அகப்படுகிருர்களா என்று பார்ப்போம். என்னுடன் வா!" என்று அவளை அழைத்துக் கொண்டு கிளம்பினேன்.

என் நம்பிக்கை வீணுகப் போகவில்லை. மூன்று நாட்களுக்குப் பிறகு திருப்பரங்குன்றத்தில் அந்த நாற்பத்திரண்டாம் ஆண்டின் சூழ் நிலையிலும் எங்கள் 'பாளையக்காரன்' நாடகம் அமோகமான வெற்றியைக் கொடுத்தது.




பாருதவும் கண்ணன் பாட்டும் குசேலர் போய்க்
கூறுதேன் மீண்டார் குமரேசா! — தேறிக்
கரவா துவந்தீயும் கண்ணன்னுர் கண்ணும்
இரவாமை கோடி யுறும்.
— திருக்குறட் குமரேச வெண்பா
சந்திரா


தூது சென்ற ஔவை துணிந்தேகு தொண்டை மன்றுள்
கோதொழியச் சொன்னள் குமரேசா!—நீதகன்ற
தூய்மை துணைமை துணிவுடைமை யிம்மூன்றின்
வாய்மை வழியுரைப்பான் பண்பு.
— திருக்குறட் குமரேச வெண்பா


உள்ள வெறுக்கைபோன்றே உற்றுயர்ந்து சாணக்கன்
கொள்ள நின்றன் சீரேன் குமரேசா! — நள்ளா
உரமொருவற் குள்ள வெறுக்கையஃ தில்லார்
மரமக்க ளாதலே வேறு.
— திருக்குறட் குமரேச வெண்பா


காவிகந்த வன்பழியைக் காணாள் தமயந்தி
கோனடைந்த போதேன் குமரேசா! —நாளும்
எழுதுங்காற் கோல்காணுக் கண்ணேபோல் கொண்கன்
பழிகாணேன் கண்ட விடத்து.
— திருக்குறட் குமரேச வெண்பா
சந்திரா

# வெள்ளைத்துரையும் வீரத்துரையும்

ஜெகவீரபாண்டியனார்

உயர்ந்த செம்போர்க் குதிரை; உடல் முழுவதும் சிவப்பு நிறம்; இடையிடையே சிறிது கருமை கலந்திருந்தது; கம்பீரமான தோற்றம். அந்தச் சிறந்த குதிரை மேல் ஏறி ஆலன் துரை பாளையங்கோட்டையிலிருந்து வேளையை நோக்கி விரைந்து பாஞ்சாலங்குறிச்சிக்கு வந்தார். தெற்குக் கோட்டை வாசல் எதிரே வந்து குதிரை நின்றது. அதிலிருந்து அந்த ஆங்கிலேயர் இறங்கினார். பாஞ்சைப் பதியை வாஞ்சையோடு பார்த்தார்.

"காகம்* பறவாது கட்டபொம்மு கோட்டையின் மேல்" என்று அந்தப் பக்கங்களில் பாடுகின்ற நாட்டுப் பாடலின்படியே கோட்டை கொத்தளங்களோடு அதிசய நிலையில் அந்நகர் வீறு கொண்டு நின்றது. அந்நிலைகளை நோக்கி வியந்து அவர் நெஞ்சம் திகைத்தார். வாயிலை அணுகினார். ஆறு போர் வீரர்கள் அங்கே காவலாளராய் நின்றனர். வேல்களும், வல்லயங்களும் அவர்களுடைய கைகளில் இருந்தன. அவருள் தலைமையானவனை நோக்கி, "நான் வந்திருப்பதை உங்கள் ராஜாவிடம் போய்ச் சொல்லும்" என்று தமக்குத் தெரிந்த கொச்சைத் தமிழில் அந்த வெள்ளைத்துரை மெல்லச் சொன்னார்.

அவன் உள்ளே சென்றான்; துரை வெளியே நின்றார். சென்ற காவலன் அரசை அணுகி மரியாதையோடு வணங்கி நின்று வாய் புதைத்து, "மகாராஜா! ஒரு வெள்ளைக்காரன் குதிரையோடு வெளியே வந்து நின்றுள்ளான்; சமூகத்தைக் காணவேண்டும் என்று விரும்புகின்றான்" என்று மிகவும் விநயமாய் உரைத்தான்.

ஜமீன்தார் அருகே நின்ற ஒரு வீரனை நோக்கி, "யாரது போய் அழைத்து வா" என்று கட்டளையிட்டார்.

அவன் வெளியே போய் அவரை அழைத்து வந்தான்.

அரங்கமால் என்னும் சபா மண்டபத்தில் அந்த வெள்ளைத் துரைக்கு இந்த வீரத்துரை பேட்டி கொடுத்தார். தம் எதிரே சிறந்த ஆசனத்தில் அமரச் செய்து வந்த காரியத்தை விசாரித்தார். அதிசய கம்பீரமாயிருந்த இவரது உருவப் பொலிவை நோக்கிப் பெரிதும் உவந்த வெள்ளைத் துரை பின்வருமாறு பேசத் தொடங்கினார்:

**அழகும் ஆண்மையும் அமைதியும் வளமெனத்திரண்டு**
**தழுவு கொண்டோங்கி தோள்களும் தனித்தனி நோக்கி**
**விழைவு கூர்ந்துளம் வியந்தனன்; வேந்தனும் அவனைப்**
**பழகினன் எனப்பண்புடன் பார்த்துஇது பகர்ந்தான்.**

**எங்கிருந்து நேர் வருவதோ? யாது காரியமோ?**
**இங்கு வந்துளன்? இசையின் என்று அரசு இனித்திசைப்பத்**
**தங்குமேற்புலம் எதிடம்; கீழ்ப்புலச் சங்கத்து**
**எங்கள் காரியமாயிவண் வந்தனன்என்றான்.**

**இந்த மாநிலம் முழுவதும் நவாபிடம் இருந்தே**
**எந்தம் கையகம் வந்துளது; அரசெலாம் எமக்கு**
**முந்தவே திறை தந்துள; நும்மவர் மட்டும்**
**வந்தவாறில தந்தருள் மன்னவ! என்றான்.**

(வீரபாண்டியம்)

பாளையம் கோட்டையிலிருந்து வந்த வெள்ளைத்துரை பாஞ்சைத் துரையைக் கண்டு பேசிய காட்சிகளை இக்கவிப் படங்கள் காட்டியுள்ளன. சரித்திர நிகழ்ச்சிகளைக் கண் ஊன்றிக் காண வேண்டும்.

**மேல்புலம்** என்பது இங்கிலாந்து தேசத்தையும், **கீழ்ப்புலச் சங்கம்** என்பது கிழக்கு இந்தியக் கும்பெனி என்னும் கிழக்கு இந்திய வர்த்தகக் கழகத்தையும் குறிக்கும் சொற்கள் ஆகும்.

ஐரோப்பாக் கண்டத்திலிருந்து வாணிக முறையில் ஆங்கிலேயர் இங்கு வந்தனர். ஆங்காங்கு அமர்ந்து பாங்குடன் முயன்றனர். எவ்வழியும் ஆதாய நோக்கோடு ஊதியம் கருதி ஊக்கி முயன்றமையால் பெரும் பொருள் திரண்டது. நாளடைவில் நவாபிடமிருந்து தேச உரிமையும் பெற்று ஆட்சி புரியத் தொடங்கினர். பாண்டி மண்டலத்திலிருந்த பாளையக்காரர் எல்லாருக்கும் வரிகள் விதித்தனர். யாவரும் செலுத்தினர்.

ஆனால் பாஞ்சாலங்குறிச்சி மன்னரான **வீர பாண்டியக் கட்ட பொம்மு** மாத்திரம் திறை தர மறுத்தார். ஆறு ஆண்டுகளாக ஆனவரையும் பார்த்தார்கள் ஆங்கிலேயர்கள். யாதும் பலிக்கவில்லை. சென்னை, திருச்சிராப்பள்ளி, பாளையங்கோட்டை ஆகிய இந்த மூன்று இடங்களிலும் கும்பினியாருக்குக் காரிய நிலையங்கள் இருந்தன. அந்த நிலையில் 1798-ம் ஆண்டு மே மாதம் ஆலன் துரை பாஞ்சாலங்குறிச்சிக்கு வந்தார். பதியைக் கண்டார்; வரியை வரைந்து குறித்தார். அந்த நிகழ்ச்சிகளையே வீர பாண்டியம் என்னும் வீரகாவியம் இங்கு விளக்கியுள்ளது.

சீமைத்துரை வரியைக் குறித்து உரைத்தபோது கட்டபொம்மு கட்டாண்மையோடு மறுத்தார். யாருக்கும் திறை செலுத்தாமல் இறைமையா யிருந்து வந்தவர் ஆதலால் புதியராய் வந்தவர் வரி என்றதும் அதனை ஒரு பெரிய வசையாக நினைத்தார். "வானம் மழை பொழிகிறது; பூமி விளைகிறது; நான் குடிகளை நீதியுடன் பேணி வருகிறேன்; இடையே வந்து நீ வரி தா என்பது விருதா" என்றார்.

**வானம் மாமழை பொழிதர மாநிலம் விளைய**
**ஆன பேராக யான்புரந் தருளுவன்; இடையே**
**ஊன மாகவந்து ஒருவரி தருகஎன்று உரைத்தாய்!**
**நானம் எவ்விலோ தருகுவன் வரிஎனில் நாரேன்.**

**உழுது தன்குடி ஓம்பும் ஓர் உழவனே போலத்**
**தொழுது காணிக்கை தந்துநின் சொல்வழி வாழ்தல்**
**எழுதும் கீர்த்திசால் மன்குலத்து எம்மனோர்க்கு என்றும்**
**இழுதை நீதாம் இனியிதை எம்மிடம் இயம்பேல்!**

**என்னின் முன்னவர் இசைத்திசை பரப்பி மேய்நின்ற**
**பொன்னின் நாட்டினும் புகழ்க்கொடி நாட்டியுள் இருந்தார்;**
**பன்னருந்திறற் பாஞ்சையம்பதி அதிபதியாய்**
**இன்ன நாளில் யான் இருந்துளேன் இறையுமம் தாழேன்.**

**அரசை ஆள்பவர் அடியராய் வாழ்தலும் உண்டோ?**
**புரசை யானைமேல் போபவர் பூனைபோறுவரோ?**
**வரிசையாளுயர் மன்னர்தம் மரபினில் வந்தேன்;**
**வரிசெய் என்றுநீ உரைசெயல் வழிவழி இழிவே.**

**இனிய நல்லுயிர் தன்னினும் எனக்குயர் மானம்**
**புனிதம் ஆதலால் அதனையே போற்றியுள் வாழ்வேம்;**
**மனித வாழ்வினை ஒருபொருள் ஆகவே மதியேம்;**
**தனியது எம்வழி அவ்வழி என்றுமே தவறேம்.**

---

* பறவைகளும் விலங்குகளும் கூடக் கட்டபொம்முடைய ஆணையைக் கடவாமல் அஞ்சி நிற்கும் என்பதை இப்பாட்டு இங்ஙனம் அறிவித்துள்ளது.

தலைமையாய் நின்று தரணியை ஆளுவோம்; அந்த
நிலைமை நீங்கிளும் நிலைத்து ஒருகணம் வாழோம்;
புலமை யாளரைப் போற்றிமுன் வாழ்த்துவோம்; பொல்லா
நிலைமை யாளரை நீறுசெய் தாழ்த்துவோம் என்றான்.

முன்னவர்க்கு முன்னுகிய முருகன் எம்பெருமான்
தன்னடிக் கலால் தரணியில் மற்றுள எவர்க்கும்
மன்னன் என்றிரு மணிமுடி வணங்கிடாது என்னாய்ச்
சொன்ன சொல்லையும் வழுவிடாது எழுமையும் துணிபே.

நிறை என்று இன்றுநீர் வந்தனிர் சிற்றுநாட் சென்றும்
இறை என்று இங்கமர்ந் திருந்தோமர் தலைமிசை ஏறித்
துறைதோறும்பல வரிகளைச் சுமத்தியிந் நாட்டின்
நிறையழித்து நீர் நிறைவுற தேடுமுன் சூழ்ந்தீர்!

வாணிகத் துறை வல்லராய் வஞ்சமும் சூதும்
பேணி எம்மவர் பெரும்பொருள் குறும்புடன் கவர்ந்தீர்
காணியாகவும் இந்நிலம் கைக் கொள்ள விழைந்தீர்
ஆணிலாமனை எனநுழைந்து அவனிமேல் நின்றீர்.

மேலை நாட்டவர் கீழை நாட்டிடைவந்து தமது
கோலை நாட்டவும் கொடியினை நாட்டவும் குறித்தார்
மாலை நாட்டிய மனத்தவர் மதியிடை எனது
வேலை நாட்டியே எந்நிலம் எமக்கெனவிதிப்பேன்.

கண்ணைக் காப்பது கசிந்துள இமையன்றி அயலே
நண்ணி யுள்ளன நயந்துடன் காக்குமோ? பிறந்த
மண்ணைக் காப்பது வந்ததில் பிறந்த மன்குலத்தோர்க்கு
ஒன்றுமேயன்றி ஒழிந்துளோர் செய்வரோ உரிமை?

ஊனிருக்கவே உயிரினை வாங்குவார் போல
வானிருக்கவும் வளம் நிறைந்திருக்கவும் வாய்ந்த
கோனிருக்கவும் எங்களும் வறுமையே குடியாய்த்
தானிருக்கவே வந்தனர் நின்றனர் தழைத்தே.

தங்க ஓரிடம் கேட்டனர் தங்கிய பின்னர்
வங்கமாதிவண் தேசங்கள் வளைந்தனர் விரைந்தே
எங்குமே அதிகாரங்கள் செய்திட எழுந்தார்
இங்கு வந்திவர் அடைந்தது போல் எவர் அடைந்தார்?

இந் நிலத்தினில் உள்ளவர் எவரையும் தாழ்த்தி
எந்நிலத்திலும் இலாத வெம் கொடுமையை இங்கே
மன்னிடச்செய மதித்தனர் அம்மதி மறந்து
பின்னிடச்செய்வேன் பிழையிடச் செய்திடேன், பிறழ்ந்தும்

*(வீர பாண்டியம், நிறை மறுத்த படலம்)*

இந்தப் பாசுரங்களில் பதிந்துள்ள பொருள் நலங்களையும், குறிப்புகளையும், உணர்ச்சி நிலைகளையும் பல முறையும் ஆராய்ந்து கூர்ந்து உணர்ந்து கொள்ள வேண்டும்.

*"கண்ணில் ஏதேனும் தூசி விழ நேர்ந்தால் இமைகள் காக்குமே அன்றிக் கை கால்கள் வந்து காப்பாற்றுது. அது போல் நான் பிறந்த மண்ணில் என் குடி சனங்களை யான் உரிமையோடு பேணுவேனே அல்லாமல் ஆறுயிரம் மைல்களுக்கு அப்பாலிருந்து கண்டு வந்து யாண்டும் தன்னலமே கருதிப் பொன்னையும் பொருளையும் திரட்டிச் செல்லும் இயல்பினையுடைய அயலினர் ஆதரவாய்ப் பேண மாட்டார்; வீணே இக்காட்டில் பிழைகளை காட்டாதீர்!"* என்று இவ் வீரன் கூறியுள்ள தீர மொழிகள் சிந்திக்கவுரியன.




"டேய், வாசு! இன்றிரவு நாடகத்துக்குப் போவோம், வருகிறாயா?" என்று கேட்டுக் கொண்டே வந்த ராஜாராமன் வாசுவுடன் ஊஞ்சலில் உட்கார்ந்தான்.

"நான் நாடகம் பார்க்க வெளியே எதற்காகப் போகவேண்டும்? எங்கள் வீட்டில் தான் நான் தவறினாலும் நாடகம் தவறாமல் நடந்து கொண்டிருக்கிறதே!" என்று அலுத்துக் கொண்டான் வாசு.

இதைக் கேட்டதும் வாசுவின் தாயார் சமையல் அறையிலிருந்து வெளியே வந்தாள். அவளைத் தொடர்ந்து வாசுவின் தங்கை பங்கஜாவும் சமையல் அறை வாசற்படியில் வந்து, இடுப்பை நெளித்துக் கொண்டு ஒய்யாரமாக நின்றாள்.

"ராஜாராமனா? வா, அப்பா. நல்ல சமயத்தில் நீ வந்தாய். வாசுவுக்கு நீயாவது புத்தி சொல்லு. நாலு நாளாக வீட்டை அமர்க்களப்படுத்திக் கொண்டிருக்கிறான்" என்று ஆரம்பித்தாள் வாசுவின் தாயார்.

"ஆமாம். நாலு நாளாக நானா வீட்டை அமர்க்களப் படுத்துகிறேன்? நீயும் பங்கஜாவும்தான் நாலு வருஷங்களாக ஊரையெல்லாம் அமர்க்களப் படுத்திக் கொண்டிருக்கிறீர்களே!" என்று சீறினான் வாசு.

இதைக் கேட்டதும் பங்கஜாவின் முகம் சுருங்கியது. ராஜாராமன் அங்கு இராவிடில், அவள் வாசுவுக்குச் சரியான பதில் கொடுத்திருப்பாள் என்பதை அவள் முகம் காட்டியது.

"நீயே சொல்லு. புதன் கிழமையன்று பெண் பார்ப்பதற்காக வண்டாமலைக்குச் சென்றிருந்தோம். பெண் பார்ப்பதற்கு நான் இதுவரை வாசுவை அழைத்துச் சென்றதேயில்லை. எனக்குத்தான் அவனுடைய கோணல் புத்தி தெரியுமே! அவன் அப்பா வாசுவையும் ஏதோ கூப்பிட்டு வைத்தார். 'நீயும் அம்மாவும் போய்ப் பார்த்தால் போதும், அப்பா' என்று ஒரு பிள்ளை மரியாதைக்காகவாவது சொல்லாதோ? அப்பா சொன்னது தான் தாமதம், புது ஜரிகை அங்கவஸ்திரத்தைப் போட்டுக் கொண்டு புறப்பட்டு விட்டான்!" என்று கூறி வாசுவின் தாயார் முகவாய்க் கட்டையில் கையை வைத்துக் கொண்டாள்.

"இரண்டு மூன்று வருஷங்களாக நீங்கள் நடத்தி வரும் நாடகத்துக்கு ஒரு முடிவுகட்ட வேண்டாமா? அதற்காகத் தான் நான் புறப்பட்டு வந்தேன்!" என்றான் வாசு.

வாசுவை அவன் தாயார் வெறிக்க ஒரு பார்வை பார்த்துவிட்டு மேலும் தொடர்ந்தாள்.

"அந்தப் பெண்ணுக்கும் அழகுக்கும் வெகு தூரம் இருக்கிறது. அப்படியாவது அவர்கள் பணக்காரர்களா? அதுவுமில்லை. அந்தப் பெண்ணின் பெயர் மங்காவாம்! மங்கு என்று வைத்திருந்தால் பொருத்தமாக இருக்கும்! ஏழையான, அவலட்சணமான அந்தப் பெண்ணைத் தவிர வேறு யாரையும் கல்யாணம் செய்து கொள்ள மாட்டேன் என்று நாலு நாளாக இவன் கூத்து அடிக்கிறான்."

"ஏழையாக இருப்பதும் லட்சணமில்லாமல் இருப்பதும் மன்னிக்க முடியாத குற்றமா?" என்று கோபத்துடன் கேட்டான் வாசு.

"இவனுடைய வேதாந்தத்தைப் பார்! எவ்வளவோ கஷ்டப்பட்டு இவனை பி. ஏ. வரையில் படிக்க வைத்ததற்கு இதுதான் பலன் போல் இருக்கிறது. இந்த உலகத்தில் அழகான பெண் மனைவியாக வாய்க்க வேண்டும் என்று ஆசைப்படாத ஒரு பிள்ளை உண்டா? அவலட்சணமான பெண் தான் வேண்டும் என்று இவன் சொல்லுகிறானே! இந்த வெட்கக்

கேட்டை நான் யாரிடம் போய்ச் சொல்லுவது?"

"அழகு முக்கியமா? குணம் முக்கியமா?" என்று கேட்டான் வாசு.

"இது என்ன அசட்டுக் கேள்வி? அந்தப் பெண்ணின் அருமையான குணத்தை நீ சில நிமிஷத்துக்குள் கண்டு பிடித்து விட்டாயோ?" என்றாள் அவனுடைய தாயார்.

"அந்தப் பெண்ணைப் போல் உனக்கு ஒரு பெண் இருந்தால், நீ இப்படியெல்லாம் பேசமாட்டாய்."

இவ்விதம் வாசு கூறியதும் பங்கஜாவின் முகத்தில் புன்முறுவல் தவழ்ந்தது. ஏனெனில் வாசு அவ்விதம் கூறியதற்குப் பங்கஜா அழகி என்று அர்த்தம் அல்லவா?

அதே சமயம் ராஜாராமன் பங்கஜாவை ஒருவிதமாகப் பார்க்கவே, அவள் வெட்கப்பட்டுக் கொண்டு உள்ளே சென்று விட்டாள்.

வாசு மேலும் ஆத்திரத்துடன் பேசலானான்.

"அந்தப் பெண்ணைப் பார்க்கச் சென்ற போது, ராஜாராமா, அம்மாவும் பங்கஜாவும் அவர்களை என்ன பாடுபடுத்தி விட்டார்கள் தெரியுமா? பெண்ணுக்கு நன்றாகப் பேசத் தெரியுமா? பாடத் தெரியுமா? காது கேட்குமா? இதையெல்லாம் அறிந்து கொள்வதற்காகப் பலவிதமான பரீட்சை நடத்தினார்கள்!

"அந்தப் பெண் என்னையும் அப்பாவையும் நமஸ்காரம் செய்வதற்காக வந்த போது, அவள் முகத்தை நான் பார்த்தேன். அதை நான் என்றென்றும் மறக்க முடியாது. நான் வேறு யாரையாவது கல்யாணம் செய்து கொண்டால், என் ஆயுள் வரையில் அந்தச் சோக முகம் என்னை வாட்டி வரும்; எனக்கு வாழ்க்கையில் மனநிம்மதி ஏற்படாது."

இச்சந்தர்ப்பத்தில் வாசுவின் தாயார் இடைமறித்தாள்.

"அவளைப் பெண் பார்க்க இதற்கு முன் ஏழு, எட்டுப் பிள்ளைகள் வந்தார்களாம். பெண் அழகில்லை என்று போய் விட்டார்களாம். பின்னர் உன்னைப் போல் விசித்திரப் பிறவியாக இருப்பார்களா, என்ன? பெண்களின் லட்சணத்தைக் கண்டு பிள்ளைகள் மயங்குவதாக நான் கேள்விப்பட்டிருக்கிறேன். ஆனால் லட்சணமற்ற இந்தப் பெண் எப்படியோ இவன்மீது மோகனாஸ்திரத்தை வீசிவிட்டாளே?" என்று ஆச்சரியப்பட்டாள்.

"ராஜாராமா, இதைக் கேள். நான் கலாசாலையில் வாசித்தபோது மனோதத்துவப் பேராசிரியர் ஒருவர் சொன்னதை அப்போது அர்த்தமற்ற வாதமாக நினைத்தேன். ஆனால், அவர் கூறியதில் பொதிந்து கிடக்கும் உண்மைத் தத்துவம் இப்போதுதான் எனக்குத் தெளிவாகத் தெரிகிறது.

"'பெண்களுக்குக் கடவுள் அழகை ஏன் கொடுத்திருக்கிறார், தெரியுமா? அவர்களுடைய கெட்ட குணங்களை மறைப்பதற்காகத்தான். ரோஜாவின் அழகு அதைச் சுற்றியுள்ள முட்களை மறைப்பது போல! அவலட்சணமான பெண்கள் நிச்சயமாகக் குணவதிகளாகத் தான் இருப்பார்கள். கருணாமூர்த்தியான கடவுள் சிருஷ்டியிலே ஒரு குறை வைத்தால், மற்றொரு விதத்தில் அதற்குப் பரிகாரம் செய்யாமல் இருப்பதில்லை. எனினும் பெண்களின் அவலட்சணம் அவர்களுடைய நல்ல குணங்களை மறைத்து விடுவது உண்டு! உதாரணமாக, 'அடாடா! அழகுக்குத் தகுந்த குணம்' என்று சொல்லுகிறார்களே ஒழிய, 'அவலட்சணமாக இருந்தாலும் அருமையான குணம் படைத்தவள்' என்று யாரும் சொல்லக் கேட்டதில்லை. சிறந்த லட்சணமும், லட்சணத்துக்கேற்ற உயர்ந்த குணமும் வாய்க்கப் பெற்றுள்ள பெண்கள் கோடியில் ஒருத்தி தான் இருக்கமுடியும்'—இவ்வாறு என் பேராசிரியர் அடிக்கடி தகுந்த உதாரணங்களுடன் சொல்வது உண்டு."

வாசுவின் இந்த நீண்டப் பிரசங்கத்தைக் கேட்ட அவன் தாயார் ஒரு பெருமூச்சு விட்டாள்.

"நான் எதற்காக என் மனத்தை அலட்டிக் கொள்ள வேண்டும்? உன் தலை எழுத்துப்படி நடந்து விட்டுப் போகட்டும். என் அதிர்ஷ்டத்துக்குத் தகுந்தவாறுதானே எனக்கு நாட்டுப் பெண் வாய்ப்பாள்?" என்று சொல்லி விட்டு அவள் உள்ளே சென்றாள்.

வாசு அவலட்சணமான ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொள்வதாகக் கூறும் வேடிக்கையைக் கேட்டு ராஜாராமன் ஒன்றும் புரியாமல் உட்கார்ந்திருந்தான்.

"ராஜாராமா, என்ன ஒன்றுமே சொல்லாமல் இப்படி மௌனமாக உட்கார்ந்திருக்கிறாயே!" என்று கேட்டான் வாசு.

"நீ படித்தவன், புத்திசாலி. உனக்கு நான் புத்திமதி சொல்வதற்கு என்ன இருக்கிறது?" என்று பொறுப்பைத் தட்டிக் கழிக்கப் பார்த்தான் ராஜாராமன்.



"அந்தக் காட்சியை நீ பார்த்திருந்தால், நிச்சயமாக உன் மனம் உருகியிருக்கும். பெண் சோர்ந்து போய் எதிரில் வந்து அழாக் குறையாக நின்றாள். அவளுடைய தகப்பனாரோ, செஷன்ஸ் கோர்ட்டில் கடுந் தண்டனையை எதிர்பார்க்கும் குற்றவாளி, நீதிபதியை எப்படிப் பரிதாபமாகப் பார்ப்பாரோ, அப்படியே என்னைப் பார்த்துக் கொண்டிருந்தார். பெண்ணின் தாயாருடைய கைகால்கள் நடுங்கின. உள்ளே திரும்பிச் செல்லும் போது அந்தப் பெண்ணின் கால்கள் தள்ளாடின. அவள் எங்கு கீழே விழுந்து விடுவாளோ என்று பயந்து, அவளுடைய தாயார் அவளுடைய கையைப் பிடித்துக் கொண்டாள். என் அம்மா தன் அதிருப்தியை எந்தெந்த விதத்தில் தெரிவிக்க முடியுமோ, அப்படியெல்லாம் தாட்சிண்யமின்றித் தெரிவித்து விட்டாள்."

இதையெல்லாம் கேட்டபோது ராஜாராமனின் மனம்கூட வருந்தியது. வாசு மேலும் தொடர்ந்தான்:

"ஊருக்குப் போய்க் கடிதம் எழுதுகிறீர்களா?" என்று பெண்ணின் தாயார் காலில் விழாக் குறையாகப் பணிவுடன் அம்மாவைக் கேட்டாள். அதற்கு என் அம்மா என்ன பதில் சொன்னாள் தெரியுமா?

"கடிதம் எழுதுவதற்கு என்ன இருக்கிறது? என் பிள்ளை இஷ்டப்பட மாட்டான்" என்று ஈவு இரக்கமின்றிச் சொல்லி விட்டாள்.

"அப்போது பெண்ணின் தாயாருடைய முகத்தைப் பார்த்த என் நெஞ்சம் துடிதுடித்து விட்டது. அதே சமயம் உள்ளே இருந்து வந்த பெண்ணின் விம்மல் சப்தத்தையும் நான் கேட்காமல் இல்லை.



அவ்வளவுதான்! அதே க்ஷணத்தில் நான் ஒரு முடிவுக்கு வந்துவிட்டேன். அந்தக் குடும்பத்தின் சந்தோஷத்துக்காக, அந்தப் பெண்ணின் நல்வாழ்வுக்காக நான் அவளையே கல்யாணம் செய்து கொள்ள வேண்டும் என்ற முடிவுக்கு வந்தேன். அதே சமயத்தில் அந்த ஊர்க் கோவில் மணி 'டாண்' 'டாண்' என்று அடித்தது. என் தீர்மானம் தெய்வ சம்மதத்தையும் பெற்றுவிட்டதாக எனக்குத் தோன்றியது" என்றான் வாசுதேவன்.

வாசுவின் போக்கு முதலில் ராஜாராமனுக்கு வேடிக்கையாகத் தோன்றியது. ஆனால் வாசு கூறிய விவரங்களையெல்லாம் கேட்ட பின் ராஜாராமனின் கண்களில் நீர் ததும்பியது. அவனால் பேசக்கூட முடியவில்லை.

"வாசு, நீ தெய்வப் பிறவி. உன்னைப் போன்ற உத்தமனைப் பிள்ளையைப் பெற்ற உன் தாயார் மகா பாக்கியசாலி" என்றான் உணர்ச்சியுடன்.

"என் கதை அத்துடன் முடிந்துவிடவில்லை. என் தீர்மானத்தை அவர்களுக்கு எப்படித் தெரிவிப்பது? அம்மா, அப்பா எல்லாரும் வெளியே வரும்போது நான் ரேழிப் புறத்தில் தயங்கி நின்றேன். ஏதோ காலில் குத்தியது போல் கீழே குனிந்தேன். பெண்ணின் அப்பா 'காலில் என்ன குத்திற்று' என்று பரபரப்புடன் கூறிக் கொண்டே, என் அருகில் வந்தார். "நீங்கள் கவலைப்பட வேண்டாம். உங்கள் பெண்ணைத் தவிர வேறு யாரையும் நான் கல்யாணம் செய்து கொள்ளப் போவதில்லை" என்றேன் மெதுவாக அவரிடம்.

"அப்போது அவரது முகத்தில் ஏற்பட்ட மாறுதலைப் பார்க்க வேண்டுமே! வறுமையில் உழன்று பசியால் வாடும் ஒருவனுக்குத் திடீரென்று 'லாட்டரி'யில் லட்சம் ரூபாய் கிடைத்தால் எப்படியிருக்கும்? நீயே கற்பனை செய்து பார்த்துக் கொள்! அப்படி இருந்தது அவரது முகம்!" என்று கூறி முடித்தான் வாசு.

* * *

இரண்டு தினங்களுக்குப் பிறகு வாசு 'அம்மா, அம்மா' என்று பரபரப்புடன் கூப்பிட்டுக் கொண்டே வீட்டுக்குள் வந்தான்.

'என்னடா, அப்பா? என்றாள் அவன் தாயார் அசுவாரஸ்யமாக.

"உனக்கு இரண்டு நல்ல செய்திகள் கொண்டு வந்திருக்கிறேன்."

"என்ன நல்ல செய்தி?"

"நிச்சயதார்த்தம் செய்வதற்கு நாம் மறுபடியும் வண்டாமரைக்குச் செல்ல வேண்டும். மங்கள காரியத்தைத் தட்டாதே. 'சரி' என்று சொல்லு.

"மற்றொரு நல்ல செய்தி என்ன தெரியுமா? ராஜாராமன் நமது வீட்டையே சுற்றிக் கொண்டிருந்தான் அல்லவா? என் தோழன், அதனால்தான் இங்கு அடிக்கடி வருகிறான் என்று நீ நினைத்துக் கொண்டிருந்தாய். எனக்காக அவன் இங்கு வரவில்லை. நமது அருமைப் பங்கஜாவுக்காகத்தான் வருகிறான். பங்கஜாவைத் தவிர வேறு யாரையும் அவன் கல்யாணம் செய்து கொள்ள மாட்டானாம்! சத்தியம் செய்து கொடுத்திருக்கிறான்!"

"விளையாடுகிறாயா? நீ சொல்வதை நம்ப முடியவில்லையே! அவன் பணக்கார வீட்டுப் பிள்ளை. பத்தாயிரம், இருபதினாயிரம் என்று எதிர் ஜாமீன் கொடுத்து எத்தனையோ பேர் பெண்



கொடுக்கப் போட்டி போட்டுக் கொண்டு முன் வருவார்களே?"

"அதெல்லாம் சரிதான் அம்மா. ஆனால், பங்கஜாவை அவனுக்கு ரொம்பவும் பிடித்து விட்டது. அவன் செல்லப் பிள்ளை. அவன் இஷ்டத்துக்கு விரோதமாக அவன் தாயாரும் தகப்பனாரும் எதுவும் செய்ய மாட்டார்கள். உன் நாட்டுப் பெண் வீட்டுக்கு வருவதற்கு முன்பே நம் குடும்பத்துக்கு அதிர்ஷ்டம் வந்து விட்டது, பார்!" என்றான் வாசு மகிழ்ச்சியுடன்.

அப்போதுகூட வாசு கூறியதை அவன் தாயார் நம்பவில்லை. வண்டாமாலைக்குச் செல்லத் தான் யாதொரு ஆட்சேபணையும் செய்யக்கூடாது என்பதற்காக வாசு அவ்வாறு கற்பனை செய்து சொல்லுகிறானோ என்று அவளுக்குச் சந்தேகம் ஏற்பட்டது. எனவே அவன் வாயைக் கிளறி உண்மையை உடனே தெரிந்து கொள்ள முற்பட்டாள்.

"ராஜாராமனின் அப்பா ஜாதகம், சகுனம் என்று பார்க்காமல் அவன் சொல்வதற்கு இசைந்து விடுவாரா?"

"அந்தச் சந்தேகம் எல்லாம் ஏற்படுவதற்கு ராஜாராமன் இடம் வைக்கவில்லை. என் மேஜைக்குள் இருந்த பங்கஜாவின் ஜாதகத்தை எடுத்துச் சென்று வைத்தி சாஸ்திரிகளிடம் காட்டினான். அவர் 'பொருத்தம் திவ்யமாக இருக்கிறது' என்று சொல்லி விட்டார். அவர் அப்படி நல் வாக்கு கூறியதற்காக அவரது கையில் ராஜாராமன் கனியாக ஐந்து ரூபாயை எடுத்து வைத்தான். இனி மறுபடியும் அதே நாடகம்தான் நடக்கும். நாம் பங்கஜாவின் ஜாதகத்தை ராஜாராமனுடைய அப்பாவிடம் கொடுத்தால், அவர் வைத்தி சாஸ்திரிகளைத்தான் அழைத்து ஜாதகத்தைப் பார்ப்பார். சாஸ்திரிகள் 'சரியான பொருத்தம்' என்று சொல்லி விட்டால், பிறகு கல்யாணம் ஆனது போலத்தான்!" என்றான் வாசு.

"பங்கஜா பிறந்த உடனேயேதான் நான் சொல்லி விட்டேனே, அவள் பெரிய இடத்தில் வாழ்க்கைப் படுவாள் என்று......! நாம் பணக்காரர்களாக இராவிட்டால் என்ன? பங்கஜாவுக்கு நிறைய நகைகள் போட்டுப் பார்த்தால், அவள் அழகுக்கு ஈடு ஜோடு ஏது?" என்று கூறி, பங்கஜாவை அன்பு ததும்பப் பார்த்தாள் வாசுவின் தாயார்.

"இனிமேல் பங்கஜாவின் கழுத்திலும், காதிலும், மூக்கிலும் வைரங்கள் ஜொலிக்கும்" என்றான் வாசு.

இதைக் கேட்ட வாசுவின் தாயாருக்குத் தான் ஆகாயத்தில் பறப்பது போல் தோன்றியது. பங்கஜாவுக்கு உண்டான ஆனந்தத்தைப் பற்றியோ சொல்லவே வேண்டியதில்லை.

பங்கஜாவுக்கு உயர்ந்த இடத்தில் கல்யாணம் நடக்கப் போகிறது என்ற மகிழ்ச்சியில் வாசுவின் தாயார் கண்ணுக்கு வண்டாமாலைப் பெண்ணின் எழ்மையும் அவலட்சணமும் கூடத் தெரியாமல் மறைந்து விட்டன!

* * *

மறு நாள் வாசு தன் தாயாருடனும் பங்கஜாவுடனும் வண்டாமாலைக்குப் புறப்பட்டான். வண்டியை விட்டுக் கீழே இறங்கி எல்லோரும் வீட்டுக்குள் சென்றார்கள்.

முன் தடவைக்கும் இந்தத் தடவைக்கும் எவ்வளவு வேற்றுமை! அப்போது பெண் வீட்டாரின் முகங்கள் கலக்கத்தினாலும் பீதியினாலும் பொலிவிழந்திருந்தன. ஆனால் இந்தத் தடவையோ அவர்களுடைய முகங்களில் களை வீசுவதாக வாசுவின் தாயாருக்கும் பங்கஜாவுக்கும் தோன்றியது!

"பெண் அன்று இருந்ததற்கு இன்று எவ்வளவோ மேல், அம்மா" என்று பங்கஜா தன் தாயாரின் காதோடு காதாகக் கூறினாள்.

"ஆமாம், ஆமாம்! நம் வீட்டுக்கு வந்தால் அவளுக்கு அழகிட்டு விடும்" என்றாள் தாயார் பதிலுக்கு.

"மங்கா, உன் மாமியாருக்கு நமஸ்காரம் செய்" என்றாள் பெண்ணின் தாயார் மிகவும் மரியாதையாக.

வாசுவின் தாயாருக்கு நமஸ்காரம் செய்த மங்கா, திடீரென்று என்ன நினைத்துக் கொண்டாளோ என்னவோ, அவளுடைய இரு கால்களையும் பிடித்துக் கொண்டாள். "அம்மா, நீங்கள்தான் என் தெய்வம்" என்றாள் விம்மிக் கொண்டே.

உடனே வாசுவின் தாயாருடைய மனம் உருகி விட்டது. "கண்ணே! நீ தீர்க்க சுமங்கலியாக, பிள்ளைகளைப் பெற்று, தீர்க்காயுசுடன் க்ஷேமமாக இருக்க வேண்டும்" என்று ஆசீர்வதித்து, மங்காவை அப்படியே தூக்கி மார்பில் அணைத்துக் கொண்டாள்.

சிறிது நேரம் கழித்து மங்கா அப்பால் சென்றபின், "ஏன் அம்மா? மங்காவின் மோகனுஸ்திரத்தில் வாசு மயங்கிவிட்டதாக நீ சொன்னாயே. இப்போது உன்மீதுகூட இவள் மோகனுஸ்திரத்தை வீசி விட்டாள் போல் இருக்கிறதே!" என்று பங்கஜா கூறவே, அம்மாவுக்கும் பெண்ணுக்கும் சிரிப்புத் தாங்க முடியவில்லை.

இதைக் கண்ட வாசு, மங்கா, அவளுடைய தாயார், தகப்பனார் எல்லோரும், வாசுவின் தாயாரும் பங்கஜாவும் எதற்காகச் சிரித்தார்கள் என்பதைத் தெரிந்து கொள்ளாமலேயே தாங்களும் சேர்ந்து சிரித்தார்கள். அவர்களுடைய சிரிப்பு அந்த வீடு முழுவதும் நிறைந்து எதிரொலித்தது!

எங்கள் ஆதரவாளர்களுக்கும் நண்பர்களுக்கும் மனமார்ந்த தீபாவளித் நல் வாழ்த்துக்கள் !

# இந்தியாவின் தலைசிறந்த பட்டணம் பொடி

உழுது உழைத்து உலகிற்கே உணவளிக்கும் உழவர்கள்.
நெற்றிவேர்வை நிலத்தில் விழ பாடுபடும் பாட்டாளிகள்.
உடுக்க உடை உதவி உடல் காக்கும் நெசவாளர்கள்.
காட்டிலுள்ளவற்றையும் கடைத்தெருவிற்கு கொண்டுவரும்
வர்த்தகர்கள்... கவலையைப் போக்கவல்ல கவிதை இயற்றும்
கவிஞர்கள்... பாரபட்சமின்றி வரைந்து தள்ளும்
பத்திரிகாசிரியர்கள்... சமயமறிந்து சட்டம் பேசும் சட்டநிபுணர்கள்.
நியாயம் நிலைத்து நிற்க நீதி வழங்கும் நீதிபதிகள்..
கடல் கடத்தி கரை சேர்க்கும் கப்பலோட்டிகள்..
தூரப்பிரதேசங்களுக்கு துரிதமாக கொண்டு சேர்க்கும்
விமானிகள்...... நாட்டினை பாது
காக்கும் போர்வீரர்கள்....

மற்றும் ஏனையோர்களுக்கும் மேன்மேலும்
ஊக்கம் தருவதும் உற்சாகமூட்டுவதும் உயர்தர




# T.A.S. ரத்தினம் பட்டணம் பொடி

T.A.S. ரத்தினம் பிரதர்ஸ், தபால் பெட்டி 1151, வண்ணாரப் பேட்டை, மதராஸ்.

S. R. ஞானம் பட்டணம் பொடியும் எமது தயாரிப்பே.



இந்நன்னாளில்

எமது

குதூகல

வாழ்த்துக்கள்

MORTON



மார்டன்

மிட்டாய்கள்

தென்னிந்தியாவுக்கு பூரணவிநியோகஸ்தர்கள்:-

ஸௌத் இந்தியா கார்ப்பொரேஷன் (மதராஸ்) லிமிடெட்,

த. பெ. 113, நெ. 2, அரண்மனைக்காரத் தெரு, சென்னை-1.

தந்தி: 'GOODWILL' போன்: 4911 (4 LINES)






மெரிக்காவில் என் படிப்பும் ஆராய்ச்சியும் முடிந்து தாய்நாடு திரும்பு வதற்கு ஆயத்தமானேன். அப்போது தான் அந்த அபூர்வ தம்பதிகளின் பரிச்சயம் எனக்கு ஏற்பட்டது. விஞ்ஞான ஆராய்ச்சியின் பொருட்டு வந்திருக்கும் மாணவன் என்ற முறையில் எனது ஆசிரியர் அவர்களுக்கு என்னை அறிமுகப்படுத்தி வைத்தார். அந்தத் தம்பதிகளின் இனிய பேச்சும், பாரத நாட்டின் மேல் அவர்களுக்கிருந்த பாசமும் என்னை ஆச்சரியத்தில் மூழ்கச் செய்தன.

ஏதோ ஒரு கம்பெனியில் உத்தியோகம் வகித்து வந்த அவர் தமது மனைவியுடன் தமிழ் நாட்டிலே சில வருஷம் தங்கியிருந்தாராம். அதன் பயனாக அவர்கள் தமிழர் பண்பாட்டிலே ஊறி விட்டனர். அவர்களுக்குத் தெரிந்திருந்த அவ்வளவு விஷயங்கள் தமிழ் நாட்டிலே பிறந்து வளர்ந்த எனக்குக் கூடத் தெரியாது! சிற்பம், சித்திரம், சங்கீதம் இவைகளுக்கும் எனக்கும் வெகு தூரம். கலைகளைப் பொறுத்த வரையில் அவர்கள் தாமரையை நாடும் வண்டுகளாக இருந்தனர். நானோ தாமரைக் குளத்திலே வாழும் தவளையாக இருந்து வந்தேன்.

அந்தக் கலா ரஸிகரின் பெயர் ஹில்டன் பிரௌன். நல்ல வாட்ட சாட்டமான சரீரம், ரோஜா நிறம் கலந்த நிறம், அகன்ற நெற்றி, ஆழ்ந்த கண்கள், அழுத்தமான மோவாய், எப்பொழுதும் சாந்தமாகவும் அமைதியாகவும் இருக்கும்தன்மை. இவையெல்லாம் சேர்ந்து அவர் கம்பீரமும் பெருந்தன்மையும் வாய்ந்தவர் என்பதைப் பறைசாற்றின.

"பல வருஷங்கள் தமிழ் நாட்டிலே வாழ்ந்ததன் பயனாக, அவர்களுடைய ஹிருதயத்திலே தென்னிந்தியக் கலைகளின் சிறப்பு சிரேஷ்டமான இடம் பெற்று விட்டது. எனவே, அவரை ஓர் இந்தியர் என்று கூடச் சொல்லலாம்!" என்று அவரை அறிமுகம் செய்து வைத்த எனது ஆசிரியர் மகிழ்ச்சியுடன் கூறினார்.

ஹில்டன் பிரௌனின் மனைவி ஸ்ரீமதி எவ்லின் பிரௌன் நல்ல வடிவழகி. வெண்மை நிறம், அகன்ற நெற்றி, மெல்லிய நீண்ட எடுப்பான மூக்கு, முகத்திற்குச் சற்றுப் பெரிதாகவே தோன்றும் நீல மணிக் கண்கள், எப்பொழுதும் இளநகை தோன்றும் மலர்முகம், இவைகளுக்கெல்லாம் சிகரமாகப் பேச்சிலே இனிமை! சற்றே வெளுத்தும் சுருண்டுமான அழகிய கூந்தலை அவள் வாரிப் பந்து போல் தோளிலே படிய விட்டிருந்தாள்.

அந்தப் பெண்மணியின் செயல்களிலெல்லாம் இந்தியப் பண்பாட்டின் பிரதிபலிப்பைக் கண்டேன். முதன் முறை சந்தித்த பொழுது அவள் கையிலே வைத்திருந்த தமிழ்நாட்டுச் சித்திரவேலை செய்த அழகுப் பையைக் கண்டு நான் திகைத்துப் போனேன்.

° ° °

அன்று பிற்பகல் நாலு மணிக்குத் தேநீர் அருந்தும் பொருட்டு அவர்கள் என்னை அழைத்திருந்தனர்.

அன்று அவர்களுடன் கழித்த நேரத்தை நான் எக்காலத்திலும் மறக்க முடியாது. மிகுந்த அறிவும் ரஸிகத் தன்மையும், விஷய ஞானமும் நிறைந்த அத் தம்பதிகளுடன் பேசிப் பார்த்தவர்கள்தான் என் மன மகிழ்ச்சியை உணர்ந்து கொள்ள முடியும்.

அந்த சிற்றுண்டிக்குப் பின், சீக்கிரமாய் அவர்களை விட்டுப் பிரியப் போகிறோமே என்ற எண்ணம் என் மனத்தை வருத்தத் தொடங்கியது.

அவர்கள் வீட்டை அடைந்த பொழுது, வரவேற்புக்குச் சித்தமாய் வாயில் தாழ்வாரத்திலே நின்று கொண்டிருந்தார் பிரௌன். என்னை அவர் அன்புடன் வரவேற்றுக் கை குலுக்கினார். அவர் முகத்திலே ஆதரவும் குதூகலமும் நிறைந்திருந்தன.

"உங்கள் முறைப்படியே வரவேற்கிறேன்" என்று கரம் குவித்தாள் ஸ்ரீமதி பிரௌன். கைதேர்ந்த ஒரு சிற்பி செதுக்கிய நடன மங்கையைப் போலிருந்தது அவள் கைகுவித்து வணங்கி நின்ற காட்சி! சற்று நேரம் அந்த வாயிற்புறத்துத் தாழ்வாரத்திலேயே உட்கார்ந்து அளவளாவிப் பேசிக் கொண்டிருந்தோம்.

வீட்டின் முன்புறம் அழகிய தோட்டம். அதிலே விதவிதமான வண்ண மலர்கள். அவை அமைந்திருந்த நேர்த்தியும் ஒழுங்கும் அவர்களது கலைச் சுவைக்குக் கட்டியம் கூறின. சற்று நேரம் வேறு ஏதேதோ பேசிய பிறகு எழுந்து உள் அறைக்குச் சென்றோம்.

அங்கே நான் கண்ட காட்சி என்னைத் திகைக்கச் செய்தது.

ஒரு ஓரத்திலே போடப்பட்டிருந்த பெரிய மேஜை மீது நடராஜ மூர்த்தியின் விக்கிரகம் காட்சி அளித்தது. இரு புறமும் ஐந்து முகமுள்ள குத்து விளக்குகள் பள பளவென்று தேய்க்கப்பட்டுப் பொன்னைப் போல் மின்னிக் கொண்டிருந்தன. நடராஜ மூர்த்தியின் பீடத்துக்கு அருகில் மேற்படியில் பல கிளைகளுடன் கூடிய கற்பூரக் கிளை விளக்கு ஒன்றும் வைக்கப்பட்டிருந்தது. அவ்வறையின் மற்ற நான்கு மூலைகளிலும் கன்யாகுமரி, சரபமூர்த்தி, லக்ஷ்மி வராக மூர்த்தி போன்ற விக்கிரகங்கள் வைக்கப்பட்டிருந்தன. இவைகளெல்லாம் சேர்ந்து தமிழ் நாட்டில் ஏதோ ஒரு கோயிலுக்கு உள்ளே வந்திருக்கிறோம் என்ற பவித்திரமான நினைவை என் மனத்தில் உண்டாக்கின.

தேநீர் விருந்து முடிந்த பிறகு நான் நெடுநேரம் அவர்களுடன் பேசிக் கொண்டிருந்தேன். இடையிலே குறிப்பாக என்னுடைய நன்றியையும் தெரிவித்துக் கொண்டேன். ஸ்ரீமதி பிரௌன் இந்தியாவிலே குமரி முனை தொடங்கி, வரிசையாகச் சில ஊர்களைப் பற்றி விசாரித்தாள். அவள் கேள்விகளிலிருந்து என் சிறுமையை நானே உணர்ந்தேன். தமிழ் நாட்டைப் பற்றி அவளுக்குத் தெரிந்ததில் பத்தில் ஒரு பங்கு கூட எனக்குத் தெரியவில்லையே!

ஸ்ரீ பிரௌன் மிகுந்த மத பக்தி உள்ளவர். 'மரணத்தை வென்றவர்' என்ற பெயர் இயேசுநாதர் ஒருவருக்கே உரியது என்று அவர் நினைத்துக் கொண்டிருந்தாராம். ஆனால், தமிழ் நாட்டிலே அவரிடம் ஒரு குமாஸ்தா இருந்தாராம். அந்தக் குமாஸ்தாவினுடைய பெயரின் கருத்து என்ன என்று அவர் ஒரு நாள் விசாரித்தாராம். குமாஸ்தா, தன் பெயர் 'மிருத்யுஞ்ஜயன்' அதாவது மரணத்தை வென்றவன் என்று சொல்லி, அதன் பொருளையும் விளக்கினாராம். அது முதல் அந்தக் குமாஸ்தாவின் மேல் பிரௌனுக்கு அன்பு ஏற்பட்டு விட்டதாம்!

இந்த விஷயத்தை நகைச் சுவையுடன் விவரித்துக் கூறினாள் ஸ்ரீமதி பிரௌன். அவர் அதைக் கேட்டுக் குலுங்கக் குலுங்கச் சிரித்தார்.



பிறகு அந்த அறையிலிருந்த மற்ற விக்கிரகங்களைப் பார்க்க எழுந்தேன். அப்பொழுது, "அடாடா! மறந்தே போய் விட்டேனே! நாம் வரும் பொழுது வாங்கினோமே, அந்த விக்கிரகத்தைப் பற்றி இவரிடம் கேட்கலாமே?" என்றார் பிரேமன்.

"இதோ கொண்டு வருகிறேன்" என்று உள்ளே ஓடினான் அவன். மறுவிநாடி கையிலே ஒரு கன்னிப் பெட்டியுடன் தோன்றினான்.

அந்தப் பெட்டியிலே ஏராளமான காகிதங்களுக்கு இடையிலே கம்பீரமாக வீற்றிருந்தார் விநாயகப் பெருமான். "ஆஹா! எந்தக் கோயிலின் உற்சவ மூர்த்தியோ? கடல் கடந்து இங்கே வந்துவிட்டாரே!" என்று நினைத்தேன்.

இதற்குள் அவன் காகிதக் குவியலிலிருந்து விநாயக மூர்த்தியை வெளியே எடுத்து, மேஜையின் நடுவே பெருமிதத்துடன் வைத்தான்.

அதை நன்றாகப் பார்த்ததும் நான் திகைத்துப் போனேன். அந்த விநாயகர் மற்ற விநாயக விக்கிரகங்களைப் போல் இல்லை. நாற்புறமும் நான்கு தலைகள்; உச்சியில் ஒருதலை. பத்துக் கைகள்! அதிலே பாசம், அங்குசம் நீங்கலாக மேலும் அறுவகை ஆயுதங்கள்! நான்கு முகங்களிலும் நான்கு வெவ்வேறு பாவங்கள்! உச்சியிலிருக்கும் முகம் மட்டும் கண்கள் குவியப் புன்சிரிப்புடன் நம்மை உற்று நோக்குவது போல் இருந்தது!

எனக்கும் பேச வாயெழவில்லை. இந்த அழகிய மூர்த்தியை இதற்கு முன் நான் எங்கேயோ கண்டதாக ஒரு மங்கிய நினைவு ஊசலாடியது. 'எங்கே? எங்கே?' என்று என்னை நானே கேட்டுக் கொண்டேன்.

ஸ்ரீமதி பிரேமன், "இம்மாதிரி வடிவத்தை இதற்கு முன் பார்த்திருக்கிறீர்களா?" என்று கேட்டாள்.

"பார்த்திருக்கிறேன். ஆனால் எங்கே, எப்பொழுது என்பதுதான் நினைவுக்கு வரவில்லை" என்றேன்.

"இந்தியாவிலே இம்மாதிரி வடிவத்தை ஒரே ஒரு ஸ்தபதிதான் செய்தாராம். அவர் பெயர் மாயன் ஆச்சாரி. அவர் இதைப் போல் மூன்றே மூன்று விக்கிரகங்கள்தான் செய்தாராம். அவற்றில் இது ஒன்று. இந்த ஆச்சாரி கி. பி. ஒன்பதாம் நூற்றாண்டில் இருந்தவராம்" என்றாள்.

"ஆனால் தமிழ் நாட்டிலே இருந்த ஆறு மதங்களுள் 'காணபத்யம்' என்ற மதத்தினர் வழிபட்ட முழுமுதற் கடவுள்தான் இந்த விக்கிரகம்" என்றார் ஸ்ரீ பிரேமன்.

எழுந்து ஆச்சரியகரமான அந்த மூர்த்தியை உற்றுப் பார்க்கலானேன். ஒவ்வொரு அங்கமாய்ப் பார்த்து வந்தவன் அடியிலிருந்த பீடத்தை நோக்கினேன். அதிலே அழகிய பழந்தமிழ் மொழியிலே, "புலியூர்க் கோட்டத்தைச் சேர்ந்த இளையனூர் பொன்னெழில் அம்பாளின் கணங்களுக்கு அதிபதி இந்தக் கணபதி. ஐங்கரனை ஐம்முகத்தானைக் காண்கிறான் பொன்னெழில்" என்று பொறித்திருந்தது.

நான் ஸ்தம்பித்துப் போய்விட்டேன்.

எங்கள் ஊரை அடுத்த பொன்னெழிலின் கோயிலைச் சேர்ந்தவர்தான் அந்தப் பஞ்சமுக விநாயகர். சந்தேகமே இல்லை! அந்த கோயிலிலே, என் குழந்தைப் பருவத்திலே எத்தனையோ தடவைகள் அம்மாவின் கையைப் பிடித்துக் கொண்டு அந்தப் பிராகாரத்தைச் சுற்றி இருக்கிறேன். அங்கே அறுபத்துமூவர் விக்கிரகங்களுக்கு முன்னே சிறு துண்டு ஒன்றை உடுத்துக் கம்பீரமாக உட்கார்ந்திருப்பார் அந்த விநாயகர். அப்படியிருக்க அவர் இவர்களுக்கு எப்படிக் கிடைத்தார்? மிகுந்த கட்டுக்காவலுடைய கோயிலாயிற்றே! அப்பாகூட அந்தக் கோவிலில் சில வருஷங்கள் தர்மகர்த்தாவாக இருந்தாரே! இது எப்படி இவர்களுக்குக் கிடைத்திருக்கும்? "ஆமாம், இந்த விக்கிரகம் உங்களுக்கு எங்கே கிடைத்தது?" என்றேன்.

"தமிழ் நாட்டிலே பெண்ணையாற்றின் கரையிலே......" என்று ஸ்ரீ பிரேமன் தொடங்கினார்.

இதற்குள் ஸ்ரீமதி பிரேமன் இடைமறித்து, "தயவுசெய்து மன்னிக்க வேண்டும். இதைக் கொடுத்தவருக்கு நாங்கள் ஒரு வாக்களித்திருக்கிறோம். அவர் பெயரையாவது கிடைத்த விதத்தையாவது வெளியிடுவதற்கில்லை. அவர் மிகுந்த சிரமத்தின்பேரில் இதை எங்களுக்கு வரவழைத்துக் கொடுத்தார்" என்றாள்.

"ஆனால்.........நீங்கள்.........நல்ல விலை......" என்று மேலே பேச வாயெழாமல் சற்றே நிறுத்தினேன்.

"என்ன? விலையா? இது விலை மதிப்பிடக்கூடிய பொருளா? கலா செளந்தர்யத்தின் சிகரமல்லவா? ஏதோ எங்களாலியன்ற காணிக்கையாக 6000 ரூபாய் கொடுத்தோம். அவர்கள் எடுத்துக் கொண்ட சிரமத்திற்கு இந்த அற்பத் தொகை எம்மாத்திரம்? இதற்கு ஆறாயிரம் அல்ல, அறுபதினாயிரம் அல்ல, ஆறு லட்சமும் கொடுக்கலாமே!" என்றார் பிரேமன்.

பேச்சு முடிந்தது. விடை பெற்று வீடு திரும்பினேன். அவர்களைச் சந்திக்குமுன் இருந்த உற்சாகத்துக்கு நேர்மாறாக என் தலை கனத்தது. இன்னதென்று விவரிக்க இயலாத ஒருவகை வேதனையினால் என் மனம் தவித்தது. இரவு சாப்பாடு வேண்டாமென்று சொல்லிப் படுத்தேன்.

படுக்கையில் படுத்த எனக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. சாயங்காலம் அவர்கள் வீட்டிலே கண்ட காட்சிகள், பேசிய பேச்சுக்கள் எல்லாம் இதயத்திலேயே வட்டமிட்டுச் சுழன்று கொண்டிருந்தன. அந்த மஹா கணபதி என்னை நோக்கிப் புன்முறுவல் செய்து கொண்டிருந்தார்.

"இவர்கள் துரோகிகள்! நம் நாட்டுக் கலைச் செல்வத்தைக் கொள்ளையடித்துக் கொண்டு வந்திருக்கும் கொள்ளைக்காரர்கள். கலையாம்! பண்பாடாம்! இந்தப் பொருள்களை வைத்துக் கொண்டு பொன்னையும் புகழையும் பெறலாமென்று திட்டமிட்டிருக்கிறார்களோ, என்னமோ? யாருக்குத் தெரியும்?...கஜினி முகம்மது வெளிப்படையாகக் கொள்ளையடித்தான். இவர்கள் நாகரிகமாகத் திருடிக் கொண்டு வந்திருக்கிறார்கள்..." என்றெல்லாம் ஓடின என் சிந்தனைகள்.

"அவர்கள் கொள்ளைக்காரர்களாக இருந்தால் என்னை அன்புடன் உபசரித்து, என்னிடம் இந்த விக்கிரகத்தைக் காட்டுவார்களா? இவ்வளவு நற்குணம் வாய்ந்தவர்கள் எப்படிக் கொள்ளைக்காரர்களாக இருக்க முடியும்?" என்றும் மற்றோர் புறம் என் மனத்தில் தோன்றியது.





அன்று நான் புறப்பட வேண்டிய தினம். அம்மாவின் கடிதம் அதற்கு முன் தினம் தான் கிடைத்தது. ஸ்விட்ஸர்லாந்து, பிரான்ஸ் முதலிய இடங்களுக்குச் சென்று சுற்றிப் பார்த்த பின்பே தாய்நாடு திரும்புவதாயிருந்தேன். அம்மாவின் கடிதத்தைக் கண்ட பின் என் திட்டங்களெல்லாம் சிதறிப் போயின. ஏனெனில் விஷயம் மிகவும் முக்கியமானது.

“அப்பாவின் உடல் நிலை நாளுக்கு நாள் பலஹீனமாகி வருகிறது. ஆகவே, நீ நேரில் இங்கேயே வந்து சேர். நீ உத்யோகம் செய்து முதல் மாதச் சம்பளத்தை வாங்கியதும் அப்பாவின் கையிலே கொடுத்து நமஸ்காரம் செய்ய வேணுமென்றும், அதை அப்படியே வாங்கிப் பொன்னமுதி அம்பாளின் வளையல் திருநாளுக்குக் கொடுத்து விட வேண்டுமென்றும் நினைத்திருந்தேன். அம்பிகையின் அருள் எப்படி இருக்குமோ? எனக்கு ரொம்பவும் கவலையாக இருக்கிறது. ‘செல்லமணி எப்போது வருவான், எப்போது வருவான்?’ என்று அவர் மனம் துடித்துக் கொண்டிருக்கிறது. யார் வந்தாலும் உன்னைப் பற்றியும் உன் படிப்பைப் பற்றியும் தான் பேச்சு. வேறு ஒன்றும் எழுதத் தோன்றவில்லை. உடனே வந்து சேர்.”

இதுதான் கடிதத்தின் ஸாரம். என் உயிருக்குயிரான தந்தையின் அருகிலிருந்து நல்ல வைத்தியர்களை அழைத்துச் சிகிச்சை செய்ய வேணும். அம்மா சொன்னால் கேட்கமாட்டார். பிடிவாதக்காரர். தம்பி ஊருக்கு வந்திருப்பான். என்ன உடம்போ?

அவரது சிக்கன வாழ்க்கையும், என்னைப் படிக்க வைப்பதன் பொருட்டு அவர் பட்ட கஷ்டங்களும், பிற்காலத்தைப் பற்றி அவர் கட்டியிருந்த மனக் கோட்டைகளும் என் கண் முன்னே தோன்றலாயின.

ஆகவே, “கப்பலிலே போகவில்லை. ஆகாய விமானம் மூலமாகத்தான் தாய்நாடு திரும்புகிறேன்” என்று பிரேனனுக்குச் செய்தி அனுப்பினேன்.

விமான நிலையத்தில் கடைசியாக பிரேனன் தம்பதிகளைக் கண்ட பொழுது எனக்கு மெய் சிலிர்த்தது. ஓர் இந்திய இளைஞனை வழியனுப்ப அவர்கள் வந்திருந்தது அங்குள்ளவர்களுக்கு ஆச்சரியத்தை அளித்தது. நான் பெருமையுடன் எல்லோரையும் ஒரு முறை பார்த்துக் கொண்டேன். அவர் தமது கம்பீரமான குரலில், என் பிரயாணம் திருப்திகரமாக இருக்கும் பொருட்டு என்னை வாழ்த்தினார்.

ஸ்ரீமதி பிரேனனோ புன்முறுவலுடன், “மீண்டும் ஒரு முறை அமெரிக்காவுக்கு விஜயம் செய்யும்பொழுது மிகச் சிறந்த கலைஞராக வருவீர்கள்” என்று கூறி விடை கொடுத்தாள்.

உண்மையில் நான் மீண்டும் ஒரு முறை அமெரிக்கா வரவேண்டுமென்று விரும்புகிறாளா? அல்லது வெறும் உபசார வார்த்தையா? ஆம், நான் வராவிட்டாலும், அவர்கள் இந்தியாவுக்கு வரக்கூடும். இன்னும் மிச்சம் மீதி ஏதாவது இருந்தால் சுரண்டிக் கொண்டு போகலாமல்லவா?

இதென்ன எண்ணம்? இவர்கள்மேல் குற்றம் என்ன? உள்ளூர்த் துரோகி ஒருவன் தன் சுயலாபத்துக்காகத் தெய்வத்தையே திருடி விற்றிருக்கிறான். இது என்ன சின்னப் பொருளா? இவ்வளவு பெரிய தெய்வ விக்கிரகத்தை எப்படித்தான் திருடினானோ? அவனையல்லவா நோக வேணும். பணம்! பணம்! பணம்! சில வெள்ளிக் காசுகளுக்காக ஏசு நாதரையே ஒரு துரோகி காட்டிக் கொடுக்க வில்லையா? உலகந்தோன்றிய நாள் முதல் இவ்வித் துரோகிகள் கூட்டம் இருந்து கொண்டுதான் இருக்கிறது.

• • •

நான் வந்து சேருமுன்பே செய்தி எதிர் கொண்டு வந்து விட்டது. விஷயம் எதிர் பார்த்ததுதான். ஆனால் இவ்வளவு சீக்கிரத்திலேயே நேர்ந்து விடுமென்று ஒருவரும் நினைக்கவில்லை. நாங்கள் கொடுத்து வைத்தது அவ்வளவுதான். தாய் தந்தையரின் அன்பு வற்றாத செல்வம். கொடுத்து வைத்தவர்களுக்குத்தானே கிடைக்கும்? அவருக்கும் வாழ்க்கையின் நல்ல நிலைமையைக் காணக் கொடுத்து வைக்கவில்லை. உண்ண நான் உண்ண மட்டும் உழைத்து உழைத்து ஓடானார். உட்காரச் சொல்லுவதற்குள் காலன் எங்களை முந்திவிட்டான். அம்மாவைத் தேற்றுவதைத் தவிர, நான் வேறு என்ன செய்ய முடியும்?

அம்மாவைத் தேற்றுவது எளிதாக இல்லை. வருங்காலப் பிரச்னைகள் பிரும்மாண்டமான உருவுடன் எதிரே நின்றன. ஒன்றும் விளங்காமல் தவித்துக் கொண்டிருந்தேன்.

“கைப் பெட்டியைத் திறந்து சிட்டு காட்டு என்ன இருக்கிறதோ, பார்!” என்று கொத்துச் சாவியை என்னிடம் கொடுத்தாள் அம்மா. நான் பெட்டியைத் திறந்து ஒவ்வொன்றும் எடுத்துப் படிக்கலானேன். என்னென்னமோ கடிதங்கள், அடமானப் பொருள்கள், பத்திரங்கள், புரியாத கையெழுத்திலே ஏதேதோ தஸ்தாவேஜுகள், எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டே வந்தேன்.

அழகிய நீல நிறமுள்ள கவர் ஒன்று எல்லாவற்றுக்கும் அடியில்

# கவியின் யோகம்

எம்.எஸ்.மணி

"தீர்த்தப விலாஸ்" என்ற பளபளப்பான பித்தளைத் தகட்டையுடைய அந்த அழகான வீட்டில் அன்று ஏகக் கனேபரம்! வாயிலில் ஸினிமா நடிக நட்சத்திரங்களின் கார்களைக் காண வெளியில் கூடி யிருந்த விசிறிகளின் கூட்டம் ஆயிரத்துக்கு மேலிருக்கலாம். நிருபர்களும் போலீஸ்காரர்களும் அந்த வீட்டை முற்றுகையிட்டவண்ணமா யிருந்தனர். இவ்வளவுக்கும் காரணம் அந்த வீட்டில் இன்னும் சற்று நேரத்தில நடக்கப் போகும் கிரகப் பிரவேசம்தான். அப் புதிய வீட்டின் புதிய சொந்தக்காரர் தான் கவி குஞ்சர கனக சபாபதிப் பாவாணர் அவர்கள்!

கவி குஞ்சர கனக சபாபதிப் பாவாணர் என்ற பெயரைக் கேட்டவுடன் உங்களுக்கு ஒரு திகைப்பு ஏற்படலாம். அப்பெயரை எங்கேயோ கேட்ட மாதிரி இருக்கிறது. ஆனால் தெளிவாகத் தெரியவில்லை என்ற பிரமை தோன்றலாம்.

"வாடா குப்பா! வாடா குப்பா!—திரும்பி
போடா கப்பா! போடா கப்பா!

என்ற பாட்டின் அடியை உங்கள் காதில் மெதுவாக யாராவது ஓதினால் உடனே பளிச்சென்று புரியும், யார் இந்தக் கவி குஞ்சரம் என்று! "ஏகாம்பர நாதன்" அல்லது "எனக்கேன் இந்தத் தொல்லை" என்ற நாவலை



போட்டிப் படம் பிடிக்கப்பட்ட "அலங்காரி" என்ற ஸினிமாவை நீங்கள் பார்த்தபோது மேலேசொன்ன பாட்டு உங்களைத் திணற அடித்ததே. அதன் சாகித்ய கர்த்தாதான் கவி குஞ்சர கனகசபாபதிப் பாவாணர்!

அவர் இந்த "வாடா குப்பா! போடா கப்பா!" என்ற ஒரே ஒரு பாட்டினால் மட்டும் பிரபல மடையவில்லை. அதைவிடப் பலே பலே பாட்டுக்களெல்லாம் பல பல ஸினிமாப் படங்களுக்கு எழுதி யிருக்கிறார். ஆனால் ஜனங்கள் வாயிலும் காதிலும் மாறி மாறி விடாமல் ரீங்காரம் செய்து மண்டையைத் துளைக்கும் பாட்டு இந்த "வாடா குப்பா!" பாட்டுத் தான் என்பது உங்களுக்குத் தெரியும்.

கவி குஞ்சர கனக சபாபதிப் பாவாணர் முதலில் வெறும் கனக சபாபதி யாகத்தா னிருந்தார். அதாவது அவர் ஸினிமாவுக்குப் பாட்டுக்கள் எழுதத் தொடங்குமுன். சதாரம் பாட்டுக்களைத் தோற்கடிக்கும் வகையில் அவர் கட்டிய பல அருமையான சாகித்யங்களில் ஒரு துளி—ஒரே ஒரு துளி—இதோ தருகிறேன்:

"மண்டையாவது மண்டை!
அவிழ்த்து பார்த்தால் சட்டி:
இப்படி ஒரு வெட்டு அப்படி ஒரு குத்து!
ஆளு விழுந்தான் (செ)த்து."

கவலைப்பட வேண்டாம். கவியுள்பட அவ்விஷயம் யாருக்கும் தெரியா விட்டாலும், அவர் அதை இப்போது அலங்காரமாக வைத்துக் கொண்டிருப்பதால், நாமும் அவரை அப்படித் தான் கூப்பிட வேண்டும்.

மேலும் இப்போது அவர் பெரிய மனிதராகி ஸில்க் ஜிப்பாவுக்குள் புகுந்து கொண்டிருக்கிறார். முன்பு அரைக் குடுமி வைத்துக் கொண்டிருந்தவர் இப்போது 'கிராப்' வைத்துக் கொண்டிருக்கிறார். முன்பு தகர டப்பாவைக் கையில் வைத்திருந்தவர் இப்போது வெள்ளி வெற்றிலைப் பெட்டியை வைத்திருக்கிறார். இப்போது காதுகளில் வைரக் கடுக்கன், கழுத்தில் தங்கச் செயின், விரலுக்கு இரண்டு வைர மோதிரங்கள், நெற்றியில் ஜவ்வாது, சுற்றிலும் சிஷ்யர்கள்!

இப்போது அவர் எதையும் கவி நோக்குடன் காண்கிறார். கூடிய சீக்கிரம் அவர் தமிழ் சினிமா சங்கீதத்திற்குச் செய்த சேவையைப் பாராட்டி அவருக்கு ஒரு பண முடிப்புக் கொடுப்பதுடன் நில்லாமல், "டப்பா சங்கீதத்தின் அப்பா" என்ற விருதையும் அன்பர்கள் வழங்கப் போகிறார்கள்!

இவ்வளவு பெரிய அவரிடம் நாம் மரியாதையாய் நடக்காவிட்டால் நம் மேல் 'சாபக்கவி' என்று சொல்லுகிறார்களே, அதைப் பாடினாலும் பாடி விடுவார்! ஆகையால் அவரைப் பற்றி முடிக்கு முன்பு அவருக்கு மரியாதையாக, சமீபத்தில் வெளி வரப்போகும் "இந்திர பாணம்" என்ற படத்திற்கு அவர் இயற்றிய காதலர்கள் பாடும் ஒரு 'டூயட்'டை மட்டும் கீழே தருகிறேன். கதையையும் சந்தர்ப்பத்தையும் பற்றிக் கவிகுஞ்சரப் பாவாணருக்கே அக்கறை யில்லாதபோது, நமக்கு அக்கறை இருக்க வேண்டிய அவசியமில்லை அல்லவா?

ராகம்:—நின்ரூபா, தாளம்:—ஷோக்கில் "மேரிகா துவாப் கை" என்ற இந்தி மெட்டு

யுவன்:—

ஏன் போகணும்டீ!
ஏனோ இந்த ராங்கி?

யுவதி:—

ஏன் போகணும்ளா!
எங்கே அந்தத் தேங்கா(ய்)?

யுவன்:—

கொண்டு வந்தேனே!
கொடுக்கவில்லையோ?

யுவதி:—

இல்லே! இல்லே! இல்லே!
கொடுக்கவே இல்லே!

யுவன்:—

ஆமாம்! கொடுத்தேன், ஆமாம்!

யுவதி:—

ஹ ஹா ஹி ஹி!

யுவன்:—

ஹா' ஹா' ஹே ஹே!

யுவதி:—

மலரும் மணமும்!

யுவன்:—

உயிரும் உடலும்!

யுவதி:—

மோரும் பாலும்!

யுவன்:—

தாரும் கீறும்!

இருவரும்:—

நெருப்பும் செருப்பும் போல
இனிநாம் உலகில் வாழ்வோமே!
நம்மை யார் பிரித்தாலும்
அவரை அன்றே வெல்வோமே!

கவி குஞ்சர கனக சபாபதிப் பாவாணர் இருக்கும் வரைக்கும் நம் சினிமா சங்கீதத்தின் அபிவிருத்தியைப் பற்றி நமக்குக் கவலை எதற்கு?

வாழ்க சினிமா சங்கீதம்!

வாழ்க கவிகுஞ்சரம்!!

## அன்றும் இன்றும்!





சங்க காலத்தில் வாழ்ந்த தமிழ் மக்களின் அன்பு நிறைந்த வீட்டு வாழ்க்கையையும் வீரம் செறிந்த காட்டு வாழ்க்கையையும் சித்திரிக்கும் காட்சிகளைப் புறநானூற்றிலும் அகநானூற்றிலும் காணலாம். தன் காதல் மனைவியை நீண்ட காலமாகப் பிரிந்து வீரப் போர் புரிந்து வெற்றிபெற்ற ஒரு வீரன் தன் மனைவியைக் காண விரைந்து வருகிறான். ராஜ பாட்டையோடு சென்றால் தாமதமாகும் என்று காட்டு வழியில் வருகிறான். மாலையில் மலரும் மலர்கள் பூத்துக் குலுங்குகின்றன. வண்டுகள் மலர்களில் தம் காதல் மனைவியுடன் கூடித் தேன் குடிக்கின்றன. வீரன் வந்த ரதத்தின் மணியோசை கேட்டு வண்டுகள் மிரண்டு பறந்தன. போர்க் களத்தில் எத்தனையோ எதிரிகளைக் கொன்ற வீரன் அந்த வண்டுகளின் அமைதியான வாழ்க்கை குலைவதைக் கண்டு அஞ்சினான். ரதத்தில் உள்ள மணிகளின் நாக்கை ஆடாமல் கட்டச் செய்து மெதுவாக ரதத்தை ஓட்டும்படி கட்டளையிட்டான். தமிழர்களின் உயர்ந்த பண்பை எடுத்துக் கூறும் இந்த அருமையான காட்சியைச் சித்திரிக்கும் அகநானூற்றுச் செய்யுள்.

"குரங்குளைப் பொலிந்த கொய்சுவல் புரவி
நரம்பார்த் தன்ன வாங்குவள் பரிய
பூத்த பொங்கர்த் துணையொடு வதிந்த
தாதுண் பறவை பேதுறல் அஞ்சி
மணிநா ஆர்த்த மாண்வினைத் தேரன்......"

— அகநானூறு 4.



இருங்கோ வேள் என்ற மன்னனுக்குப் பாரிமகளிரை மணமுடிக்க வந்த கபிலர், இருங்கோவேளின் முன்னோரைப் பற்றியும் அவன் குடியைப் பற்றியும் பாராட்டிப் பேசுகிறார். 'நாற்பத்தொன்பது அரசர்களின் வழியில் வந்த வேளே!' என்கிறார். மேலும், அவனுடைய முன்னோர்களில் ஒருவன் காட்டுக்கு வேட்டையாடச் சென்றான். அங்கே ஒரு முனிவன் செய்த தவத்துக்கு இடையூறாக இருந்தது ஒரு புலி. முனிவன் 'புலியைக் கடிவாயாக' என்றதும் அந்தப் புலியுடன் போர் செய்து கொன்றானாம். அதை நினைவுறுத்திக் கபிலர் இருங்கோவேளைப் பாராட்டுகிறார்; அத்துடன் அவன் வீர பரம்பரையையும் பாராட்டுகிறார்.

உவரா ஈகைத் துவரை யாண்டு
நாற்பத் தொன்பது வழிமுறை வந்த
வேளிருள் வேளே! விறல்போ ரண்ணல்
தாரணி யானைச் சேட்டிருங் கோவே
ஆண்கட னுடைமையிற் பாண்கட னாற்றிய
ஒலியற் கண்ணிப் புலிகடி மாஅல்

— புறநானூறு 201




தமிழ்நாட்டுச் சிற்றரசன் ஒருவனுடைய வீரத்தை எடுத்துக் காட்டும் செய்தியொன்று புறநானூற்றில் காணக் கிடைக்கிறது. சீறூர் மன்னன் ஒருவனுக்கும் பெருவேந்தன் ஒருவனுக்கும் கடும்போர் நிகழ்ந்தது. வேந்தன் வேலை ஓங்கிச் சீறூர் மன்னனுடைய மார்பகத்தில் வீசினான். அது நன்றாகத் தைத்துவிடவே, 'சீறூர் மன்னன் தொலைந்தான்' என்றே நினைத்தான் வேந்தன். ஆனால் அந்தச் சீறூர் மன்னன் நல்ல வீரன். தன் மார்பில் புதைந்த வேலைப் பிடுங்கிப் பகைவர் பக்கம் வீசினான். அதைக் கண்டு, பெண் யானைகள் எல்லாம் வெட்கப்படும் வகையில் ஆண் யானைகள் புறமுதுகிட்டு ஓடின.

வேந்துடன் றெறிந்த வேலே யென்னை
சார்ந்தா ரகல முளங்கழிந் தன்றே
உளங்கழி சுடர்ப்படை யேந்திநம் பெருவிறல்
ஓச்சினன் றுரந்த காலை மற்றவன்
புன்றலை மடப்பிடி நாணக்
குஞ்சர மெல்லாம் புறக்கொடுத் தனவே.

— புறநானூறு 308.




ஒரு வீரன் தன் ஊரிலிருந்து அபகரித்துச் செல்லப்பட்ட ஆநிரையை, பகைவருடன் போர் செய்து மீட்டுக் கொடுத்தான். ஆனால் அவன் அந்தப் போரிலேயே இறந்து பட்டான். அந்த அரும் வீரனுக்கு ஊரிலுள்ளவர்கள், தமிழர் வழக்கப்படி வீரக் கல் நட்டு, அதில் அவன் பெயரைப் பொறித்து மலர் மாலையும் மயிற்பீலியையும் சூட்டி வணக்கம் செலுத்தினர். வீரக் கல்லைக் கண்ட புலவர், "இவன் வீர சுவர்க்கம் எய்திய செய்தியறியாமல் பாணன் வந்து, இரக்குகின்றானால், கேட்போர்க்குத் தாரம் இன்னும் அறியலாகுமே!" என்று இரங்குகிறார். தமிழ் நாட்டில் வீரமும் சுவையும் எப்படி ஒன்றுக்கொன்று இணைந்து நின்றன என்பதற்கு இது ஒரு அரிய உதாரணம்.

அணிமயிற் பீலி சூட்டிப் பெயர்பொறித்
தினிநட் டனரே கல்லும் கன்றொடு
கறவை தந்து பகைவ ரோட்டிய
நெடுந்தகை கழிந்தமை யறியா
தின்றும் வருங்கொல் பாணரது கடும்பே!

— புறநானூறு 264.




மகிழ்ச்சிக்குரிய தீபாவளி
யன்று மாந்தர் மனங்கவர்
புத்தாடை அணிந்து சுற்றம்
சூழ சுகபோஜனம் செய்து
ஓய்வு பெறுவதற்கு...

# போனிக்ஸ்

## மின்சார

## விசிறிகள்




RM. S. & . CO, LTD., 16, BROADWAY MADRAS-1.

கிளை ஆபீஸ்: 5, மேல கோபுர வீதி, மதுரை.






அழகான, உறுதியான
கட்டிட வேலைகளுக்கு

**சூலம் மார்க்---**

**சங்கர் பிராண்ட்**
**போர்ட்லண்ட் சிமெண்ட்**

திடத்திலும், தரத்திலும் தேர்ந்தது

**இந்தியா சிமெண்ட்ஸ் லிட்... மதராஸ்-1**

# காந்திமதியின் காசுமாலை

கோமதி சுப்ரமணியம்

ஹாலில் அவர்கள் கூடி இருந்ததைப் பார்த்தால், ஏதோ ஒரு மகாநாடு நடப்பது போல் தோன்றியது. மகாநாடு நடப்பது போல் என்ன, மகாநாடுதான் நடந்து கொண்டிருந்தது! விஜயாவின் குழந்தைக்கு என்ன பெயரிடுவது என்பது பற்றிச் சர்ச்சை நடந்து கொண்டிருந்தது!

"ஆமாம், காவே குழந்தைக்கு என்ன பெயர் வைக்கப் போகிறீர்கள்?" என்று மகாநாட்டை ஆரம்பித்து வைத்தார் வீட்டிற்குப் பெரியவரான மாமனார்.

"ஏன்! கமலா, விமலா, சரோஜா, பத்மா" என்று அடுக்கினாள் மூத்த மருமகள்.

இடையே குறுக்கிட்ட சாந்தா, "போதும், போதும். அந்த ரோஜாக்களெல்லாம் மங்கிப்போய் விட்டன. இப்போது வந்துள்ள சினிமா ஸ்டார்களின் பெயர்கள் தான் பிரபலமாக இருக்கின்றன. அவைகளில் ஏதாவது ஒன்றைத் தேர்ந்தெடுத்து..." என்று இழுத்தாள்.

"போதும், போதும். ஸ்டாரும் வேண்டாம், பேபியும் வேண்டாம். முதல் முதலாகப் பிறந்த பெண் குழந்தைக்கு நம் குலதெய்வமான ஆவுடையம்மன் பெயரைத்தான் வைக்கவேண்டும்" என்று தாயார் கூறி முடிக்கவே, கொல்லென்று சிரித்தார்கள் அனைவரும்.

"போயும் போயும் இந்த 1953-லே பிறந்த குழந்தைக்குச் சரியான பெயர் கொடுத்தாயே, அம்மா! காலத்திற்குத் தகுந்தாற் போல் பெயர் வைக்க வேண்டாமா! அதைவிட்டு ஆவுடை என்றும், மாவுடை என்றும் பெயர் இடுவதா!" என்று பரிகாசமாகப் பேசிய பாலு, தான் குறிப்பிடும் பெயர்களில் ஏதாவதொன்றைத் தேர்ந்தெடுக்கக் கேட்டுக் கொண்டான். பிறகு தொடர்ந்து, "நமது பாரத நாட்டு வீரப் பெண்மணிகளின் பெயர்களுள் ஒன்றை வைத்தாலென்ன!—'ஜான்ஸி' என்று அழகாய்க் கூப்பிடலாமே" என்றான்.

"இத்தனை நேரம் நாமெல்லோரும் தானே பேசிக் கொண்டிருக்கிறோம். குழந்தையைப் பெற்றவள் ஒரு வார்த்தைகூடப் பேசவில்லையே! அவளுடைய தீர்மானம் என்ன என்பதைக் கேட்க வேண்டாமா!" என்றார் பெரியவர்.

"மறந்து போய் விட்டோமே! விஜயா சொல்லுகிற பெயரைத்தான் தீர்மானிக்க வேணும். அவள் தான் யோசித்துச் சரியான பெயரைப் பொறுக்கி யெடுத்துச் சொல்லுவாள்" என்றாள் மாமியார் கண்ணைச் சிமிட்டிக் கொண்டே.

"அண்ணி, நீதான் சொல்ல வேண்டும்" என்று பாலுவும் சாந்தாவும் ஏக காலத்தில் கத்தினர். என்ன சொல்லப் போகிறாளோ என்று அவள் முகத்தையே பார்த்து நின்றனர் யாவரும். இதுவரை அவர்கள் பேசிய சுவாரஸ்யத்தில் ஆழ்ந்து போயிருந்த விஜயாவுக்குத் தான் என்ன சொல்லுவதென்று தோன்றவில்லை.

"உங்கள் இத்தனை பேருக்கும் தெரியாததை நான் எப்படித் தேர்ந்தெடுக்கப் போகிறேன்! எல்லாம் உங்கள் இஷ்டப் படியே..." என்று சொல்லி மெல்ல கணவனைப் பார்த்தாள் விஜயா.

"அதெல்லாம் முடியாது. நீதான் சொல்ல வேண்டும். ஏதோ உனக்குத் தோன்றியதைச் சொல்லி வை. அப்புறம் நாங்கள் கவனித்துக் கொள்ளுகிறோம்" என்று எல்லோரும் விடாப்பிடியாகக் கூறி விட்டனர்.

"உன் அபிப்பிராயத்தையும் தான் சொல்லி விடேன், விஜி" என்று கணவனும் வற்புறுத்தவே, விஜயா சிறிது நேரம் சிந்தனையில் ஆழ்ந்தாள்.

ஏதோ முடிவுக்கு வந்தவளைப் போல ஒரு பெருமூச்சு விட்டாள். பிறகு "நான் சொல்லுவதற்காகப் பரிகாசம் செய்யாதீர்கள். என்னைக் கேட்பதினாலே என்னுடைய விருப்பம் என்ன வென்பதைத் தெரிவித்து விடுகிறேன்."

"சொல்லு! சொல்லு, அண்ணி!" என்று மிகவும் துரிதப்படுத்தினாள் சாந்தா.

"காந்திமதி" என்று விஜயா தீர்மானமாகக் கூறவும், யாவரும் ஒன்றும் புரியாமல் விழித்தனர்.

"காந்திமதி யாருடையபெயர் விஜயா! உன் அம்மாவின் பெயர் மீனாக்ஷி அல்லவா!" என்று சந்தேகத்துடன் வினவினாள் மாமியார்.

மருமகள் தீர்மானத்திற்கு விட்டுவிட்டால், பாட்டி என்ற முறையில் தன்னுடைய பெயரைக் கூறுவாள் என்று எதிர்பார்த்தாள் மாமியார். அது தானே அவர்கள் காலத்து வழக்கம்! அப்படி யில்லாவிட்டாலும், அவள் தாயார் பெயரையாவது குறிப்பிடுவாள் என்று நினைத்தாள். இரண்டு மில்லாமல் மூன்றாவது பெயரைக் குறிப்பிடவே, அவர்களுக்கு ஒன்றும் புரியவில்லை.

"மீனாக்ஷி என்னைப் பெற்ற தாய்; காந்திமதி என்னை வளர்த்து வாழ்வு அளித்த தாய்" என்றாள் விஜயா உணர்ச்சிப் பெருக்குடன். எல்லோரும் அவளையே கண்கொட்டாது நோக்கினர்.

"இப்படி யெல்லாம் சொன்னால் உங்களுக்குப் புரியாது. விவரமாகச் சொன்னால் பெரிய கதை போலிருக்கும்" என்றாள் விஜயா மேற்கொண்டு.

"அப்படியானாலும் அவசியம் சொல்லு, அண்ணி. எனக்கு, பத்திரிகைக்கு ஒரு கதை எழுதுவதற்கு விஷயம் கிடைக்கிறதோ, பார்க்கலாம்" என்று தன் எழுத்தார்வத்தைப் பறைசாற்றினான் பாலு.

1

விஜயா சொல்லத் தொடங்கினாள்: அப்பொழுது எனக்கு வயது பன்னி



ன்று இருக்கலாம். பள்ளியில் பயின்று கொண்டிருந்த காலம். ஒருநாள் மாலைப் பொழுது. வகுப்பு முடிந்து வீட்டிற்கு வந்தபோது, என் தாயார் யாரோ ஒரு பெண்ணுடன் பேசிக் கொண்டிருந்ததைக் கண்டேன். என்னைக் கண்டதும் அந்தப் பெண், "இவள் தான் உனது பெண்ணு!" என்ற கேள்வியை அம்மாவிடம் கேட்டு விட்டு, "இங்கே வா, அம்மா!" என்று அன்போடு என்னை அழைத்தாள்.

அவள் அழைத்ததும் பிகு செய்யாமல் அருகில் சென்று விட்ட என் சமர்த்தை மெச்சியவளாய், "குழந்தைக்கு எவ்வளவு சமர்த்து! மரியாதையோடு பழகத் தெரிந்தவள். காந்திமதி இவளைக் கண்டால் எத்தனை சந்தோஷப் படுவாள், தெரியுமா! எப்பொழுதும் இவளுடைய பேச்சுத்தான். நாலைந்து வயது வரை தன்னோடு ஒட்டி வளர்த்துவிட்ட இவளைப் பற்றித்தான் சதா புலம்பிக் கொண்டிருப்பாள்" என்று கூறிய அவள் லேசாகக் கண்ணைத் துடைத்துக் கொண்டாள்.

'சதா என்னைப் பற்றிப் பேசும் காந்திமதி யார்! அவள் எங்கிருக்கிறாள்! எதற்காக அதைச் சொல்லும்போது இந்த அம்மாவின் கண்களில் நீர் வரவேண்டும்!' என்ற கேள்வியை யெல்லாம் என்னுள் எழுப்பிக் கொண்டு திக்கு முக்காடிக் கொண்டிருந்தேன்.

"உன் அம்மாவிடம் வருகிறாயா, குழந்தை!" என்று அந்தப் பெண் கேட்கவும் என்னுடைய திகைப்பு இன்னும் அதிகமாயிற்று.

"என் அம்மாதான் எதிரிலேயே இருக்கிறாளே!" என்று எப்படியோ தட்டுத் தடுமாறிச் சொல்லி விட்டேன்.

"இந்த அம்மா இல்லே. இன்னொரு அம்மா உன்னைப் பார்க்கத் துடியாய்த் துடித்துக் கொண்டிருக்கிறாள். அவளைப் பார்க்கத்தான் வருகிறாயா என்று கேட்டேன். வந்தாயானால் அவளுக்குச் சந்தோஷம் தாங்க முடியாது" என்று கூறியதும், நான் 'இது என்ன இரகசியம்' என்று கேட்கும் தோரணையில் என் தாயை நோக்கினேன்.

என் தாயார் என் மனத்தில் எழுந்த கேள்விகளுக்குப் பதில் அளிக்கவில்லை. "விஜயா, நீ இந்த அத்தையுடன் போய் விட்டு வா, அம்மா" என்று மாத்திரம் எனக்கு உத்திரவிட்டாள்.

"எங்கேயம்மா!" என்றேன் மீண்டும்.

"எல்லாம் அத்தை சொல்லுவாள், போ. பேசிக் கொண்டிருக்க நேரமில்லே" என்று கூறியவள் அவசர அவசரமாக எனக்கு உடை மாற்றி விட்டாள். "போய்விட்டு விரைவில் திரும்பி விடு" என்று என்னை வழியனுப்பிய என் தாயின் கண்கள் லேசாகக் கலங்கி யிருந்தன.

## 2

அத்தையுடன் சென்று கொண்டிருந்த என் மனம் பல்வேறு கேள்விகளை எழுப்பி என்னைக் குழப்பிக் கொண்டிருந்தது. அவளிடம் எல்லாம் விவரமாகக் கேட்கலாமென்று நினைத்தேன். எனக்கு முன்பின் தெரியாதவளிடம் எதற்காக இதையெல்லாம் கேட்க வேண்டும் என்று எனது ஆவலை அடக்கிக் கொண்டேன்.

எனது சிந்தனைக்கு முற்றுப் புள்ளி வைப்பதுபோல் அத்தை ஒரு வீட்டின் வாசற்படி யேறினாள். வாசற்படியில் உட்கார்ந்திருந்த ஒரு மாது என்னைக் கண்டதும் எழுந்து ஓடி வந்து ஆவலோடு என்னைக் கட்டிக் கொண்டாள்.

"இவள்தான் உன் பெரியம்மா" என்றாள் அத்தை.

"வாடி, என் தங்கமே! உன்னைப் பார்த்து எத்தனை காலமாகி விட்டது! கண்ணால் கண்டு அனுபவிக்கக் கூடக் கொடுத்து வைக்காத பாவி நான்" என்று கூறிய அவள் விழிகளில் கண்ணீர் தேங்கி நின்றது. அவள் பேசிய விதத்திலிருந்து அவள்தான் அம்மாவிடம் அத்தை கூறிய



காத்திமதியாக இருக்க வேண்டும் என்பதைத் தீர்மானித்துக் கொண்டேன்.

எனக்கு அவளைப் பார்த்ததும் எங்கேயோ கனவில் கண்ட முகம் போன்ற ஒரு பிரமை ஏற்பட்டது. ஆனால் எங்கே, எப்பொழுது என்று நினைவுக்கு வரவில்லை.

"உன்னைக் கண்ட சந்தோஷத்தில் உனக்காகச் செய்து வைத்திருக்கும் பக்ஷணங்களைக்கூடக் கொடுக்க மறந்து விட்டேன், பார்!" என்று கூறியவண்ணம் பெரியம்மா தட்டு நிறையப் பலவகைப் பக்ஷணங்களை நிறைத்து வைத்தாள்.

"நீ வருவாயோ, மாட்டாயோ என்று சந்தேகப் பட்டுக் கொண்டிருந்தேன். நீ என் துயரத்தைத் துடைக்க வந்த குல விளக்கு. உன்னோடு இருந்து அனுபவிக்க முடியா விட்டாலும் அடிக்கடி வந்து போய்க் கொண்டிரு......"

கரகரத்த தொனியில் பேசிய பெரியம்மாவின் வேண்டுகோள் என் நெஞ்சைத் தொட்டது.

"பெரியம்மா, நீயும் எங்களுடன் வந்து விடேன்" என்று நான் கூறவும் பூரித்துப் போனாள் பெரியம்மா.

"காலம் வரும், அப்பொழுது வருகிறேன்" என்று மாத்திரம் தழுதழுத்த குரலில் கூறினாள் பெரியம்மா.

3

"அம்மா, அந்தப் பெரியம்மா யார்! அவள் ஏன் என்னிடம் அத்தனை பாசமாயிருக்கிறாள்! என்னை விட்டுப் பிரிய அவதிப்படுகிறவள் ஏன் என்னுடன் வந்திருக்கக் கூடாது!" என்று ஒரே மூச்சில் பல கேள்விகளைப் போட்டு என் தாயாரைத் திணற அடித்தேன்.

"விரும்பினால் அவள் வந்திருக்கலாம். ஆனால் அவள் மனமே அவளைக் கட்டுகிறது."

"அவள் யாரம்மா! முதலில் அதைச் சொல்லு."

"உன் தந்தையின் முதல் மனைவி."

நான் ஆச்சரியத்துடன் என் தாயாரைப் பார்த்தேன்.

"குழந்தையில்லை என்று என்னை இரண்டாவதாக மணம் செய்து கொண்டார், உன் அப்பா. நான் ஏழை. அவள் பணக்காரி. பணத்தின் மமதையால் அவள் என்னை அப்போது ஆட்டி வைத்த பாடு, அப்பப்பா! கொஞ்ச நஞ்சமல்ல."

"பெரியம்மா அத்தனை பொல்லாதவளா! அவளைப் பார்த்தால் அப்படித் தோன்றவில்லையே!"

"நீ குழந்தை. உனக்கென்ன தெரியும்! குழந்தையான உன்னைக்கூட என்னிடம் ஒட்டக்கூடாதென்று எத்தனை சூழ்ச்சிகள் செய்தாள், தெரியுமா! எனினும் அவள் உன்னை உள்ளன்போடு நேசித்து வந்தாள் என்பது எனக்குத் தெரியும். குழந்தை எப்படியாவது சௌக்கியமாக வளரட்டும் என்று நானும் அதைப் பொருட்படுத்தவில்லை. பக்கத்திலிருப்பவர்கள் உன்னிடம் 'உன் அம்மா யார்?' என்று கேட்டால் அவளைத்தான் சுட்டிக்காட்டிச் சொல்லுவாய். எப்படியோ குழந்தையாவது மாற்றாளிடம் கொடுமைப் படாமல் வளர்ந்தால் சரி என்கிற திருப்தியில் என் கவலைகளையெல்லாம் மறந்து இருந்தேன். அதற்கும் உலை வைக்க வந்தாள் ஒரு மகராசி.

'உன் பெரியம்மாவைப் பார்க்க அவளது அண்ணனின் மனைவி வந்திருந்தாள். வழக்கத்திற்கு விரோதமாக, தன் நாத்தி சக்களத்தி குழந்தையிடம் பாசம் வைத்திருந்ததைக் காண அவளுக்கு மனம் பொறுக்கவில்லை. பரிசுத்தமான உன் பெரியம்மாவின் அன்பில் துளி நஞ்சைக் கலந்து விட்டுப் போய்விட்டாள். பிறகு கேட்க வேண்டுமா! விஷம் வேலை செய்யத் தொடங்கியது!

"ஒருநாள் குழந்தையான நீ சங்கிலி வேண்டுமென்று அப்பாவிடம் கேட்டாய். அவர் சகஜமாக, 'உன் பெரியம்மா இரண்டு மூன்று வைத்திருக்கிறாள். அவற்றுள் ஒன்றை வாங்கிப் போட்டுக் கொள்' என்று குழந்தைக்குப் போக்குக் காட்டி விட்டுப் போய்விட்டார். கருக்கென்றது பெரியம்மாவுக்கு. மற்றொரு சமயமாயிருந்தால் அவளே குழந்தைக்கு ஒரு சங்கிலி கொடுத்தே இருப்பாள். அப்பொழுது விஷத்தின் மயக்கத்தில் தன் நிலை தடுமாறி இருந்தாள் அல்லவா! அவள் மனம் விபரீதமாக வியாக்கியானம் செய்யத் தொடங்கியது. உன் பெரியம்மாவிடம் இருக்கும் நகைகளைப் பறித்துக் கொண்டு விரட்டி விடுவதே உன் அப்பாவின் நோக்கம் என்று ஒரே அடியாக முடிவு கட்டி விட்டாள்.

4

"ஒரு நாள் ஏதோ வேலையாக வெளியூர் சென்றிருந்தார் உன் தந்தை. அது சமயம் தன் சகோதரனுக்கு ஆள் அனுப்பி வீட்டிலிருந்த பாத்திரம் பண்டம், வெள்ளி வெண்கலம், நகை நட்டு உள்பட எல்லாவற்றையும் எடுத்துக் கொண்டு புறப்பட்டு விட்டாள். உன் அப்பா வந்ததும் 'கேட்டுக் கொண்டு போ' என்று என்னாலியன்றவரை சொல்லிப் பார்த்தேன். அவள் அதைச் சிறிதும் லட்சியம் செய்யவில்லை.

"நாலைந்து நாட்களுக்குப் பின் உன் தந்தை வெளியூரிலிருந்து வந்தார். வீடு வெறிச்சோடியிருந்ததால், என்னை ஒரு மாதிரியாகப் பார்த்தார். நடந்த விஷயத்தைக் கூறியபோது, அவர் அதை நம்பத் தயாராக இல்லை. நான் ஏதோ அவள் மனம் புண்படப் பேசி அவளைத் துரத்தி விட்டதாக நினைத்துக் கொண்டு என்னை நிந்திக்கத் தொடங்கினார். அக்கம்பக்கத்தில் உள்ளவர்கள் உண்மையை விளக்கிக் கூறிய பிறகே, என்மீது அவருக்கு நம்பிக்கை ஏற்பட்டது. அந்த க்ஷணம் முதல், அவருக்கு என்மீது ஏற்பட்ட கோபம் அவள் மீது பாய்ந்து விட்டது. 'என் அனுமதியின்றி வீட்டை விட்டுப் போனவள் இனி என் வாசற்படி ஏறக் கூடாது' என்று வருகிறவர் போகிறவர்களிடமெல்லாம் கோபத்துடன் சொல்லி அனுப்பி விட்டார்.



"கணவன் தன்னே அழைக்க வருவார் என்ற நம்பிக்கையோடு இருந்தவளுக்குக் கணவனிடமிருந்து வந்தவர்கள் இப்படிக் கூறவே இடி விழுந்தது போலிருந்தது. பெண்களுக்குப் புகுந்த வீட்டில் அன்பு இருக்கும் வரைதான் பிறந்த வீட்டுப் பெருமை. கணவர் அன்பை இழந்து விட்ட பெண்ணுக்குப் பிறந்த வீட்டில் கிடைப்பது அவமரியாதைதான்.

"எந்த க்ஷணம் கணவன் நிராகரித்து விட்டார் என்பதை அறிந்தாளோ, அது முதல் நாத்தியை அலட்சியம் செய்யத் தொடங்கினுள் சகோதரனின் மனைவி. 'நாத்தனர்' என்கிற மரியாதை போய்ச் 'சோற்றுக்கு வந்தவள்' என்கிற ரீதியில் திரும்பியது பேச்சு. அவள் கௌரவம் கொஞ்சம் கொஞ்சமாய்ப் பறிபோனது போல், அவள் ஆபரணங்களும் ஒவ்வொன்ருய்ப் பறிபோகத் தொடங்கின!

கொடுக்க மறுத்தபோது, "சோற்றுக்கு மட்டும் உரிமை யிருக்கிறது. கொடுப்பதற்கு உரிமை யில்லையா!" என்ற இடி மொழிகள் கிடைத்தன. அப்பொழுது தான் உன் பெரியம்மாவால் தன் தவறை உணர முடிந்தது. உணர்ந்து என்ன செய்வது! வெள்ளம் தலைக்குமேல் போய் விட்டது அல்லவா!

"கடைசி நகையையும் விற்று விட்டு அவள் தனியாக வசிக்க நேர்ந்து விட்டது என்பதைக் கேட்டபோது என்னுல் பொறுக்க முடியவில்லை. என்னுடைய நிர்ப்பந்தம் காரணமாக உன் அப்பா அவளுக்கு மாதா மாதம் கொஞ்சம் பணம் அனுப்புகிறார். அதைக் கொண்டு எப்படியோ காலம் தள்ளி வருகிறாள். இது தான் உன் பெரியம்மாவின் கதை" என்று கூறி முடித்தாள் அம்மா.

"இன்னொரு தடவை போகும்போது பெரியம்மாவைக் கட்டாயம் இங்கேயே அழைத்து வந்துவிடுகிறேன், பார்" என்று கூறினேன் அம்மாவிடம்.

ஆனால் அதற்கு மட்டும் பெரியம்மா சம்மதிக்கவே யில்லை. பல தடவை அழைத்தும், ஏதாவது சாக்குப் போக்கு சொல்லிக் கொண்டே யிருந்தாள். என்றைக்காவது அழைத்து வந்து விடலாமென்ற நம்பிக்கையினுல் நானும் விடுமுறை நாட்களில் விடாமல் போய்க் கொண்டிருந்தேன்.

* * *

**வ**ருஷங்கள் பல ஓடி மறைந்தன. இதற்குள் எத்தனையோ மாறுதல்கள்! அப்பா தள்ளாமையினுல் வேலையை விட்டு விட்டார். அதனுல் குடும்பம் கஷ்ட ஜீவனத்தில் ஓடிக் கொண்டிருந்தது.

எனக்காக எத்தனையோ வரன்கள் வந்து போயின. பணம் இல்லாத வீட்டில் பெண்ணுய்ப் பிறந்து விட்ட கொடுமையை அனுபவித்துப் பார்த்தவர்கள்தான் உணர முடியும். பெண் பேச வரும்போது ஒவ்வொருவரும் கேட்கிற கேள்வியும் பேசுகிற பேச்சும் அப்பப்பா ...... சொல்லி முடியுமா! பல இடங்கள் வந்தும் பணமில்லாத குறையினுல் தட்டிப் போய்க் கொண்டே யிருந்தது. 'உங்கள் வீட்டில்கூட அப்படித்தான். பணமில்லை யென்றதும் மெல்ல நழுவி விட்டார்கள்' என்று விஜயா ஒரு குடு கொடுக்கவே, மற்றவர்கள் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டார்கள்.

இந்தச் சமயத்தில்தான் ஒரு நாள் ஒரு கிழவி வந்து என் அம்மாவிடம் ஏதோ இரகசியமாகப் பேசிக் கொண்டிருந்தாள்.

என்னே நெருங்கிய அம்மா, "விஜயா, உன்னே உன் பெரியம்மா இப்போதே பார்க்க வேண்டுமாம். வரச் சொல்லி அனுப்பி யிருக்கிறாள். அவளுக்கு உடம்பு மோசமாக இருக்கிறதாம்" என்ருள். இதைக் கேட்டதும் நான் திடுக்கிட்டேன்.

ஆள் துணையுடன் வண்டி யேற்றி அனுப்பிய என் தாயார், "நானும் வருவேன். ஆனால் உன் தந்தை வந்ததும் எடுத்துச் சொல்ல யாராவது வீட்டிலிருக்க வேண்டுமே யென்பதற்காகத் தங்க வேண்டி யிருக்கிறது" என்ற தழுதழுத்த குரலில் கூறி வழி யனுப்பினுள்.

பெரியம்மாவைப் பார்க்கும் வரை என் மனம் துடியாய்த் துடித்தது. நான் எதிர் பார்த்த அளவு அத்தனை அபாயமாக இல்லாவிட்டாலும், படுத்த படுக்கையாகத் தானிருந்தாள் பெரியம்மா. என்னேக் கண்டதும் கண்களில் நீர் வடிய அன்போடு கரங்களை நீட்டினுள். அவளது அருகில்



அமர்ந்து விட்ட நான், என்னே யறியாமலே எழும் கண்ணீரை அடக்க முடியாமல் விம்மி விம்மி அழுதேன்.

"ஏன் அழுகிறாய், குழந்தை! என்னேப் போன்ற பாபாத்மாக்கள் இருப்பதைவிடப் போவதே மேல் அல்லவா! போகவேண்டியதுதான். ஆனால் ஒரே ஒரு ஆசை. உன்னே மாலையும் கழுத்துமாகப் பார்க்காமல் போய்விடுவேனே என்பதுதான் ஏக்கம்" என்று கூறியபோது என்னுல் தாளவேயில்லை.

"எதற்காகப் பெரியம்மா நீங்கள் இப்படி யெல்லாம் பேச வேண்டும்! வாசலில் வண்டி நிற்கிறது. புறப்படுங்கள். இப்போதே வீட்டிற்குச் செல்லலாம். தகுந்த டாக்டரிடம் காண்பித்து வேண்டிய மருந்து சாப்பிட்டு உடம்பைத் தேற்றி விடலாம்" என்று சொன்னேன்.

"உன் விவாகம் முடிந்து அதன்பின் உன்னுடன் வருகிறேன்" என்று அவள் கூறியபோது என் மனம் வேதனையுற்றது.

'என் விவாகம் முடிந்து பெரியம்மா என்னுடன் வசிப்பதானுல், அது இந்த ஜன்மத்தில் இல்லை' என்பதை நினைத்த போது என் கண்கள் கலங்கின.

"விஜயா, கண் கலங்காதேயம்மா. பணமில்லை யென்பதற்காக வந்த வரனெல்லாம் தட்டிப் போவதைக் குறித்து வருத்தப் படாதே. அதற்கு ஒரு முடிவு வருக்கவே உன்னே இப்பொழுது இங்கு வரவழைத்தேன்" என்று பெரியம்மா கூறவே எனக்கு ஒன்றும் புரியவில்லை.

"விஜயா, என் எண்ணம் மிகவும் கெட்டது. இதுவரை உன் விவாகம் முடியாமல் தட்டிப் போனதற்குக் காரணம் நானறிவேன். என்னுல் உதவி செய்ய முடிந்தும், முன் வராதிருந்ததின் காரணம் என் கெட்ட புத்தி என்பதைத் தவிர வேறென்ன! நான் பரம ஏழ்மை வாழ்க்கை நடத்துவது உண்மைதான். எனினும் யார் செய்த புண்ணியமோ, எனது பெரிய ஆஸ்தியான வைரத் தோடும், காசுமாலையும் எவர் கண்ணிலும் படாமல் தப்பிப் பிழைத்துள்ளன. அது எப்போதும் போட்டுக் கொண்டிருக்கிற நகையில்லை. ஆகையால் பெட்டியில் வைத்தபடியே இருந்தன. என் அண்ணனின் மனைவி எப்போதும் போல் யதார்த்தமாக நடந்திருந்தால் அதையும் அவளிடம் கொடுத்திருப்பேன். அவளுடைய வஞ்சகமான செயலைச் சீக்கிரமே உணர்ந்து விட்டேனுதலால், அவ்விரண்டு நகைகளும் உன் அப்பாவிடம் கொடுத்து விட்டதாகச் சொல்லி அவர்களை ஏமாற்றி விட்டேன். அப்பெரும் நகைகள் தன்னிடம் சிக்கவில்லை என்கிற ஆத்திரமே என் அண்ணிக்கு என் மீதுள்ள வெறுப்புக்கு முக்கிய காரணம்.

"என்றாவது ஒரு நாள் சமயத்துக்கு உதவும் என்று பத்திரமாக வைத்திருந்த அந்தப் பொருள் நியாயமாக உன்னேயும் உன் தந்தையையுமே சேர வேண்டியது. அவற்றை இதுவரை உன்னிடம் கொடுக்கத் தோன்ருமல் வைத்துக் கொண்டிருந்தது பெரிய தவறு அல்லவா..."

"பெரியம்மா, இப்படி யெல்லாம் பேசி என் மனத்தைப் புண்படுத்தாதீர்கள்" என்று வேண்டிக் கொண்டேன்.

கண்ணீரைத் துடைத்துக் கொண்ட பெரியம்மா நகைப் பெட்டியை எடுத்து என் கரங்களில் வைத்து ஆசீர்வதித்தாள். "இந்த நகையையும் வெறும் ஆசீர்வாதத்தையும் மாத்திரம் பெற்றுக் கொண்டு போவதற்காக நான் வரவில்லை. நீங்களும் என்னுடன் வருவதா யிருந்தால்தான் ஊருக்குத் திரும்புவேன்" என்றேன்.

லேசாகச் சிரித்துக் கொண்டாள் பெரியம்மா. "உன் விவாகம் முடிந்து மாலையும் கழுத்துமாய் வருவாயல்லவா! அப்பொழுது உன்னுடன் வருகிறேன்" என்று வழி யனுப்பினுள். நானும் நிஜமென்று தான் நம்பி வந்தேன். பிறகுதான் தெரிந்து கொண்டேன் உண்மையை.

பிறகு என் கல்யாணத்தைப் பெரியம்மா சொர்க்க லோகத்திலிருந்துதான் பார்க்க முடிந்தது.

இவ்வாறு சொல்லி முடித்தபோது விஜயாவின் கண்களில் நீர் ததும்பியது.

"கண் கலங்காதே, விஜயா! உன் ஆசைப்படியே உன் பெரியம்மாவின் பெயரை உன் குழந்தைக்கு வைத்து விடலாம்" என்று கூறிவிட்டு, மாமியார் தொட்டிலில் கிடந்த குழந்தையின் காதருகே சென்று, "காந்திமதி" என்று மகிழ்ச்சி பொங்க மும்முறை சொன்னுள்.



# சின்னான் கொடுத்த சீர்



பெ. தூரன்

வள்ளியாத்தாளுக்கு ஆண் குழந்தை பிறந்திருக்கிறதென்று அறிந்தவுடன், காட்டுப் பாளையத்து மக்கள் எல்லோரும் தாயும் குழந்தையும் சுகமாக இருக்க வேண்டுமென்று மனதிற்குள்ளேயே வாழ்த்தினார்கள்.

"அவள் எல்லோருக்கும் நல்லவள். கொஞ்சம் துடுக்குக்காரிதான்; தன்னிஷ்டம் போலவே எதையும் செய்ய விரும்புவாள். ஆண் பிள்ளைகளால் வளர்க்கப்படும் குழந்தைகளே அப்படித்தான் இருக்கும். இருந்தாலும் வள்ளியாத்தாள் ரொம்ப நல்ல குணம்; ஈவிரக்கம் உள்ளவள்" என்று அனைவரும் அவளைப் பாராட்டிப் பேசுவார்கள். அதனால் அவளுக்கு ஆண் குழந்தை பிறந்திருக்கிற செய்தியைக் கேட்டு அவர்கள் மகிழ்ச்சி யடைந்ததில் வியப்பொன்றுமில்லை.

அவர்கள் எல்லோரையும்விட அதிகமாக மகிழ்ச்சி யடைந்தவன் ஒருவன் உண்டு. அவன்தான் சின்னான். ஆறு வருஷங்களுக்கு முன்னால் சின்னானுடைய மனைவிக்கு ஒரு ஆண் குழந்தை பிறந்த போதுகூட அவன் அத்தனை மகிழ்ச்சி யடையவில்லை. வள்ளியாத்தாள் என்றால் அவனுக்குத் தன் குல தெய்வம்போல! அவளில்லா விட்டால் அவனுடைய அருமைக் குழந்தை அந்தக் காலத்திலே உயிர் பிழைத்திருக்க முடியுமா!

வள்ளியாத்தாளின் தகப்பனார் சொக்கப்ப கவுண்டருக்கு நன்செய் புன்செய் நிலங்களெல்லாம் இருந்தபோது, சின்னான் அவருடைய பண்ணையிலே வேலைபார்த்து வந்தான். பிழைப்பதற்காக எங்கிருந்தோ வந்து அவன் தன் மனைவியுடன் அந்த ஊர்ச் சேரியிலே குடியேறிய காலத்தில், வள்ளியாத்தாளுக்கும் பன்னிரண்டு வயதிருக்கும். அவளுடைய தாயார் காலமாகி விட்டபடியால், அந்த வயதிலேயே அவள் தன் தந்தையின் வீட்டுக் காரியங்களையெல்லாம் பொறுப்பேற்றுக் கவனிக்க வேண்டியிருந்தது. சொக்கப்ப கவுண்டருக்கு வேறு குழந்தையில்லை.

சின்னானுக்கு மாதந்தோறும் படியளப்பதும் அவள்தான். பண்ணையிலே வேலை செய்துவிட்டு ஒட்டிய வயிறோடு அவன் வீட்டுக்கு வந்தால், வள்ளியாத்தாள் அவனுக்கும் பழைய சாதமாவது போடத் தவற மாட்டாள். அதனால் அவளிடத்திலே சின்னானுக்குத் தனிப்பட்ட அன்பும் மரியாதையும் ஏற்பட்டிருந்தன.

வள்ளியாத்தாளிடம் அவனுக்கிருந்த இந்த அன்பு மேலும் பெருக்கெடுப்பதற்குக் காரணமாக மற்றொரு சம்பவம் நிகழ்ந்தது. சின்னானின் மனைவிக்கு முதற் குழந்தை பிறந்து இரண்டு மாதங்கூட ஆகவில்லை. அவள் நோய் வாய்ப்பட்டு இறந்துபோனாள். சக்கிலியர்கள் வாழும் குடிசையிலே பிரசவமென்றால் அது ஒரு பெரிய கண்டம். வறுமையும், அழுக்கும் குடிகொண்ட அந்தச் சேரியிலே தாயும் குழந்தையும் யமனுடைய வாயிலே புகுந்து தப்பி வர வேண்டும். அந்தச் சோதனையில், சின்னான் மனைவி வெற்றியுடன் மீள முடியாமற் போய்விட்டது.

தாயை இழந்த குழந்தையிடத்திலே சின்னானுக்கும் சொல்ல முடியாத ஆசை பிறந்தது. அதை எப்படியாவது காப்பாற்றி வளர்க்க வேண்டுமென்று அவன் விரும்பினான். பாலில்லாமல் இரண்டு மாதக் குழந்தை உயிர் வாழ முடியுமா! தாய்க்குப் பதிலாக அதற்குப் பால் கொடுக்க வேறு யாரும் கிடைக்கவில்லை. அந்தச் சேரியில் அவனுக்கு உறவினர் யாரும் கிடையாது. அங்கிருந்தவர்களிலும் அந்தச் சமயத்திலே குழந்தைத் தாய்ச்சியாக யாரும் இல்லை. பசும்பால் கிடைத்தால்தான் அவன் எப்படியாவது குழந்தையைக் காப்பாற்றலாம். ஆனால் பசும்பாலுக்கோ எருமைப் பாலுக்கோ எங்கே போவது!

அந்தச் சேரியில் வாழ்ந்த மக்கள் மாடு கன்று வைத்துப் பிழைக்கக்கூடிய பணம்



படைத்தவர்களல்ல. கிடைக்கின்ற கூலி யம் அன்றன்று வயிற்றைக் கழுவவே போதாது. அந்த நிலைமையில் மாடு வைத் துக் கொள்ள முடியுமா! ஆடு வளர்க்கக் கூட அவர்களால் முடியவில்லை. பண்ணைக் காரர்களிடம் கேட்கலாமென்றால், தங்க ளுக்கு யாரும் பால் ஊற்ற மாட்டார்கள். அவர்களைக் கேட்பதே பெரிய குற்ற மாகும். மாட்டைத் தின்பவர்களுக்குப் பாலோ, மோரோ எது கொடுத்தாலும் மாடுகளுக்குக் கஷ்டம் வரும் என்பது கிராம மக்களுடைய திடமான நம்பிக்கை. வெகுகாலமாக இந்த நம்பிக்கை இருந்து வருகிறது. சக்கிலியர்களும் அதை ஆட்சேபிக்காமல் உண்மையென்று ஏற் றுக் கொண்டிருக்கிறார்கள்.

இந்த நிலையிலே சின்னான் தனது அரு மைக் குழந்தையை யமனுக்குப் பலி கொடுப்பதைத் தவிர வேறு வழியில்லை. அவன் உள்ளம் கலங்கினான். என்ன செய்வதென்று தெரியாமல் தத்தளித் தான். "பெண்டாட்டிதான் நோய் வந்து செத்துப் போனாள். இந்தக் குழந்தையை நான் பட்டினி போட்டுக் கொல்லவேண்டி யிருக்கிறதே!" என்று அவன் அங்கலாய்த் தான். பசியால் அந்தக் குழந்தை வீறிட்டு அலறும் போதெல்லாம் சின்னான் பதை பதைத்தான். அந்தக் குழந்தைக்கு முன்னா லேயே தன்னுயிரை மாய்த்துக் கொள்ள லாமா என்று ஆத்திரப்பட்டான்.

அப்படி அவன் துடித்துக் கொண்டிருக் கும்போது வள்ளியாத்தாள் அந்தக் குழந் தைக்கு உயிரளிக்கும் சஞ்சீவியாக வாய்த் தாள். அவள் தன் வீட்டிலிருந்து தைரிய மாகப் பசும்பால் அனுப்பலானாள். பல பேர்கள் அப்படிச் செய்வது கூடாது என்று தடுத்தும் அவள் கேட்கவில்லை. "எங்கள் வீட்டிலே மாடு செத்துப் போனால் போகிறது. அந்தக் குழந்தை யின் உயிரைவிட இந்த மாடு பெரிதா!" என்று அவள் உறுதியாகக் கூறிவிட்டாள். சொங்கப்ப கவுண்டர் அவளுடைய பிடி வாதத்தைக் கண்டும், அவளிடமுள்ள அன் பினால் மௌனமாக இருந்து விட்டார்.

° ° °

நல்ல வேளையாகச் சின்னானுடைய குழந்தை உயிர் பிழைத்துக் கொண்டது. குடிசைக் கதவைத் தாண்டி உள்ளே வந்த யமன், தனது தோல்வியை ஒப்புக் கொண்டு மறைந்து போனான்! சின்னா னுக்குண்டான ஆனந்தத்தைச் சொல்லி முடியாது. அந்தக் காலம் முதல் வள்ளி யாத்தாள் அவன் கும்பிடும் குல தெய்வ மாகி விட்டாள்!

அவளுக்குக் கல்யாணம் ஆனபோதும் சீர்சிறப்புகளுடன் அவள் கணவன் வீடு சென்றபோதும், சொங்கப்ப கவுண்டர் எவ்வளவு பெருமை படைத்தாரோ, அதை விட அதிகமாகச் சின்னான் பெருமை படைத்தான். மூன்று மாதத்திற்கொரு முறையாவது புறக்காட்டு வலசிற்குச் சென்று வள்ளியாத்தாளைக் கண்டு அவள் கையால் பழைய சாதம் வாங்கிச் சாப் பிட்டு விட்டு வராவிட்டால் அவனுக்குத் தெரியும் திருப்தி ஏற்படாது.

இவ்வாறு இரண்டு வருஷங்கள் கழிந் தன. வள்ளியாத்தாள் கர்ப்பவதியானாள். ஏழாவது மாதத்திலே சொங்கப்ப கவுண் டர் புறக்காட்டு வலசிற்கு ஒரு தடவை வந்தார். மகளைத் தமது சொந்தவூராகிய காட்டுப் பாளையத்திற்கு அழைத் துக் கொண்டு போக வேண்டும் என்பது அவ ருடைய கருத்து. சம்பிர தாயப்படி, பெற்றோர் வீட்டில்தானே மகளுக்கு முதற் குழந்தை பிறக்க வேண்டும்!

"எதற்கப்பா, உங்க ளுக்கு வீண் தொந்தரவு! அம்மா உயிரோடிருந்தால் நான் வரவேண்டியது தான்; உங்களுக்கும் கஷ்டமிருக்காது" என்று குறிப்பாக வள்ளியாத் தாள் கூறினாள்.

ஆனால் சொங்கப்ப கவுண்டர் அதை ஏற்றுக் கொள்ளவில்லை. "உன் தாயார் உயிரோடிருந் தால் அவளுக்கு எத்தனை சந்தோஷமாக இருக்கும்! உன் குழந்தையைப் பார்க்க அவளுக்குக் கொடுத்து வைக்கவில்லை. இருந்தாலும் ஊரிலே நாலு பேர் செய்வதைப் போல நானும் செய்ய வேண்டாமா! நம்ம வீட் டிலேதான் குழந்தை பிறந்து வர வேணும்" என்று அவர் கண்டிப் பாகச் சொல்லி விட்டார்.

அவருடைய விருப்பத் தின்படி நடந்து கொள்ளு வதுதான் நல்லதென்று வள்ளியாத்தாளின் கண வன் மாரப்பனுக்கும், மாமனார் மாமியாருக்கும் தோன்றியது. அதனால் அவர்களும் சம்மதம் தெரி வித்தார்கள். வள்ளியாத் தாளும் தன் பிறந்தகம் வந்து சேர்ந்தாள்.

குழந்தை பிறந்திருக்கிற செய்தியறிந்து கணவனும், மற்றவர்களும் காட்டுப் பாளையம் வந்தார்கள். அவர்களுக்கெல்லாம் ஒரே சந்தோஷமாகி விட்டது. வீட்டிலே பெண் துணை யில்லாதிருக்கும் அக்கம் பக்கத்தாருடைய உதவி கொண்டு சொங்கப்ப கவுண்டர் வள்ளி யாத்தாளையும் குழந்தையையும் நன்றாகக் கவனித்து வந்தார். தாயும், குழந்தையும் ஒருவிதமான குறையுமில்லாமல் ஆரோக்கி யத்தோடு இருந்தார்கள். குழந்தையைப் பார்க்கப் பார்க்க மாரப்பனுக்குண்டான பெருமையையும் மகிழ்ச்சியையும் சொல்லி முடியாது. அவனுக்கு வள்ளியாத்தா ளிடம் முன்பிருந்ததைவிட அன்பு பன் மடங்கு அதிகரித்தது. இருந்தாலும் இவற்றையெல்லாம் அவன் வெளியே காட்டிக் கொள்ளவில்லை. அவன் மனத் திற்குள்ளேயே சந்தோஷப் பட்டுக் கொண்டு புறக்காட்டு வலசிற்குத் திரும் பிச் சென்று விட்டான்.



வள்ளியாத்தாள் காட்டுப்பாளையம் வந் ததிலிருந்து சின்னான் இன்பக் கடலில் மூழ்கியிருந்தான். வயிற்றுக்குச் சோறு தேடுவதிலே எத்தனை சிரமப்பட்டாலும் அதையெல்லாம் அவளைப் பார்த்தவுடன் மறந்து விடுவான். "என் மகனுக்கு உயிர்ப் பிச்சை கொடுத்த அந்தத் தெய்வத்துக்கு நிச்சயமாக நல்ல ஆண் குழந்தைதான் பிறக்கும்" என்று அடிக்கடி சொல்லிக் கொண்டிருந்தான். அவன் வாக்குப் படி ஆண் குழந்தை பிறந்து விடவே, அவன் உள்ளம் பூரித்தான்.

இப்பொழுதெல்லாம் சின்னான் எங் கெங்கோ நிரக்கூலியாக வேலைசெய்து வந்தான். சொங்கப்ப கவுண்டர் தமது



நிலங்களெல்லாம் பங்காளிகளுக்குள் எதிர்பாராது ஏற்பட்ட வழக்கிலே இழந்து விட்டார். கோர்ட்டுச் செலவு, வக்கீல்செலவு என்று அவர் சொத்தெல்லாம் கரைந்து போயிற்று. அதனால் சின்னான் இப்படி வேறு இடத்திலே வேலைக்காக அலைய வேண்டியதாயிற்று.

கையிலே பொருளிருந்த காலத்திலேயே வள்ளியாத்தாளுக்குக் கல்யாணத்தை முடித்து விட்டதால், சொங்கப்ப கவுண்டர் அவளுக்கு வழக்கமாகச் செய்ய வேண்டிய சீர் சிறப்புக்களையெல்லாம் தமது சக்திக்கேற்றபடி திருப்திகரமாகச் செய்திருந்தார். காளை மாடுகள் இரண்டு மகளுக்கு அனுப்பி வைத்தார். நல்ல வில்லைவைத்த கூட்டு வண்டியும் சேரக் கொடுத்தார். மற்றச் சீர் வரிசைகளும் ஏதோ பேர் சொல்லும்படிதான் செய்தார். இன்றைய நிலைமையாக இருந்தால் அவரால் ஒன்றும் செய்திருக்க முடியாது. ஏனெனில் அவரே கஷ்ட ஜீவனம் செய்து கொண்டிருந்தார் அவ்வளவு!

வள்ளியாத்தாளின் குழந்தைக்கு மூன்று மாதமானதும் அதை எடுத்துக் கொண்டு புதுக்காட்டு வலசிற்குப் போகும்போது எல்லோரும் செய்வது போல் பசுவும் கன்றுமாக அனுப்புவதற்கென்று ஒரு காங்கேயம் கடாரியைச் சிரமத்தோடு சிரமமாக வளர்த்து வந்தார். சொத்தெல்லாம் போன பிறகு அது ஒன்றுதான் மீதி யிருந்தது. வள்ளியாத்தாள் பிறந்த வீட்டிற்கு வந்த முதல் வாரத்திலேயே அது ஒரு செங்கன்றை ஈன்றது. சொங்கப்ப கவுண்டருக்கு ஒரே மகிழ்ச்சி. அந்தக் கடாரியையும் கன்றையும் சேரக அனுப்பினால் எல்லோருக்கும் வெகு திருப்தியாக இருக்குமென்று அவர் மிகவும் பெருமைப் பட்டுக் கொண் டிருந்தார்.

அந்தக் கடாரி வள்ளியாத்தாளுக்குச் சேரப் போகப் போகிறது என்று அறிந்ததும், சின்னான் தினமும் எவ்வளவாவது அலைந்து அதற்கும் பசும்புல் வெட்டிவந்து போடத் தொடங்கினான். அதற்காக அவன் யாதொரு கூலியும் எதிர்பார்க்கவில்லை என்று சொல்லத் தேவையில்லை. அவனுக்குப் பழையது போடக் கூட அப்பொழுது முடியாமலிருந்ததால், அவன் இப்படி நாள் தவறாமல் புல் கொண்டு வந்து போடுவது வள்ளியாத்தாளுக்குச் சங்கடமாக இருந்தது.

“எதற்காக நீ தினமும் இப்படிக் கஷ்டப் படுகிறாய்! பொழுதெல்லாம் இடுப்பு முறிய வேலை செய்கிறது போதாதா!” என்று அவள் மிகவும் அன்புடன் சின்னானிடம் கூறினாள்.

ஆனால் அவன் அவள் கூறுவதைக் காதில் போட்டுக் கொள்ளவில்லை. “ஒரு கத்தை புல் வெட்ட எத்தனை நேரமாகும்! எனக்கு அது ஒரு வேலையா!” என்று பதில் கொடுத்து விட்டு, அவன் வழக்கம் போல் புல் கொண்டு வரலானான்.

“உனக்கு ஒரு கடாரிக் கன்று அப்பா கொடுத்தாரல்லோ, அது நன்றாக இருக்கிறதா!” என்று ஒரு நாள் வள்ளியாத்தாள் கேட்டாள்.

“ஆமாம் தாயி, அந்தக் கடாரி இப்போது காளைக் கன்று போட்டிருக்கிறது. அந்தக்காலத்திலே பண்ணைக்காரர் அப்படி யெல்லாம் தாராளமாகக் கொடுப்பார்!” என்று சொல்லி விட்டுச் சின்னான் பெருமூச்சு விட்டான். சொங்கப்ப கவுண்டருடைய அன்றைய நிலைமையும் இன்றைய நிலைமையும் அவன் மனத்தில் மாறி மாறிக் காட்சி யளித்தன.

குழந்தைக்கு மூன்று மாதமாகிவிட்டது. அடுத்த வாரத்திலே நல்ல நாள் பார்த்து தாயையும் குழந்தையையும் அனுப்புவதென்று ஏற்பாடாயிற்று.

சொங்கப்ப கவுண்டர் தம் மகளை அனுப்பும்போது கூடவே கன்றையும் இளம் பசுவையும் அனுப்ப விரும்பினார். சின்னான் தான் அவற்றைப் பிடித்துக் கொண்டு புதுக்காட்டு வலசிற்குப் போவதென்றும் ஏற்பாடாயிற்று. அதை நினைத்து அவனுக்கு ஒரே கொண்டாட்டமா யிருந்தது.

ஆனால் எல்லோருடைய ஆசையும் நிறைவேறாமல் போய்விட்டது. திடீரென்று பசுவுக்கு ஏதோ நோய் கண்டது. என்ன நோயென்றே தெரியவில்லை. சொங்கப்ப கவுண்டர் அந்த வட்டாரத்திலே மாட்டு வைத்தியத்திலே கைதேர்ந்த ஒருவரை அழைத்து வந்து காண்பித்தார். அவரும் எத்தனையோ பச்சிலைகளைப் பிழிந்து மருந்து தயாரித்துக் கொடுத்தார். ஒன்றும் பயன் படவில்லை.

வள்ளியாத்தாள் புதுக்காட்டு வலசிற்குப் புறப்படும் நாள் வந்தது. அவளுடைய மாமியார் வண்டியோடு அதிகாலையிலேயே வந்து சேர்ந்தாள். மாலையிலேயே புறப்படுவதென்று தீர்மானம் செய்தார்கள். பச்சிலைகளைத் தேடிச் சென்ற சொங்கப்ப கவுண்டர் சோர்ந்த முகத்தோடு வந்து திண்ணையில் உட்கார்ந்தார். முழங்கால் வரையில் படிந்திருந்த புழுதியையும் சாணியையும் கழுவக்கூட அவர் நினைக்கவில்லை. வளர்ந்து கிடந்த அவருடைய நரைத்த தாடியும், நெற்றியிலே காலதேவன் ஊன்றி யிருந்த சுருக்கங்களும் அவருடைய மனக் கவலையைப் பல மடங்கு அதிகப் படுத்திக் காண்பித்தன.

“வள்ளியாத்தா, என் ஆசை யெல்லாம் வீணாய்ப் போயிற்று” என்று விசனம் தோய்ந்த குரலில் அவர் பேசினார்.

வள்ளியாத்தாளுக்கு அவர் கூறுவதின் பொருள் உடனே விளங்கி விட்டது. அவளுக்கும் அது பெரிய ஏமாற்றந்தான். இருந்தாலும் அவள் அதை வெளிக்குக் காட்டிக் கொள்ளவில்லை.

“சக்கிலிப் பையனுக்குப் பால் ஊத்தின வீட்டிலே மாடு விருத்தியாகுமா! வள்ளியாத்தாள் அந்தச் சின்னானுடைய பையனுக்குப் பால் ஊத்தவில்லையா! அதனால்தான் மாடு செத்தது. மாட்டைத் தின்கிற சக்கிலிக்குப் பால் ஊத்தவே கூடாது!” என்று பலரும் பலவாறு பேசிக் கொண்டார்கள்.

“அந்த வள்ளியாத்தாளுக்கு இப்படித் தான் வேணும். நான் வேண்டாம், வேண்டாம் என்று சொல்லச் சொல்லக் கேட்காமல் அந்தப் பையனுக்குப் பால் ஊத்தினாள். அதுதான் தெய்வம் இன்று அவளுக்கு நல்ல தண்டனை கொடுத்து விட்டது. இல்லா விட்டால் சீக் கடாரி இப்படி ஊருக்குப் போகிற சமயத்தில் சாகுமா!” என்று பக்கத்து வீட்டுக் கிழவி கையை நீட்டி நீட்டிப் பேசினாள்.

சின்னானுக்கு ஏற்பட்ட வருத்தத்தை அளவிட முடியாது. அவனைப் பார்த்தவர்களெல்லாம், “ஏன்டா, உன் முகச்

தைக்கும் பால் வார்த்திருவே, இப்போது என்ன ஆகிறது, பார்த்தாயா! ஊருக்குப் போகிற நாளிலே பசு செத்ததோ, இல்லையோ!" என்று கேட்டார்கள்.

* * *

**வ**ள்ளியாத்தாள் தன் குழந்தையோடு புறப்பட்டதும் சொக்கப்ப கவுண்டரின் வீடு வெறிச்சென்று போய்விட்டது.

அவர் சோர்ந்து படுத்திருந்தார். மகள் சமைத்து வைத்துவிட்டுப் போன உணவையும் அவர் தொடவில்லை. அன்றிரவெல்லாம் அவர் தன் நிலைமையைக் குறித்து ஏதேதோ எண்ணிக் கொண்டிருந்தார்.

அடுத்த நாள் பொழுதுவிடியும் தருணத்திலே சின்னான் கையிலே ஒரு அழகான காங்கயம் பசுவையும், கன்றையும் பிடித்துக்கொண்டு புறக்காட்டு வழியில் வள்ளியாத்தாளின் வீட்டுக்கு முன் காட்சி யளித்தான். அவனையும் பசுவையும் பார்த்த வள்ளியாத்தாளுக்கு ஒரே ஆச்சரியமாகப் போய்விட்டது.

"இது உன்னுடைய கடாரிதானே! இதை எதற்கு இப்போது கொண்டு வந்தாய்?" என்று அவள் சின்னானை நோக்கிக் கேட்டாள்.

"பண்ணைக்காரருக்கு உங்களை ஊருக்குப் பசுவும் கன்றுமில்லாமல் அனுப்பியது மனசுக்குச் சிறிதும் சமாதானமாக இல்லை. அதனாலே விலையைக் கொடுத்து விட்டு இந்தப் பசுவை வாங்கி உங்களுக்கு அனுப்பி யிருக்கிறார்" என்று அவன் மளமளவென்று கூறினான்.

"இது ரொம்ப விலையிருக்குமே! எத்தனை ரூபாய் கொடுத்தார்கள்?"

"நம்ம வடக்கு வீட்டுப் பெரிய பண்ணைக்காரர் பத்து நாளைக்கு முந்தித்தான் இதற்கு 450 ரூபாய் கொடுக்கிறேன் என்று சொன்னார். எனக்கு அன்றைக்கு விற்க மனமில்லை. நம் பண்ணைக்காரர் அதே விலையைக் கொடுத்து விட்டார்."

"அப்பாவிடம் அத்தனை பணம் இருக்காதே!" என்று வள்ளியாத்தாள் ஆச்சரியத்தோடு கேட்டாள்.

"தாயே, அப்படியா நினைத்தீர்கள்! நன்றாக வாழ்ந்த வீட்டிலே என்றைக்கும் விளக்காய் அளவு தங்கமிருக்கும் என்று சொல்லுவார்கள். பண்ணைக்காரர் ஏதாவது ஆபத்துக்கு வேணுமென்று இதைக் காப்பாற்றி வைத்திருந்தார்கள்."

வள்ளியாத்தாள் அவன் வார்த்தையை நம்பினாள். சின்னான் அவளிடம் என்றுமே பொய் சொன்னதில்லை. மேலும் நம் பாம விருப்பத்திற்கு அப்படி நடைபெறக் கூடாத சம்பவம் ஒன்றும் இல்லையே! சின்னான் ஊருக்குத் திரும்பிப் போக உத்தரவு கேட்டான். வள்ளியாத்தாள் சாப்பிட்டு விட்டுத்தான் போக வேண்டுமென்று வற்புறுத்தி அவனை நிறுத்தி விட்டாள். ஆனால் அன்றைக்குச் சின்னான் சோறு வாங்கிக்கொள்ள அறவே மறுத்து விட்டான். "தாயே, முன்னால் கொடுத்த தண்டியலே உங்களுக்குப் போதும். இனிமேல் நான் உங்களிடம் சோறோ, பாலோ வாங்கிக்கொள்ளவே மாட்டேன்" என்று கூறிவிட்டான்.

அடுத்த வாரத்திலே சொக்கப்ப கவுண்டர் தன் மகளைப் பார்த்துப் போவதற்காகப் புறக்காட்டு வழியாக வந்திருந்தார். சின்னானுடைய கடாரியையும், கன்றையும் பார்க்க அவருக்கு ஒரே ஆச்சரியமாகப் போய்விட்டது. அதைத் தாம் அனுப்பவில்லை என்றும், அதற்கு விலை கொடுக்கத் தம்மிடம் பணம் கிடையாதென்றும் அவர் கூறினார். வள்ளியாத்தாளுக்கு ஒன்றும் புரியவில்லை. சின்னானை வரவழைத்து விஷயத்தைக் கேட்கவேண்டுமென்று ஏற்பாடு செய்தபோது, அவன் ஒரு வாரமாகச் சேரியிலேயே இல்லையென்றும் மகனை அழைத்துக் கொண்டு எங்கேயோ திடீரென்று குடிபோய் விட்டானென்றும் தெரிய வந்தது.

அதற்குப் பிறகு யாராலும் அவனைக் கண்டு பிடிக்க முடியவில்லை!

## கால மாறுதல்!





மங்களகரமான
தீபாவளி நல்வாழ்த்துக்கள்
ரத்தன் ஸில்க் ஹவுஸ்
11, கீழ மாட வீதி, மயிலாப்பூர், சென்னை.



வெஸ்ட் எண்ட் வாட்ச் கம்பெனியாரின்
மனமார்ந்த தீபாவளி நல் வாழ்த்துக்கள்!



**WEST END WATCH CO.**
BOMBAY • CALCUTTA



முன்னணியில் நிற்பவை...
**K.T.R**

கோபுர மார்க் பன்னீர், சந்தனாதி,
அரைக்கீரை ௳ பொன்னாங்கண்ணி
தைலங்கள், கமகம ௳ ஜெகன்
மோகன பத்திகள், ஒயிட்ரோஸ்
ஹேராயில், சந்தனம், அரகஜா.



K.T.R வாசனாதி திரவிய சாலை
விஜயபுரம், தஞ்சை ஜில்லா.




இன்று மாலை ஆறு மணிக்கு ஆஸ்பத்திரியிலிருந்து வெளியேறி விடுவேன். பெரிய டாக்டருக்கு என்மேல் ரொம்பவும் கோபம். ஆகவே, என்னை 'டிஸ் சார்ஜ்' பண்ணி விட்டார். எல்லாம் இந்த முத்துப் பிள்ளையால் வந்தது. கான்ஸ்டேபிள் அல்லவா! சட்டப்படி நடப்பதாக எண்ணம்! யோசிக்காமல் எனக்கு வேட்டு வைத்து விட்டார்.

அவருடைய சொம்பும் எட்டு அணாவும் தொலைந்து போனதற்கு நானா பொறுப்பு!

வழக்கமாகக் காப்பி வாங்கிக் கொடுக்கிற ராயப்பனிடம்தான் கொடுத்தேன்.

இந்த வார்டுக்கும் அடுத்தவார்டுக்கும் ராயப்பன் 'கண்டிராக்டர்' மாதிரி! காலை எட்டுமணிக்குக் காம்பவுண்டு இரும்புக் கிராதிக்கு இப்பால் புல்லாத் தரையில் உலாத்திக் கொண்டிருப்பான். அவனுக்குக் கூலியாக ஒரு அணா கொடுத்தால் போதும், கேட்டசாமானை நொடியில் வாங்கிக் கொண்டு வந்து விடுவான்.

கூலி சற்று அதிகம் தான். காலணவுக்கு வாங்கி வந்தாலும் ஒரு அணாதான் கொடுத்தாக வேண்டும். ஆனால் படுக்கையில் கிடக்கும் நோயாளிக்குப் பசிக்கிற வேளையில் வாங்கிக் கொண்டு வந்து தருகிறானே, அது பெரிதில்லையா!

நாங்களெல்லாம் நோயாளிகள். காம்பவுண்டைத் தாண்டக் கூடாது. எங்களுக்கு ஆஸ்பத்திரி ஒரு ஜெயில் மாதிரி. ராயப்பன் இல்லாவிட்டால், ஆஸ்பத்திரிச் சாப்பாட்டைத் தவிர வேறு ஒன்றுக்கும் நாங்கள் ஆசைப்பட முடியாது. வயிற்றைக் கட்டி வாயைப் போட்டுக்கொண்டு படுத்துக் கிடக்க வேண்டும்.



நான் கொஞ்சம் நடமாடுகிற நோயாளி. படுக்கையில் தைத்துப் போட்டாற் போல் கிடக்கும் நோயாளிகளின் காசை ராயப்பனிடம் சேர்க்க வேண்டிய பொறுப்பு என்னுடையது. அதைக் கொண்டு அவன் நோயாளிகளுக்குத் தேவையானதை வாங்கி வருவான்.

நேற்றுக் காலை எட்டு மணிக்குக் கான்ஸ்டேபிள் முத்துப் பிள்ளை — குடல் ஆபரேஷன் ஆகி மூன்று வாரமானவர் — கொடுத்த [illegible] பாட்டிலையும் எட்டணாவையும் வாங்கிக் கொண்டு போய் அவனிடம் கொடுத்தேன், இட்லி காப்பி வாங்கி வருவதற்காக. டிராம் லைனைத் தாண்டிப் பத்து அடி நடந்தால் ஹோட்டல். போய்வர அதிக பக்ஷம் அரை மணிக்கு மேல் ஒரு நிமிஷங்கூட ஆகாது.

ஆனால், எட்டரை ஒன்பது, பத்து, பதினொன்று ஆயிற்று. போன ஆளைக் காணவில்லை. கம்பி நீட்டி விட்டான் என்றுதான் தோன்றுகிறது.

நான் என்னசெய்வேன்! மூன்று மாதமாக ஒரு தகராறு இல்லாமல் வாங்கிக் கொடுத்தவன் நேற்று ஒருநாள் ஏமாற்றி விடுவான் என்று நான் கண்டேனா! 'கொடடா, காசையும் சொம்பையும்!' என்று முத்துப்பிள்ளை சத்தம்போட்டார்.

கட்டி வைத்தாலும் என்னிடம் காலணாவும் கிடையாது. முந்தா நாள்தான் ஊருக்கு முப்பது ரூபாய் மணியார்டர் செய்தேன். 'நானூறு மைலுக்கப்பால் மதராசுக்கு வந்து, தனியாக ஆஸ்பத்திரியில் நோயாளியாய்ப் படுத்திருக்கும் ஒருவனுக்கு ஊரிலிருந்தல்லவா பணம் வரும்! நீ என்னடா என்றால், பணம் அனுப்பினேன் என்கிறாயே!' என்று நீங்கள் ஆச்சரியப்படுகிறீர்கள். ஒன்றும் ஆச்சரியப்பட வேண்டியதில்லை. என்னைப் பற்றிக் கொஞ்சம் சொன்னால் உங்களுக்குப் புரிந்துவிடும்.

* * *

நான்தான் ராமன் நாயர். வயது நாற்பத்திரண்டு. தொழில் ரயில்வே போர்ட்டர். மலையாளத்தில் ஏதோ ஒரு ரயில்வே ஸ்டேஷனில் வேலை செய்து வந்தேன். நான் இப்போது அந்தத் தொழில் செய்யாததால், எந்த ஸ்டேஷனென்று சொல்ல வேண்டிய அவசியம் இல்லை. இனிமேல் வேலை செய்யப் போனாலும் எந்த ஸ்டேஷனுக்கும் போகிறேனோ!

பட்டணமோ பட்டிக்காடோ, இரண்டுமில்லாத ஒரு ஊரின் ஸ்டேஷன். வியாபாரம் பெருத்த ஊருமில்லை. தவமாக நின்றாலும் நாளுக்கு ஒரு ரூபாய் கிடைத்தால் அதிகம். அதுவும் ஸ்திரமில்லை. குடும்பம் நடத்துவது சிரமமாகத்தான் இருந்தது. ஒரு ரூபாய் சம்பாதிப்பவனுக்கு நான்கு குழந்தைகளும் மனைவியும் இருந்தால் அது பெரிய குடும்பமில்லையா! குழந்தைகளுக்கு முறையே வயது ஏழு, ஐந்து, மூன்று, ஒன்றரை.

கஷ்டம் விடுகிற வழியாக இல்லை. அது இன்னொரு தோழனையும் அழைத்துக் கொண்டு வந்து என்னிடம் விட்டு விட்டது. அதுதான் வயிற்று வலி! சாப்பிட்ட அரை மணிக்கெல்லாம் வயிற்றைச் சுருட்டி இழுக்கும். அந்த வலி மலையாளத்து வைத்தியத்திற்கே மசியவில்லை.

ஆளைப் பார்த்தால், நான் வயிற்று வலிக்காரன் என்று யாரும் சொல்ல முடியாது. நான் வார்ச்சியமான ஆசாமி என்பதைச் சொல்ல மறந்து விட்டேனே! கண்ணாடியில் பார்த்ததைச் சொல்லுகிறேன். நெடுத்த உயரம், கட்டுமஸ்தான உடல், மூட்டை தூக்கி முண்டா ஏறிய புஜங்கள். மணிக்கட்டு இரும்புமாதிரி இருக்கும். ஹோட்டல் கண்ணாடியின் முன்னால் கைகழுவும்போது மணிக் கட்டைத் திருப்பித் திருப்பி அதன் உறுதியைக் கண்டு பெருமிதம் அடைவேன். என் முகத்தோற்றமோ! ராஜா, மந்திரி இந்த வேஷங்களுக்கு அமைப்பானது. என்னமோ, படிப்பு இல்லாததால் இப்படி மூட்டை தூக்கியாகக் காலத்தை ஓட்டும்படி நேர்ந்து விட்டது.

ஆனால் முப்பது வருஷம் வாழ்ந்தவனும் இல்லை, முப்பது வருஷம் தாழ்ந்தவனும் இல்லை என்று சொல்லுவதுபோல, திடீரென்று எனக்கும் ஒரு நாள் நல்ல காலம் பிறந்துவிட்டது.

* * *

ஸ்டேஷனுக்கு 'புக்கிங் கிளார்க்' ஒருவர் புதிதாக மாற்றலாகி வந்திருந்தார். அவர் மதராஸ் ஆஸ்பத்திரியில் ஆபரேஷன் செய்து கொண்டு பத்து நாள் இருந்தாராம். படுக்கை, சாப்பாடு, நர்ஸுகளின் கவனம், டாக்டர்களின் தரம் — ஒவ்வொன்றையும் பற்றி ஒரு மணி நேரம் ஸ்டேஷன் மாஸ்டரிடம் சொல்லுவார். இப்



படியும் இந்தத் தந்திர உலகத்தில் ஒரு இடம் இருக்கிறதா என்று எனக்கு மலைப் பாய்ப் போய்விட்டது.

என் வயிற்று வலியைப் பற்றி அவரிடம் சொன்னேன். "ஏய், என்னைவிட நீ அதிர்ஷ்டசாலி. நானாவது படுக்கை, ஆபரேஷன் எல்லாவற்றிற்கும் காசு கொடுத்தேன். உனக்கோ எல்லாம் இலவசமாகக் கிடைக்கும். போய் வயிற்று வலியைப் போக்கிக் கொண்டுவா. இந்தப் போர்ட்டர் வேலை ஓடியா போய்விடும்? ஆள் நன்றாக இருந்தால் தானே சம்பாதிக்க முடியும்! இப்படியே விட்டு விட்டால், நாளைக்கு ஒரேயடியாக முற்றிப் போய்..."

நான் மதராசுக்குப் புறப்பட்டு விட்டேன். டிக்கட் இல்லையென்று ஒட்டப்பாலத்திலும், சேலத்திலும், ஜோலார்ப்பேட்டையிலும் இறக்கி விட்டு விட்டார்கள். கடமையைச் செய்பவர்களைக் குறை சொல்லலாமா!

புறப்பட்ட ஐந்தாவது நாள் மதராசுக்கு வந்தேன். வண்டியிலிருந்து இறங்கி மூன்று மணி நேரத்தில் ஜெனரல் ஆஸ்பத்திரிப் படுக்கையிலே படுத்து விட்டேன்!

நான் ஜன்மத்திலேயே எட்டிக்கூடப் பார்த்திராத, பார்க்க முடியாத படுக்கை. கட்டில், ரொட்டி, பால் வைக்க ஒரு டேபிள். அதைப் பார்த்த போது இறக்கும் வரை [illegible] இருந்துவிட [illegible] ஒரு ஆசை [illegible]

தேடி வரும் [illegible] நாளுக்கு ஒரு [illegible] பளபளவென்று தரை [illegible] காற்று, மேலே விசிறி [illegible] இல்லாதவர்கள் [illegible] கொடுத்தால் கூட இந்த சௌகரியம் கிடைக்குமா!

டாக்டர் மூன்று நாள் கழித்துத் தான் பார்த்தார். என்ன தெரியவில்லை, அது வார்டின் பெரிய டாக்டர் பார்க்க வேண்டிய கேஸாம். மூன்று நாள் லீவில் போயிருந்தார் அவர். அதுதான் காரணமாக இருக்கவேண்டும்.

வயிற்றைப் போட்டுப் பிடித்துப் பார்த்து, "கட்டி இருக்கிறது. ஆபரேஷன் செய்யவேண்டும்" என்று பெரிய டாக்டர் சொல்லிவிட்டார். எது வேண்டுமானாலும் செய்யட்டும் என்று உடல், ஆவி இரண்டையும் ஒப்படைத்து விட்டேன்.

ஆபரேஷன் ஆன அன்று சக்கரவர்த்திக்குக் கூட அவ்வளவு உபசாரம் நடந்திராது. அப்படிச் செய்தார்கள்! என்னை யாரும் பார்க்க வரவில்லை. மதராசில் எனக்கு உறவினர்கள் இருந்தால் அல்லவா வந்து பார்க்கப் போகிறார்கள்!

சாயங்காலம் நாலு மணியிலிருந்து ஆறு மணிவரை ஆஸ்பத்திரி திமிலோகப்படும். விஸிட்டர்கள் வரும் நேரம். ஒவ்வொரு படுக்கையைச் சுற்றிலும் குஞ்சு, குழந்தை, பெரியவர்கள் என்று குறைந்தது பத்துப் பேராவது இருப்பார்கள்.

நானும் என்னைப் போல இரண்டு ஆத்மாக்களும் தனியாகக் கிடந்தோம். பக்கத்துப் படுக்கையிலிருந்த நோயாளியைப் பார்க்க வந்த ஒரு அம்மாள் என்னிடம் ஊர், பெயரெல்லாம் விசாரித்து, "பாவம், தனியாக இருக்கிறாயே! கவலைப்பட்டுக் கொண்டே இராதே. வடக்கு மலையான் காப்பாற்றுவார்" என்று ஆறுதல்



சொல்லி, எனக்கு ஆரஞ்சு ஒன்றைக் கொடுத்து விட்டுப் போனாள்.

ஏழு மணிக்கு ஆஸ்பத்திரி வெறிச்சோடி ஓய்ந்து விட்டது.

பத்து நாளான பிறகு நர்ஸ் தேவியிடம் ரொட்டியும் பாலும் போதவில்லை என்றேன். ரொம்ப இளகிய மனசு. உடனே டாக்டரிடம் சொல்லி டி. பி. ஆகாரத்திற்கு உத்தரவு வாங்கிவிட்டாள்.

அவ்வளவுதான்! கோழி முட்டை, மிலிடரி சாப்பாடு, பால் எல்லாம் கிடைத்தது!

வயிற்றுவலி தீர்ந்துவிட்டது. உடம்பும் ஒரு சுற்றுப் பருத்து விட்டாற் போலிருந்தது. பிறருக்கு உபகாரம் செய்யத் தானே உடம்பு எடுத்திருக்கிறோம்! வார்டில் இருந்த இருபத்தாறு நோயாளிகளுக்கும் என்னாலான உபகாரத்தைச் செய்து கொண்டிருந்தேன்.

தண்ணீர் கொண்டு கொடுப்பது, எழுந்திருக்க முடியாதவரைத் தூக்கி விடுவது, தள்ளு வண்டியில் நோயாளியை வைத்துத் தள்ளிக் கொண்டு போவது-இவ்விதம் நான் செய்த உபகாரத்தை யெல்லாம் கணக்கிட்டுச் சொல்லிக்கொண்டிருக்க முடியாது. ஆஸ்பத்திரியில்தான் ஆயிரம் வகையில் உபகாரம் செய்ய இடமிருக்கிறதே!

நாலுவாரம் ஆகிவிட்டது. திடீரென்று ஒரு நாள் காலை என்னை டிஸ்சார்ஜ் செய்து விட்டார் பெரிய டாக்டர். ஆஸ்பத்திரி உடைகளைக் கழற்றி வாங்கிக் கொண்டு, என் ஓட்டைப் போட்ட சட்டையையும் நர்ஸ் எடுத்துக் கொடுத்து விடை கொடுத்தாள். உயிருக்குயிராகப் பழகிவிட்ட நோயாளிகளைப் பிரியும்போது என் நெஞ்சு மிகவும் தழுதழுத்து விட்டது.

வெளியே வந்தேன். ஈசலைப் போல மோட்டார் கார்கள் பறந்தன. ஒரே ஜன வெள்ளமாக இருந்தது. டிராம் வண்டிகள் தடும் தடும் என்று காதைப் பிளந்து கொண்டிருந்தன. நடை பாதையில் வந்து நின்றேன். நான் எங்கே போவது? எனக்கு யார் இருக்கிறார்கள்?

"டிஸ்சார்ஜ் பண்ணி விட்டார்களா, சாமியோ?" என்று கேட் டிருக்கில் உட்கார்ந்திருந்த ஒரு சேவகன் கேட்டான்.

"ஆமாம்"

"எங்கே, ஊருக்குப் பயணமா?"

"ஒன்றும் புரியவில்லை!"

"எந்த ஊரு?"

"மலையாளம்!"

"வேலை?"

"போர்ட்டர்!"

"இப்போது போனால் சரியாக இருக்கும், போ! கொச்சின் எக்ஸ்பிரஸ் புறப்படுகிற நேரம்தான்."

கூட்டத்தோடு கூட்டமாக டிக்கட் கலெக்டர் பார்வையிலிருந்து தப்பித்துக் கொண்டு கொச்சின் எக்ஸ்பிரஸில் ஏறினேன். வண்டி வெகு வேகமாகப் போயிற்று. காலை பத்து மணிக்கு ஊர் சேர்த்து விடலாம். ஆனால் அரக்கோணத்தில் என் அதிர்ஷ்டம் வண்டியை விட்டு இறங்க சேர்த்தது. ஏனெனில் டிக்கட் பரிசோதகர் என்னைக் கீழே இறக்கி விட்டு விட்டார். நான்தான் சொன்னேனே, கடமையைச் செய்கிறவர்களைக் குறை சொல்லக் கூடாது என்று!

நல்ல வேளையாக எனக்கு ஆஸ்பத்திரியில் முதல் நாள் இரவுச் சாப்பாட்டைப் போட்டு அனுப்பி யிருந்தார்கள்.

பைத்தியம் பிடித்தாற் போல அலைந்தேன். ஆஸ்பத்திரி என் மனசை விட்டுப் போகவில்லை. மறுபடியும் அங்கேயே போனால் என்ன! என்ன சொல்லிக் கொண்டு போவது......! சரி, எப்படியாவது பார்த்துக் கொள்வோம் என்று மறுபடியும் பம்பாய் எக்ஸ்பிரஸைப் பிடித்தேன். அன்று பம்பாய் எக்ஸ்பிரஸ் இரண்டு மணி நேரம் 'லேட்'.

சென்டிரல் ஸ்டேஷனில் இரவைக் கழித்து விட்டு மறுபடியும் காலையில் ஜெனரல் ஆஸ்பத்திரியில் காலடி வைத்தேன்.

என்ன ஆச்சரியம்! மறுபடியும் என்னை 'அட்மிட்' செய்து விட்டார்கள். வார்டு தான் வேறு. நோய் வயிற்று வலியேதான்!

"ஆபரேஷன் ஆயிற்று. வலி கொஞ்சம் குணமாயிருந்தது. மறுபடியும் வலிக்கிறது" என்று உண்மையுடன் கொஞ்சம் பொய்யைக் கலந்தேன். குணமாகிற வரையில் இருந்து மருந்து சாப்பிடச் சொல்லி உத்தரவு பிறந்தது.

இரண்டு மாதம் ஓடிற்று. எப்போதும் ஒரே இனிமையான வாழ்க்கை யிருக்குமா! காசு கொடுக்கிற, நல்ல சம்பளம் வாங்குகிற நோயாளி வந்தால் என்னைத் தரையில் உருட்டி விடுவார்கள். கம்பளியும், பாயும் தான் கிடைக்கும். அதனால் என்ன! காசு கொடுக்கிறவர்களுக்கு இந்த வசதி கூட இல்லாவிட்டால், அப்புறம் நியாயம் என்ன இருக்கிறது!

என் வயிற்றுவலி தீரவில்லை. எப்படித் தீரும்! கடைசியில் ஒரு நாள் டாக்டர் என்னை ஆஸ்பத்திரியிலிருந்து கழற்றி விட்டு விட்டார்.

நானும் விடவில்லை. இந்தத் தடவை அரக்கோணம் போகாமலேயே வேறு வார்டில் 'அட்மிட்' ஆகிவிட்டேன்!



இப்போது மார்பு வலி! ஆபரேஷன் கிடையாது. மருந்துதான்!

அதே வார்டில் ஒரு மாதத்திற்கும் பிறகு முதுகு வலி! இன்னும் ஒரு மாதம்!

கடைசியில் வெளியே போகத்தான் வேண்டும் என்ற நிலைமை ஏற்பட்ட பொழுது திடீரென்று மஞ்சள் காமாலை வந்தது. பிறகு கழுத்து விக்கியமாதிரி இருந்தது. பொய்யும், போனி கோல்க்குச் சாப்பிட்ட மருந்தும் வீண்போய்விடுமா! இவ்வாறாக எட்டு மாதங்கள் ஓடிவிட்டன.

மூன்றாவது வார்டில்தான் ராயப்பனைச் சிநேகம் பிடித்தேன். குட்டைக் கிராப்பு, ஒல்லியான தேகம், வெய்யு அரைக்கால் சட்டை, ஒரு கலர் சட்டை இத்துடன் காட்சியளித்தான். அவனுக்குச் சினிமாக் கொட்டகையில் கட்டுகிற வேலையாம். விசிட்டர்கள் வரும் நேரத்தில் நோயாளி ஒருவரைப் பார்க்க வந்திருந்தான். என்னிடம் அவன் பேச்சுக் கொடுக்கவே, எங்கள் இருவருக்கும் சிநேகம் ஏற்பட்டது. வால்டாக்ஸ் ரோடில் ஒரு சந்தில்தான் அவனுக்கு வீடாம்.

"அண்ணே, காலையிலே இட்லி, காப்பி வேணு மென்றால் கேட்டுக் வந்து காசு கொடுத்தால், வாங்கித் தருகிறேன்" என்றான் ராயப்பன் வலிய வந்து.

மறுநாளைக்கு அடுத்த படுக்கையிலிருந்த பள்ளிக்கூட வாத்தியார் என்னைக் கூப்பிட்டு, "ஓய், சார்! உனக்கு இரண்டணா தருகிறேன். காலை இட்லி, வடை, காப்பி வாங்கி வருகிறாயா!" என்று கேட்டார்.

"சரி" என்றேன்.

ராயப்பன் வந்திருந்தான். ஐந்து நிமிஷத்தில் எல்லாம் வந்து விட்டது.

நோயாளிகள் எல்லோரும் எனக்கு உறவினர் மாதிரி. அனைவருக்கு உலகம் முழுவதும் [illegible] வாங்கிக் கொடுத்தாலும் இரண்டணா என்று ஒரு ஏற்பாடு பண்ணிக் கொண்டு விட்டேன். இதில் ராயப்பனுக்கு ஒரு அணா. யார் எதைச் சொன்னாலும் மறுப்பதில்லை. காசு கொடுக்க மாட்டார் என்பதற்காக ஒரு ஏழையைப் புறக்கணிப்பானேன்! பரோபகாரம் செய்யத் தொடங்கிக் கடைசியில் காசு வாங்குவதில் வந்து முடிந்து விட்டது. ஆகவே இனிமேல் உபகாரம் என்று அதைச் சொல்லலாமா!

எனினும் கொடுக்க முடியாத ஏழை பாளைகளுக்கு இலவச உதவி செய்வோமே, உடல் தேய்ந்தா போய்விடும்!

தலையணையை எடுத்து ஒருவருக்குச் சரியாக வைப்பேன். ஒருவருக்குப் போர்த்தி விடுவேன். ஒருவர் வாயில் பால் ஊற்றுவேன். மற்றொருவரைத் தூக்கிவிடுவேன்.

யாராவது ரொட்டி மிச்சம் கொடுத்தால் சாப்பிடுவேன். வேண்டாம் என்று சொல்வதில் ஒரு நம்பமா! மனதாரக் கொடுக்கிற பண்டத்தை வேண்டாம் என்றால் முகத்தில் அடித்தாற் போலல்லவா இருக்கும்! நாம் ஒரு உபகாரம் செய்கிறோம். பிரதியாக ஒன்று அவர் செய்ய நினைக்கிறார். அதில் அவருக்கு ஒரு மகிழ்ச்சி. அதை ஏன் கெடுக்க வேண்டும்! நாம் ஒன்றும் எதிர் பார்க்கவில்லை. தானாக வருவதைத் தள்ளக் கூடாது. நோயாளிகளுக்கு ஆறுதல் சொல்லுவேன். நயமாகப் பேசுவேன். இதெல்லாம் உபகாரமில்லையா! எந்த எந்த வியாதிக்கு எப்படிப் படுக்க வேண்டும், எப்படி அங்காமல் இருக்க வேண்டும் என்று அனுபவம் காரணமாக எனக்கு ஒரு அறிவு ஏற்பட்டு விட்டது.

'ஹுனோரோ பாம் டேன்' எப்படி நடந்து கொள்ள வேண்டும்! மார்பு வலி போட்டதனால் ஏற்படும் பாதையை சமாளித்துக் கொள்ளும் வழி என்ன! இம் மாதிரியாக இன்னும் என்னவோ சொல்லிக் கொடுப்பேன்.

நர்ஸுகளுக்குக் கூட மாட உதவி செய்வேன். பெரிய டாக்டர் வேணும் என்பதை ஓடிப் போய் உள்ளேயிருந்து வாங்கி வருவேன்.

எல்லாவற்றிற்கும் விசேஷம் என்ன என்று உங்களிடம் சொல்ல வேண்டுமா! ஒரே அன்பு, ஒரே பிரேமம்! ஒவ்வொரு நோயாளியும் ஒரு நிமிஷமாவது நான் போகாவிட்டால் எப்படி ஏங்குகிறார் என்று எனக்கல்லவா தெரியும்! நம்மேல் இத்தனை மனிதர்கள் அன்பு வைத்திருக்கிறார்களா என்று நினைக்க நினைக்க எனக்கு வியப்புத் தாங்கவில்லை. ஆஸ்பத்திரியிலேயே வசித்து விட்டேன். வெளி உலகம் ஒன்று இருக்கிற ஞாபகமே சில நாட்களில் இராமல் போய்விட்டது!

இதையும் சொல்லித்தான் விடவேண்டும். இந்த வார்டுக்கு வந்த பிறகு இது வரை முப்பது முப்பதாக மூன்று தடவை ஊருக்கு மணியார்டர் செய்துவிட்டேன்.

ஒரே ஒரு நோயாளி. பெயர் கண்ண முதலியார். ஏழு மாதமாக அதே வார்டில் ஒரே படுக்கையில் கிடக்கிறார். படுத்த படுக்கையாக ஏழு மாதம்! சாப்பாடு கழுத்தில் குழாய் வைத்துத் திரவமாக இறக்கப் படுகிறது. அவர் பக்கத்து நோயாளியிடம், "பாருங்கள், சார்! இந்த ஆள் மெழுகு மாதிரி இருக்கிறான். இவனுக்கு வியாதியாம். மாமிசம், ரொட்டி, தக்காளிப் பழம், இட்லிகள் கொடுக்கிறீர்கள். எல்லாவற்றையும் சாப்பிடுகிறான். வாய் மூடாப் பட்டினி! காசுவேறு கேட்கிறான்" என்று என்னைப் பற்றிச் சொன்னாராம்.

குணமையான நெஞ்சு! இந்த நெஞ்சில் சோறு எப்படி இறங்கும் என்றுதான் சொல்லத் தோன்றுகிறது. தொலைந்து போகிறார்! இன்னமும் அவர் மனைவி வராத வேளைகளில் நான்தான் அவரைக் கவனித்துக் கொள்கிறேன்.

எனக்கு இந்த விஷக் கண்கள் படுவதில் நம்பிக்கை உண்டு. இல்லாவிட்டால் திடீரென்று இந்த நிலைமைக்கு நான் வரக் காரணம் என்ன!

ராயப்பன் மகா நம்பிக்கையான ஆசாமி. காலணாவுக்கு ஓரணா கூலியே தவிர, தப்புத் தண்டாவிற்கே போகமாட்டான். அவனும் இந்த மூன்று மாதத்தில் நூறு ரூபாய்க்குமேல் இந்த வார்டிலிருந்து சம்பாதித்து விட்டான்.

முத்தும் பின்னே வந்து மூன்று வாரம் ஆகிறது. அவர் கான்ஸ்டேபிள், காசு கொடுக்கிற நோயாளி. மூன்று வாரமாக வாயைக் கட்டிக் கொண்டிருந்த ஆளுக்குத் திடீரென்று சோறு, பொங்கலும், வடையும் தின்ன ஆசை வந்து விட்டது. அந்த வார்டில் இருக்கும் அத்தனை பேரும் இட்டுலி, பொங்கல் வடை என்று சாப்பிட்டுக் கொண்டிருக்கும் பொழுது, அவர்மட்டும் எவ்வளவு நாட்கள் தான் வாயைக் கட்டிக் கொண்டு சும்மா உட்கார்ந்திருக்க முடியும்! பத்துப் பதினைந்து நாட்களாகப் பத்தியமான ஆகாரத்தைச் சாப்பிட்டுச் சாப்பிட்டுச் செத்த அவர் நாக்குக்கும் சபலம் தட்டி விட்டது. இந்த உலகத்தில் ஆசை யாரை விட்டது! பெரிய பெரிய ஆசாமிகளைக்கூட

ஆசை ஆட்டி வைத்து விடுகிறது அல்லவா! அப்படி இருக்கும்பொழுது முத்துப் பிள்ளை மட்டும் எந்த மூலைக்கு?

வாயைக் கட்டி வயிற்றைக் கட்டி அவ்வளவு காட்களை ஓட்டி விட்ட முத்துப் பிள்ளை அன்று என்னைக் கூப்பிட்டார். ஒரு காலி ஆர்லிக்ஸ் சீசாவையும் எட்டணாவையும் கொடுத்து, "எந்தா, ராமன் நாயர், ஒரு பொங்கலும், நாலு வடையும் வாங்கிக் கொடுக்கியோ! சட்னி நிறைய இருக்கணும். எந்தா, ஓ" என்று புன் சிரிப்புச் சிரித்தார். இந்த நாசமாய்ப் போன மலையாளத்தைப் பொறுத்துக் கொண்டு 'சரி' என்றேன்.

அவர் மாத்திரம் இல்லை; பதினெட்டு நோயாளிகள்! ஒன்று, அரை, கால் என்று கொடுத்தார்கள். கையில் ஏககாலத்தில் அவ்வளவு சில்லறைக் காசுகள் குலுங்கவே, இன்று சம்பாது வேட்டைதான் என்று இறுமாந்து போனேன். தினமும் இப்படியே கிடைத்துக் கொண்டிருந்தால் இந்த வேலைக்கு கடாமுமா, போ...டா வேலை! 'பணத்துக்கும் பணமும் ஆயிற்று, உடல் உழைப்பும் குறைச்சல்!' என்று எண்ணியவாறே ராயப்பனைத் தேடிச் சென்றேன்.

ராயப்பன் மூக்கில் வியர்த்த குறையாக என்னை எதிர்பார்த்து கடை போட்டுக் கொண்டிருந்தான் 'வேட்'டுக்கு அருகில்.

"ராயப்பன்! இன்று நீ என் முகத்தில்தான் விழித்திருக்கிறாய்! பதினெட்டுப் பேர் பணம் கொடுத்திருக்கிறார்கள். உனக்குக் கூலி பதினெட்டணா அதாவது ஒன்னே அரைக்கால் ரூபாய் ஆயிற்று!" என்றேன் மகிழ்ச்சியுடன். பிறகு கணக்கைச் சொல்லிக் காசு அத்தனையையும் அவனிடம் கொடுத்தேன்.

ராயப்பன் அத்தனையையும் வாங்கிக் கொண்டு போனான். பிராந்திக்குப் பக்கத்தில் வாண்டாக்ஸ் ரோடைப் பார்த்துக் கொண்டே நான் நின்றேன். நின்றேன், நின்றேன்; அப்படி நின்று கொண்டிருந்தேன். என் கால்கள் கடுத்தனவே ஒழிய, ராயப்பன் வரும் வழியாயில்லை. கடைசியில் நம்பிக்கை இழந்து பதினொரு மணிக்கு என் வார்டுக்குத் திரும்பி வந்தேன்.

"நாயர், எங்கே வடை!"

"நாயர், எங்கே ஐயா இட்டிலி!"

"என்ன, ஐயா! ஒன்றும் வாங்கி வராமல் வெறுங்கையோடு வருகிறாயே!"

"ஓ ராமன் நாயர்! எந்தா தாமஸம்!"

எல்லோருக்கும் பதிலாக "இன்னும் ஆள் வரவில்லையே!" என்றேன் வருத்தத்துடன்.

"டேய், என்னிடத்திலேயே உன் வேலையைக் காண்பிக்கிறாயே! வையடா காசை! பாட்டில் எங்கேடா!"

'டா' என்று ஆரம்பித்து விட்டார் முத்துப் பிள்ளை. கன்ஸ்டேபிள் அல்லவா!

சர்ஜனுக்குச் செய்தி போய்விட்டது. கௌசல்யா வந்தாள். எல்லாவற்றையும் விவரமாக விசாரித்தாள்.

"நீ தானே காசை வாங்கிக் கொண்டு போனாய்! நீதான் பொறுப்பு. நீதான் திருப்பிக் கொடுக்க வேணும்" என்று தீர்ப்புக் கூறினாள் அவள்.

"எப்படி! உபகாரத்துக்கு ஒரு ஆளு விட்டச் சொன்னேன். அவன் ஓடிப்போய் விட்டான். அதற்கு நான்தான் பொறுப்பாளியா!" என்றேன்.

"இது என்ன நியாயம்! மலையாளியாள் பெயரையே கெடுக்கிறாயே!" என்றாள் நர்ஸ். அவளும் என்னைப்போல மலையாளி. அப்பப்பா! மலையாளிகளின் பெயரைக் காப்பாற்ற அவளுக்குத் தான் என்ன அக்கறை! என்னை அவள் திருடன் என்று சொல்லவில்லை, நீதான் பொறுப்பாளி என்று சொன்னாளே தவிர, ஒரு வார்த்தை அனுதாபமாகச் சொன்னாளா! என் கையில் மட்டும் அப்பொழுது அத்தனை பேருக்கும் திருப்பிக் கொடுக்கக்கூடிய பணம் இருந்தால், அப்பொழுதே தலையைச் சுற்றி வீசி எறிந்திருப்பேன். ஆனால் என் கையில்தான் கால் காசு இல்லையே! என்ன செய்வது!

அதற்குள் பெரிய டாக்டர் வந்து விடவே, எல்லோரும் அவரிடமும் சொல்லி முறையிட்டார்கள்.

என்னைப் பொய்யன் என்றும் திருடன் என்றும் பெரிய டாக்டர் ரொம்பவும் கோபித்துக் கொண்டார்.

நானா திருடன்! பொய்யன் என்றாலும் ஒத்துக் கொள்ளலாம். நானா திருடன்! எனக்குக் கோபம் பீறிக் கொண்டு வந்தது.

"டாக்டர் சார், நான் திருடனில்லை" என்றேன் உரத்த குரலில்.



"நீ தான் திருடன்!" என்றார் டாக்டர்.

"நான்......"

"இல்லவே இல்லை!" என்றார் அவர்.

டாக்டர் எனக்கு 'டிஸ் சார்ஜ்' உத்தரவு கொடுத்து விட்டார். மன்னிப்புக் கேட்க மனமில்லை. அவர் கடைசியில் சொன்னதைக் கவனித்தீர்களா!

'நான்......' என்று நான் ஆரம்பிப்பதற்குள்ளாக, அவர், "இல்லவே இல்லை!" என்று ஒரேயடியாகச் சாதித்தாரே! அதற்கு நான் திருடன் இல்லை என்பது தானே அர்த்தம்! என்ன இருந்தாலும் அவருக்கு என்மேல் ரொம்ப அபிமானம்தான்!

ஹூம்...நான் 'டிஸ்சார்ஜ்' ஆனதற்குக் கன்ன முதலியாரின் கண்ணைத் தவிர வேறு எது காரணமாக இருக்க முடியும்!

* * *

ஊருக்குப் போனால், நான் அனுப்பின தொண்ணூறு ரூபாயில் நாற்பது, ஐம்பது மிச்சம் பிடித்து வைத்திருப்பாள் என் மனைவி ருக்கு. அவள் கெட்டிக்காரி. அதை முதலாகப் போட்டு ஒரு வெற்றிலை பாக்குக் கடை வைத்து விடுகிறேன். எல்லாவற்றையும் அவள் செலவழித்திருந்தால்...! செலவழித்திருந்தால் செலவழித்திருக்கட்டுமே! அதற்காக என்ன குடியா முழுகி விடும்!

மறுபடியும் இந்த ஆஸ்பத்திரி இல்லாவிட்டால் வேறு ஒரு பெரிய ஆஸ்பத்திரியில் நோயாளியாக 'அட்மிட்' ஆகி விடுவேன் என்று சொல்கிறீர்களா!

அதுதான் இல்லை. இது இழிவான பிழைப்பு. நிம்மதியோடு யாராவது பொய் சொல்லிக் கொண்டிருக்க முடியுமா! அதுவும் எத்தனை நாளுக்கு!

மறுபடியும் மூட்டை தூக்குகிறேன். அது எவ்வளவோ கௌரவமான பிழைப்பு. 'உழைத்தேன், சம்பாதித்தேன்!' என்ற திருப்தியாவது இருக்கும். இல்லையா!



# எனது ஐரோப்பிய அனுபவங்கள்

நீதிபதி ஏ. எஸ். பி. ஐயர்

“லண்டன் மாநகர் யாருக்காவது சலித்து விட்டதென்றால், அவருக்கு வாழ்க்கையே சலித்து விட்டது என்றுதான் பொருள் கொள்ள வேண்டும்.”

பிரிட்டிஷ் இலக்கியப் பேராசிரியரான டாக்டர் ஜான்சன் வெகு காலத்துக்கு முன் லண்டனைப் பற்றி இவ்விதம் கூறினர். அவரது அபிப்பிராயம் முன்னரைக் காட்டிலும் இன்று இன்னும் அதிகப் பொருத்தமுள்ளதாக இருக்கிறது. ஏனெனில் அப்போது இருந்ததைவிட இப்போது லண்டன் உருவத்திலும், ஜனத்தொகையிலும், முக்கியத்துவத்திலும் பன்மடங்கு பெருகி வளர்ச்சியடைந்திருக்கிறது அல்லவா?

உலக சரித்திரத்திலே லண்டனைக் காட்டிலும் பிரும்மாண்டமான நகரம் வேறு எதுவுமே இல்லை. விஸ்தீர்ணம், ஜனத்தொகை, வர்த்தகம், அரசியல் முக்கியத்துவம், செல்வாக்கு முதலிய எந்த விஷயத்திலும் லண்டனுக்கு நிகரான நகரம் உலகத்தில் இருந்ததில்லை.

நியூயார்க் போன்ற நவீன நகரங்கள், எவ்வளவோ முயற்சி செய்தும்கூட லண்டனுக்குச் சமமாக விளங்க முடியவில்லை. லண்டனைப் பல நகரங்கள் ஒன்று சேர்ந்த மாபெரும் நகரம் என்று சொல்லலாம். உலகத்தில் உள்ள சில தேசங்களைக் காட்டிலும் கூட லண்டன் மாநகரம் பெரியதாக விளங்குகிறது!

இந்த ஒரு நகரில் மாத்திரமே எண்பது லட்சம் ஜனங்கள் வரை வசிக்கிறார்கள். அவர்களிலேயே லட்சக் கணக்கானவர்கள் லண்டன் நகர் முழுவதையும் சுற்றிப் பார்த்திருக்க மாட்டார்கள் என்பது நிச்சயம்!

* * *

லண்டன் ஒரு பெரிய நகரம் என்பது மாத்திரமல்ல, அதில் உள்ள ஜனங்களும் அஞ்சா நெஞ்சம் படைத்தவர்கள். அவர்களிடையே நிலவும் ஒற்றுமையும் ஆச்சரியகரமானது.

இரண்டாவது உலக மகா யுத்தத்தின்போது, 1940-ம் வருஷம் செப்டம்பர் மாதத்திலிருந்து 1941 மே வரையில் லண்டன் ஜெர்மன் வெடிகுண்டு விமானங்களின் அகோரமான தாக்குதலுக்கு உள்ளாயிற்று. லண்டன் மக்கள் ஒன்பது மாதங்கள் வரையில் உலகமே கண்டிராத வெடிகுண்டு மாரிக்கு இலக்காயினர். அதே போல் பிரிட்டனிலுள்ள மற்ற நகரங்களிலும் ஜெர்மன் விமானங்கள் மாதக் கணக்கில் வெடிகுண்டுகளை வீசின.

அதன் விளைவாக லண்டனில் மாத்திரம் பதினொன்றரை லட்சம் வீடுகள் நாசமாயின. மற்ற நகரங்களில் அதைவிட இரண்டு மடங்கு அதிக வீடுகளுக்குச் சேத மேற்பட்டது. அந்த ஒரு சில மாதங்களில் ஜெர்மன் விமானங்கள் பிரிட்டனில் சற்றேறக் குறைய இரண்டு லட்சம் வெடிகுண்டுகளை வீசின என்றும், மேற்படி தாக்குதலின் உக்ரத்தை ஊகித்துக் கொள்ளலாம். அந்நகைய கஷ்ட காலத்தில் பிரிட்டிஷார் காட்டிய தைரியத்தையும் அஞ்சா நெஞ்சத்தையும் வீரத்தனத்தையும் யாரும் மெச்சாமல் இருக்க முடியாது. பார்லிமென்டுக் கட்டிடம் இடிந்து, நாலாபுறத்திலும் வெடிகுண்டுகள் வீசப்பட்டபோதுகூட, பிரிட்டிஷ் பார்லிமென்டு அங்கத்தினர்கள் தங்களுடைய விவாதங்களை நடத்தத் தவறவில்லை!

* * *

நான் ஐ. ஸி. எஸ். பரீட்சைக்கு வாசித்துக் கொண்டிருந்த போது, பரீட்சைக்கான பாடங்களை யொட்டிப் பேராசிரியர்களின் பிரசங்கங்கள் நடைபெறுவது உண்டு. பல்வேறு சட்டப் பாடங்களை யொட்டி சர் ஜ. ஜே. ட்ரெவிலியன் பிரசங்கங்கள் செய்து வந்தார். அவர் இந்தியாவில் ஹைகோர்ட் நீதிபதியாக இருந்தவர்.

அவர் தமது அனுபவத்தில் நிகழ்ந்த மிகவும் வேடிக்கையான ஒரு சம்பவத்தை எங்களுக்கு எடுத்துக் கூறினர்.

அவர் ஒரு சமயம் கொலை வழக்கு ஒன்றை விசாரணை செய்தாராம். மிருகத்தனமான கொலை நடந்தது என்பது சிறிதும் சந்தேகத்துக்கு இடமின்றி ருஜுவாகி விட்டதாம். அந்த வழக்கில் சம்பந்தப்பட்ட எதிரி மீது சர் ட்ரெவிலியனுக்கு ஆத்திரம் தாங்க முடியவில்லையாம். அவன் கோரமான கொலையைச் செய்தவன் அல்லவா?

அவர் மேற்படி எதிரிக்குத் தூக்குத் தண்டனை விதிப்பதென்று உறுதியாக முடிவு செய்து விட்டாராம். அவ்விதமே தண்டனை விதித்துப் பகிரங்கமாகத் தீர்ப்புக் கூறும் சமயத்தில், கோர்ட்டில் திடீரென்று பரபரப்பு ஏற்பட்டதாம். என்னவென்று கவனித்தபோது, கொலையுண்ட



ஸ்விட்ஜர்லாந்திலே ரைன் நதிக்கரையில் அமைந்துள்ள அழகிய நகரம்



ஆல்ப்ஸ் மலைத்தொடரின் அற்புதத் தோற்றம்

தாகக் கூறப்பட்ட பெண் கோர்ட்டுக்கு வந்து, "என்னை யாரும் கொலை செய்யவில்லை; நான் உயிருடனிருக்கிறேன்!" என்று கூறி எல்லோரையும் பிரமிக்க வைத்தாளாம்!

* * *

நான் லண்டனிலிருந்தபோது மெய் சிலிர்க்கச் செய்யும் ஒரு சம்பவத்தைப் பற்றிக் கேள்விப்பட்டேன்.

மகாத்மா காந்தி லண்டனுக்கு விஜயம் செய்திருந்தார் அல்லவா? இந்தியாவில் கவர்னர் பதவி வகித்த ஓர் ஆங்கிலேயர் அப்போது அவரிடம் வந்தார். "எங்களை உங்கள் நாட்டிலிருந்து வெளியேறும்படி கூறுகிறீர்களே! இந்தியாவில் நாங்கள் நூறு கோடி பவுன் மூலதனம் போட்டிருக்கிறோம்; ரயில்வேக்களை அமைத்திருக்கிறோம்; தந்திப் போக்குவரத்தை ஏற்படுத்தியிருக்கிறோம்; நீர்ப்பாசனத் திட்டங்களை நிறைவேற்றியிருக்கிறோம். இவைகளை யெல்லாம் விட்டுவிட்டு நாங்கள் வெளியேற வேண்டும் என்று நீங்கள் எதிர்பார்க்கிறீர்களா?" என்று கேட்டார்.

"ஓர் அமெரிக்கரைத் தலைவராகக் கொண்டு இந்தியர்களும் ஆங்கிலேயர்களும் அடங்கிய ஒரு நீதிச் சபையை நியமித்து, மேற்படி சபையின் தீர்ப்புக்கு மேற்படி விஷயங்களை விட்டு விடுவோம்" என்றார் காந்தி மகான்.

காந்திஜியின் யோசனையை மாஜி கவர்னர் ஏற்றுக் கொள்ளவில்லை. எனவே, காந்திஜி அவருக்கு மற்றொரு யோசனை கூற முற்பட்டார்.

"அப்படியானால், ரயில்வேக்கள், ரயில் வண்டிகள், தந்திச் சாதனங்கள் எல்லாவற்றையும் நீங்கள் இந்தியாவிலிருந்து எடுத்துக் கொண்டு போய்விடுங்கள். அணைக் கட்டுகளையெல்லாம் உடைத்து விடுங்கள். நீர்ப் பாசனங்களையெல்லாம் தகர்த்து விடுங்கள். மரங்களை வெட்டி விடுங்கள், பயிர்களை அழித்து விடுங்கள். எதையெல்லாம் உங்களால் எடுத்துக் கொண்டு போக முடியுமோ, அதையெல்லாம் எடுத்துக் கொண்டு போய் விடுங்கள். ஆனால் எங்களையும் எங்கள் நாட்டையும் மாத்திரம் பாக்கி வைத்து விட்டுப் போங்கள். பிறகு எங்கள் விதியை நாங்கள் உருவாக்கிக் கொள்கிறோம்" என்றார் மகாத்மா காந்தி.

இதைக் கேட்டதும் அருகில் இருந்த ஆங்கிலேயர்களுக்கு என்ன பதில் கூறுவதென்றே தெரியவில்லை. மாஜி கவர்னரோவெனில், அந்த இடத்திலிருந்து மெதுவாக நழுவி, வந்த வழியே திரும்பி விட்டார்!

* * *

உலகப் பிரசித்தி பெற்ற ஆக்ஸ்போர்ட் கலாசாலையில் நான் வசித்துக் கொண்டிருந்தபோது, என்னுடைய வாழ்க்கையிலேயே முதல் தடவையாக நான் ஒரு விமானத்தில் பிரயாணம் செய்தேன். அவ்விமானம் அபஸ்வரமான பலவித சப்தங்களை வெளியிட்டுக் கொண்டு தரையிலிருந்து உயரே கிளம்பியது. பிறகு அது சுற்றிச் சுற்றி வந்தது. திடீரென்று வெகு வேகமாக இரண்டு பர்லாங்கு தூரம் உயரே சென்று ஆக்ஸ்போர்டு நகரம் முழுவதையும் சுற்றி வந்தது.

மேற்படி விமானம் ஆகாயத்தில் சென்று கொண்டிருக்கையில், எனக்குத் திரிசங்கு மகாராஜனின் நினைவு வந்துவிட்டது. விசுவாமித்திர முனிவரின் அநுக்கிரகத்தினால் அந்த மகாராஜன் என்றென்றும் ஆகாயத்தில் இருப்பது சாத்தியமாயிற்று அல்லவா? அதுபோலவே எனக்கும் எப்போதும் ஆகாயத்திலேயே இருக்கவேண்டும் என்று தோன்றியது. ஆனால் என்னுடைய மேற்படி ஆசை நிறைவேற வேண்டுமானால், விமான சர்வாதிகளுக்கு நான் லட்சோப லட்சம் பவுன் கொடுத்தாலும் கூடப் போதாதே! என்ன செய்வது?

விமானத்தின் மூலம் ஆகாயத்தில் செல்லலாம் என்பதை முதன் முதலாகக் கண்டுபிடித்த தேசம் இந்தியா தான். நவீன விமானங்களைப் போல் நிர்மாணிக்கும் முறையை முற்கால இந்தியர்கள் அறியாதிருக்கலாம். ஆனால் பாதரசத்தின் சக்தியால் அவர்கள் வெகு வேகமாகப் பறந்து செல்லும் யந்திர விமானங்களில் யாத்திரை சென்றிருக்கக் கூடும் என்று எண்ணுவதற்கு எத்தனையோ ஆதாரங்களும் சான்றுகளும் இருக்கின்றன.

* * *

ஆக்ஸ்போர்டில் இருந்தபோதுதான் நான் முதன் முதலாகச் சைக்கிள் விடக் கற்றுக் கொண்டேன். கற்றுக் கொண்ட உடனேயே எவரும் சைக்கிள் சவாரியில் நிபுணராகிவிட முடியாது அல்லவா?

பார்க்லே பாங்கிக்கு எதிரே எனக்குக் கொஞ்சம் அலுவல் இருந்ததால், அங்கே சட்டென்று சைக்கிளை நிறுத்தினேன். எனக்குப் பின்புறமாக சைக்கிளில் வந்து கொண்டிருந்த ஒரு பாதிரியார், நான் திடீரென்று சைக்கிளை நிறுத்தியதால் என் சைக்கிளுடன் மோதிக் கொண்டு கீழே விழுந்து விட்டார். அதனால் அவரது உடைகள் கிழிந்தன.

அப்படியிருந்தும் அவர் சிறிதும் கோபம் கொள்ளவில்லை. "எச்சரிக்கை யில்லாமலோ அல்லது பின்புறம் திரும்பிப் பார்க்காமலோ நீங்கள் அவ்வாறு நடு ரோட்டில் சைக்கிளை நிறுத்தி யிருக்கக் கூடாது" என்று சாந்தமாகக் கூறினார். நான் அவரிடம் மன்னிப்புக் கோரினேன். பிறகு அவர் சாந்தமாகவே சென்று விட்டார்.

மற்றொரு சமயம் நான் சைக்கிளில் வெகு வேகமாகச் சென்று கொண்டிருக்கையில், ஒரு தொழிலாளி சைக்கிளில் ஒரு சந்திலிருந்து வந்து ரஸ்தாவைக் குறுக்கே கடந்து செல்ல முற்பட்டார். அப்போது அவர்மீது என் சைக்கிள் மோதியதால், இருவரும் சேர்ந்து உருட்டி யடித்துக் கொண்டு கீழே விழுந்தோம்.

"உங்கள்மீது மோதியதற்காக நான் மிகவும் வருந்துகிறேன்" என்றேன் அவரிடம்.

"நீங்கள் சிறிதும் வருந்த வேண்டாம். இவ்வாறு மோதிக் கொண்டு விழுவது எனக்குப் பழக்கமாகிவிட்டது" என்று அவர் பதிலுக்குக் கூறிவிட்டார்.

அவருக்கு நான் ஒரு ஷில்லிங் காசை எடுத்துக் கொடுத்தபோழுது, அதை அவர் வாங்கிக் கொள்ள முடியாது என்று அறவே மறுத்து விட்டார்.

யாருக்கும் ஆத்திரம் ஏற்படக்கூடிய அத்தகைய சந்தர்ப்பங்களில் அவர்கள் கோபம் கொள்ளாமல் சாந்தமாக நடந்து கொண்டது எனக்கு ஆச்சரியத்தைக் கொடுத்தது.

* * *

எனக்கு வெகு காலமாக ஸ்விட்ஜர்லாந்துக்குச் செல்ல வேண்டும் என்ற ஆர்வம் இருந்து வந்தது. அதற்கு மூன்று காரணங்கள் உண்டு. ஆல்ப்ஸ் மலைத் தொடரின் அதிசயக் காட்சிகளும், அந்த நாட்டின் ஏரிகளின் வனப்பும், ஸ்விஸ் மக்களின் சுதந்திர உணர்ச்சியும் என்னுடைய மனத்தை வெகுவாகக் கவர்ந்திருந்தன.

ஸ்விட்ஜர்லாந்து மிகச் சிறிய தேசமாயினும் அதில் மூன்று நாடுகளைச் சேர்ந்தவர்கள் வசிக்கின்றனர். அது ஜெர்மானியர், பிரஞ்சுக்காரர்கள், இத்தாலியர்கள் அடங்கிய ஒரு தேசமாக இருப்பதால், ஜெர்மனியும் பிரான்சும் ஒன்றைக் கொன்று எதிராக நிற்கும் யுத்தத்தி லெல்லாம் ஸ்விட்ஜர்லாந்து நடுநிலைமை வகிப்பதைத் தவிர வேறு வழியிராமற் போகிறது.

வெவ்வேறான மூன்று தேசத்தினர் அடங்கிய ஒரு நாடு சுதந்திரமாக இருக்கையில், இந்தியாவின் சுதந்திரத்துக்கு ஹிந்து—முஸ்லிம் வேற்றுமை முட்டுக்கட்டையாக இருப்பதாய்க் கூறப்பட்டது எனக்கு ஆச்சரியமாக இருந்தது.

இந்தியாவின் சீதோஷ்ண நிலை மோசமானது என்று ஆங்கிலேயர்கள் சொல்வது உண்டு. ஆனால் உண்மையில் இங்கிலாந்தைக் காட்டிலும் இந்தியாவின் சீதோஷ்ண நிலை சிறந்தது என்றே சொல்ல வேண்டும். இந்தியாவில் கம்பளி உடைகள் போன்ற ஏராளமான உடைகள் நமக்குத் தேவை யில்லை; எளிமையான உணவு போதுமானது. பரம ஏழைகள்கூடப் பணச் செலவின்றி நதிகளிலும் குளங்களிலும் ஆனந்தமாக ஸ்நானம் செய்யலாம்.

ஆனால் இங்கிலாந்திலோ குளிரைச் சமாளிக்க அடுப்புக்கு நிலக்கரி வாங்க வேண்டும்; கம்பளி உடைகள் வேண்டும். பணச் செலவின்றி ஸ்நானம் கூடச் செய்ய முடியாது.

இந்தியாவில் குளிர் சகிக்க முடியாமல் இருப்பதில்லை. கோடைக் காலத்திலோ, விரும்புவோர் இந்தியாவில் உள்ள குளிர்ந்த மலைப்பிரதேசங்களுக்குச் செல்லலாம். இங்கிலாந்திலோ குளிரிலிருந்து பாதுகாத்துக் கொள்வதற்கு இந்தியாவைப் போன்ற இயற்கை வசதிகள் எதுவும் இல்லை. இந்தியாவில் மற்ற எந்தக் குறைகள் இருந்தாலும், இயற்கை நமக்கு எந்தக் குறையும் வைக்கவில்லை.

அழகான நமது நாட்டில் மலைகள், நதிகள், பனிக் குன்றுகள், பள்ளத்தாக்குகள், ஏரிகள், சோலைகள், புஷ்பங்கள், பழங்கள் முதலியவற்றுக்குக் குறைவே யில்லை. எனவே, பாரதநாடு இயற்கை அன்னையின் செல்வப் புதல்வி என்பதில் எள்ளளவும் சந்தேகமில்லை அல்லவா?

## ஒரு நாளாவது நிம்மதி!



வீட்டு அம்மாள் (பக்கத்து வீட்டுப் பெண்மணியிடம்):—அப்பாடி! வருஷத்தில் ஒரு நாளாவது சத்தமின்றி நிம்மதியாக இருக்க முடிகிறதே!




'லலிதா ஸில்க் எம்போரியம்' மின்சார விளக்குகளால் ஜ்வலித்துக் கொண்டிருந்தது. தீபாவளி வியாபாரம் அல்லவா? அத்துடன் பெண்மணிகளின் மின்மினித் தோற்றம் அந்தக் கூட்டத்திற்குத் தனி ஜீவ களையைக் கொடுத்தது!

தான் வந்த காரியத்தை மறந்து, அங்கு குழுமியிருந்த இளம் பெண்களையே உன்னிப்பாகப் பார்த்துக் கொண்டிருந்தாள் செல்லம்மா. யார் யார் என்னென்ன புடவைகள் உடுத்திக் கொண்டிருக்கிறார்கள்? எதெது பொருத்தமாக அமைந்திருக்கிறது? இதையெல்லாம் நோட்டம் பார்ப்பதிலேயே அவள் கவனம் லயித்திருந்தது.

செல்லம்மாவுடன் வந்த அவளது மூத்த பெண் கோமளாவுக்குத் தன் அம்மாவின் ரசனையை அதிக நேரம் பொறுத்துக் கொள்ள முடியவில்லை.

"அம்மா, கடையைப் பூட்டுகிற வரையிலும் இப்படியேதான் வேடிக்கை பார்த்துக் கொண்டு இருக்கப் போகிறாயா? பார்க்கிறவர்கள் நம்மைப் 'பித்துக் குளி' என்று நினைத்துக் கொள்வார்கள்."

தன் பெண்ணின் அதட்டலைக் கேட்ட பின்தான் செல்லம்மாவுக்குத் தான் வந்த காரியம் நினைவுக்கு வந்தது.

"சிவப்பு உடம்புக்கு எந்தப் புடவை பாந்தமாக இருக்கும் என்று பார்க்கிறேன். அதோ அந்தப் பெண் மாதிரித்தானே நம் சகுணாவும்? ஆனால், அவள் உடுத்திக் கொண்டிருக்கிற புடவை நன்றாக இல்லையே?"

"அம்மா, போதுமே! யாராவது ஏதாவது நினைத்துக் கொள்ளப் போகிறார்கள். வா, சீக்கிரம் ஏதாவது ஒரு புடவையைப் பார்த்து எடுத்துக் கொண்டு போகலாம்."

இருவரும் புடவை வைக்கப்பட்டிருக்கும் பீரோப் பக்கம் போனார்கள். கடைக்காரன் விதவிதமான வர்ணப் புடவைகளை எடுத்துப் பரப்பினான்.

"அம்மா, இந்த நீல வர்ணப் புடவை சகுணா மன்னிக்கு நன்றாயிருக்கும். சிவப்பு உடம்புக்கு அதுதான் எடுத்துக் காட்டும்" என்று சொல்லிக் கொண்டே அந்தப் புடவையைப் பிரித்துக் காட்டினாள் கோமளா.

"அது அவ்வளவு நன்றாயில்லை, கோமளா! இதோ இந்த மஞ்சள் புடவை எனக்குப் பிடித்திருக்கிறது. இது அழகாக இல்லை?"

"புடவை தேவலை. ஆனால், மன்னிக்கு எடுப்பாயிருக்காதே. இந்தக் கிளிப் பச்சையை எடுப்போமா? இல்லாத போனால், இந்த மயில் கழுத்துக் கலர் சகுணா மன்னிக்குப் பொருத்தமாக இருக்கும். மன்னியும் இந்த மாதிரித்தான் ஆசைப் பட்டாள்."

"இதெல்லாம் எனக்குப் பிடிக்கவில்லை, கோமளா! மஞ்சள்தான் மங்களகரமாக, லக்ஷணமாக இருக்கும். இதோ பார், குங்குமக் கலர் பார்டர் லக்ஷ்மீகரமாக இருக்கிறது."

"புடவையிலே என்ன அம்மா இருக்கிறது, இந்த லக்ஷ்மீகரமெல்லாம்? கருப்பும், நீலமும் கட்டிக் கொள்கிறவர்களெல்லாம் லக்ஷ்மிக்கு அக்காவா சுற்றிக் கொண்டிருக்கிறார்கள்? உடம்புக்கு ஏற்ற புடவையைத்தானே வாங்கிக் கொள்ள வேணும்?"

"என்னவோ அம்மா, எனக்கு மனசு ஒப்பவில்லை. முதன் முதலில் நாட்டுப் பெண்ணுக்கு வாங்கிக் கொடுக்கும் புடவை லக்ஷ்மீகரமாக இருக்கணும். தலைதீபாவளியைத்தான், லீவு கிடைக்கவில்லை யென்று பம்பாயிலேயே கொண்டாடி விட்டார்கள். இரண்டாம் தீபாவளியை யாவது பிறந்தகத்திலே கொண்டாடலாமென்று வந்திருக்கிறாள். அதோடு பூச்சூட்டல் வேறு. அவள் பெற்றுப் பிழைத்து மஞ்சளும் குங்குமமுமாக மங்களமாய் வாழணும். அம்பாள் பிரசாதம் மாதிரி இந்த மஞ்சள் புடவை இருக்கும்."

செல்லம்மாவின் குரல் கரகரத்தது. தன் தூய பாசத்தைத் தன் பெண் அஞ்ஞானம் என்று எண்ணுகிறாளே என்ற அங்கலாய்ப்பு. தான் என்ன சொன்னாலும் அம்மா இணங்கி வர மாட்டாளென்பது கோமளாவுக்குத் தெரிந்த விஷயம்.

"சரி, அம்மா! உன் இஷ்டப்படியே வாங்கு. வீண் கதையெல்லாம் இங்கே எதற்கு?" என்றாள் கடைசியாகக் கோமளா.

செல்லம்மா தனக்குப் பிடித்த அந்த மஞ்சள் புடவையை வாங்கிக் கொண்டு வீடு வந்து சேர்ந்தாள்.

## 2

சந்திரசேகர ஐயர் கும்பகோணத்தில் பிரபலமான வக்கீல். பூர்வீக சொத்தாகக் கொஞ்சம் நிலம், தோட்டம், தோப்புகளெல்லாம் இருந்தன. வக்கீல் தொழிலில் நிறைய வரும்படி கிடைக்கும். சிரமப்பட்டு முன்னுக்கு வந்தவர். ஆஸ்திக வழியில் நம்பிக்கையும் பற்றுதலும் உள்ளவர். அதைப் பேணி வளர்க்க மனமொத்த மனைவியாகச் செல்லம்மா வந்து சேர்ந்தாள்.

ஐயருக்கு அறுபத்திரண்டு வயதாகி விட்டது. இதுவரை அவர் தம் மனைவியைக் கடிந்து பேசியதில்லை. செல்லம்மா அவர் மனமறிந்து பழகுவாள். அலுப்புச் சலிப்பென்பதே அவளுக்குத் தெரியாது. ஐயர் இன்றும் இமைக் கரை தட்டாமல் மிளிரு மிளிருவென்று இருக்கிறாரென்றால், அது அவரது தர்மபத்தினியின் கருத்து நிறைந்த பணிவிடையின் பிரபாவம்தான்!

வெகு நாட்களுக்குப் பிறகு அவர்களுக்குக் குழந்தைகள் பிறந்தன. முதலாகப் பிறந்த பிள்ளை கோபாலன் பம்பாயில் பெரிய உத்தியோகத்திலிருக்கிறான். தன் உறவுக்குள்ளேயே மிருந்த செல்வந்தர் வீட்டுப் பெண் சகுணாவைக் கோபாலனுக்குக் கல்யாணம் செய்து வைத்தார்.

கோபாலனுக்குத் தங்கைகளான கோமளா, கமலா இருவரையும் நல்ல செயலுள்ள இடத்தில் விவாகம் செய்து வைத்தார். இளையவளின் தலைதீபாவளிக்கு இந்த வருஷம் ஐயர் மூத்த பெண்ணையும் வரவழைத்திருந்தார். வீடு கலகலப்பாக இருந்தது.

கோபாலன் சென்ற வருஷம் தலைதீபாவளியைத் தன் மாமனார் வீட்டில் கொண்டாட வர முடியாததால், இவ்வருஷம் சகுணாவையும் அழைத்துக் கொண்டு மாயவரத்திற்கு வந்திருந்தான். மாயவரத்தில் அவன் மாமனாருக்குப் பெரிய செல் மண்டி இருந்தது. தீபாவளிக்கு ஒரு வாரம் முன்புதான் இருவரும் பம்பாயிலிருந்து வந்து சேர்ந்தார்கள். தீபாவளி ஆனவுடன் சகுணாவுக்குப் பூச்சூட்டல் நடத்த

ஏற்பாடாகியிருந்தது. அதை யொட்டிச் செல்லம்மா ஒரு நல்ல புடவையை மட்டும் அனுப்பிவிட்டு, தீபாவளிக்குப் பிறகு நேரிலேயே போய்க் கருணாவை அழைத்துக் கொண்டு வரலாமென்றிருந்தாள். அதற்காகத்தான் கோமளாவோடு ஜவுளிக் கடைக்குப் போய்த் தனக்குப் பிடித்த மஞ்சள் புடவையை வாங்கிக் கொண்டு வந்தாள்.

'புடவை தன்மாதிரி எல்லாருக்குமே பிடித்திருக்க வேண்டுமென்பது அவள் ஆசை. தன் மனத்தில் தோன்றிய கருத்தைச் சொன்னால் யாரும் ஒப்புக் கொள்ளாமலிருக்க மாட்டார்கள் என்ற நம்பிக்கையும் அவளுக்கு இருந்தது. யாருக்குப் பிடித்தாலும் பிடிக்காவிட்டாலும் தன் கணவருக்குப் பிடித்திருந்தால் போதுமென்ற எண்ணம். ஆனால் அவர் என்ன சொல்வாரோ என்ற கவலையும் செல்லம்மாளுக்கு இல்லாமலில்லை. நம்பிக்கையும் சந்தேகமும் அவளைச் சுற்றிச் சுற்றி வந்தன.

3

"புடவை அழகாக, லக்ஷணமாக இருக்கிறது, செல்லம்! ஆனால்......" சந்திர சேகர ஐயர் வாயிலிருந்து மதிப்புரையைக் கேட்டதும் செல்லம்மாவுக்குக் குதூகலம் தாங்க முடியவில்லை. அவரது "ஆனால்" என்பதைக்கூட அவள் கவனிக்கவில்லை!

"கருணாவின் உடம்புக்கு இது ஏற்றதாயிருக்குமோ? அவள் நல்ல சிவப்பாயிற்றே, செல்லம்!"

சந்திர சேகர ஐயரின் அந்த ஆட்சேபக் குரல் செல்லம்மாளைச் சிறிது சோர்வில் ஆழ்த்தியது.

"எல்லாம் உடுத்திக் கொண்டால் பொருத்தமாயிருக்கும். மஞ்சள் பட்டும், குங்குமக் கலரும் சேர்ந்து கிடைக்கணுமே, அம்பாள் பிரசாதம் மாதிரி!"

சற்று அழுத்தமாகவே செல்லம்மாவின் குரல் தொனித்தது.

ஐயர் பதில் பேசவில்லை. இளைய பெண் கமலா வந்து புடவையைப் பார்த்தாள். கலர் மோசம், பட்டு மட்டம், உடை மடிசல், கரை கோரம் இப்படி யெல்லாம் வர்ணித்து, அம்மாவை இடித்துக் காட்டத் தொடங்கினாள் அவள். செல்லம்மா என்ன சமாதானம் சொல்லியும் கமலா ஏற்றுக் கொள்ளவில்லை.

"கருணா மன்னி உன் மாதிரி கர்நாடகமில்லை. படித்தவள், நாகரிகமாய் இருக்கிறவள். நவநாகரிகம் நிறைந்த பம்பாயிலே இந்தப் புடவையை உடுத்திக் கொண்டு போனால், பார்க்கிறவர்கள் எல்லாம் சிரிப்பார்கள். உனக்கு வயசு ஏற ஏறப் பிடிவாதம்தான் வளருகிறது."

கமலா தனது அபிப்பிராயத்தைக் காரசாரமாகச் சொல்லவே, செல்லம்மாவுக்கு அதிகக் குறைவாக இருந்தது.



'கமலா என்றைக்குமே வீண் வாயாடி. அவள் பேச்சுக்கு என்ன ஒரு முறையா, வரையா? அவள் சுபாவமே அப்படி!" என்று தன்னைத் தேற்றிக் கொண்டாள்.

இருந்தாலும் அவள் மனத்தில் நிம்மதி ஏற்படவில்லை. பக்கத்து வீடு, எதிர்வீட்டிலெல்லாம் புடவையைக் கொண்டு போய்க் காண்பித்தாள். எல்லோரும், "புடவை லக்ஷணமாயிருக்கிறது. ஆனால் கருணாவுக்கு ஏற்றதில்லை. அவளுக்கு இது பிடிக்காது" என்று சொன்னார்கள். செல்லம்மாவின் மனம் அல்லல் பட்டது. 'கருணாவுக்கு நிஜமாகவே பிடிக்காமல் போய் விடுமோ? இதை அவள் அலட்சியமாக எங்கேயாவது போட்டு விடுவாளோ? கேட்ட விலைக்கு யாரிடமாவது விற்று விட்டுத் தனக்குப் பிடித்த புடவையாக வாங்கிக்கொண்டு விடுவாளோ? இப்படி அசட்டுத்தனம் பண்ணி விட்டோமே! இந்தப் புடவையைத் திருப்பிக் கடையில் கொடுத்துவிட்டு வேறு புடவைதான் வாங்கி வந்து விடுவோமா?' என்று கூட நினைத்தாள்.

புடவையைப் பார்க்கப் பார்க்க அவள் மனம் திருப்பிக் கொடுக்க இசையவில்லை. 'மஞ்சளும், குங்குமமுமாக இப்படிச் சேர்ந்து எங்கே புடவை கிடைக்கும்? யார் என்ன வேண்டுமானாலும் சொல்லிக் கொள்ளட்டும். கருணாவுக்கு இதைத்தான் அனுப்பப் போகிறேன்' என்று அடுத்த நிமிஷமே உறுதியான தீர்மானத்துக்கு வந்தாள்.

மறுநாள் பார்சலில் புடவையைக் கருணாவின் பேருக்கு அனுப்பினாள். கூடவே ஒரு கடிதமும் எழுதி, அதில், "இந்தப் புடவை உனக்குப் பிடித்திருக்கிறதா? அம்பாள் அனுக்கிரகம் மாதிரி எனக்கு ரொம்பப் பிடித்திருந்தது. வாங்கி விட்டேன். உடனே உன் பதிலை எழுது" என்று மாறி மாறிக் குறிப்பிட்டிருந்தாள் செல்லம்மா.

கருணாவுக்கு இது கட்டாயம் பிடித்திருக்கும் என்ற நம்பிக்கை செல்லம்மாவுக்கு இருந்தது. ஆயினும், கூடவே சிறு சந்தேகமும் ஏற்பட்டது.

கருணாவிடமிருந்து, 'புடவை ரொம்பவும் பிடித்திருக்கிறது' என்று பதில் வரவேண்டுமே என்று அம்மனைப் பிரார்த்தித்துக் கொண்டாள்!

அவளது இரு பெண்களும், "மன்னிக்கு அது பிடிக்கப் போகிறதில்லை. பெட்டிக்கு அடியிலே அது தூங்கப் போகிறது" என்று சொல்லிச் சொல்லி செல்லம்மாவின் சங்கடத்தை மேலும் கிளப்பிவிட்டுக் கொண்டிருந்தார்கள்.

4

ஒரு வாரமாயிற்று. கருணாவிடமிருந்து பதிலே வரவில்லை. செல்லம்

மாவின் மனம் சங்கடப்பட்டது. கோமளாவும் கமலாவும், "நாங்கள் அப்போதே சொல்லவில்லையா, அந்தப் புடவை கருணாவுக்குச் சற்றும் பிடிக்காதென்று! சொன்னால் கேட்டால் தானே?" என்று குத்திக் காட்ட ஆரம்பித்தார்கள்.

தினம் தபால்காரனைப் பார்ப்பதும், ஏமாறுவதுமாகச் செல்லம்மா தவித்துக் கொண்டிருந்தாள். கருணாவுக்குப் பிடிக்காததால் தான் அவள் தன் கடிதத்துக்குப் பதில் போடவில்லை என்ற முடிவுக்கு வந்தாள். தீபாவளி நெருங்கிக் கொண்டிருந்தது. செல்லம்மாவுக்கு ஓய்ச்சல் ஒழிவில்லாமல் வேலைகள் இருந்தன. நடுநடுவே, 'பிடித்தது, பிடிக்கவில்லை என்பதற்கு ஒரு கடிதம் போட்டால் என்னவாம்? இப்படியுமா ஒரு படித்த பெண் இருப்பாள்!' என்று மிகவும் அங்கலாய்த்துக் கொண்டாள்.

ஒரு வாரம் கழித்துக் கருணாவிடமிருந்து கடிதம் வந்தது. செல்லம்மா பரபரப்புடன் அதைப் பிரித்துப் பார்த்தாள்:

"அம்மாவுக்கு, கருணா அநேக நமஸ்காரம். இத்தனை தாமதமாகக் கடிதம் போடுவதற்கு மன்னிக்க வேண்டும். ஒரு வாரம் முந்தி உங்கள் பிள்ளை வெளியே யாரையோ பார்க்கப் போயிருந்தார். திரும்பி வரும் போது நல்ல மழை பிடித்துக் கொண்டு விட்டது. அதில் நன்றாக நனைந்து விட்டார். அது தான் வியாஜம். அன்று ராத்திரியே நல்ல குளிர் ஜுரம். எந்நேரமும் இருந்தது. நான் அம்மாவெல்லாம் நடு நடுங்கிப் போய் விட்டேன். ஒரு நாள் முழுவதும் நல்ல நினைவே இல்லையென்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்! அப்பாவுக்குத் தைரியம்! நான் உங்களுக்குத் தந்தி கொடுக்கலாம் என்று கூடப் பார்த்தேன். அப்பாதான் பிடிவாதமாகத் தடுத்து விட்டார். அம்பாள் சன்னதியிலே போய்க் கதறினேன். அந்தச் சமயத்திலே தபால்காரன் நீங்கள் அனுப்பிய புடவையைக் கொண்டு வந்து கொடுத்தான். மஞ்சள் கலரிலே, குங்குமக் கரை போட்ட அந்தப் புடவை, எனக்கு என்னமோ மங்கலப் பிச்சை கொடுக்க வந்தது போல் இருந்தது. அம்பாள்தான் உங்கள் மூலமாக எனக்கு அபயம் அளித்திருக்கிறாளென்று தோன்றிற்று! அதை வாங்கி அம்பாள் சன்னதியிலே வைத்துக் கை, கால் ஓய்ந்து விழுகிறவரை நமஸ்காரம் பண்ணினேன். கொஞ்ச நாழிகைக்கெல்லாம் அவர் கண்ணைத் திறந்தார்! அன்றிலிருந்தே ஜுரம் இறங்க ஆரம்பித்து விட்டது. இப்போது பூர்ணமாகக் குணமாகி விட்டது. அப்பா மிகவும் கண்டித்துச் சொல்லி விட்டதால் அவர் உடம்பு நன்றாகக் குணமான பிறகு இப்போது எழுதியிருக்கிறேன்.

தீபாவளிக்கு மறுநாள் சமயத்திர ரயிலில் நாங்களிருவரும் அங்கே வந்து சேருகிறோம். அப்பாவிடம் என் நமஸ்காரத்தைச் சொல்லவும். கோமளா, கமலா எல்லோரையும் ரொம்ப விசாரித்ததாகச் சொல்லவும். உங்கள் பிரியமுள்ள

கருணா."



கடிதத்தைப் படித்து முடித்ததும் செல்லம்மாவுக்கு ஆனந்தம் தாங்கவில்லை. எல்லாரிடமும் அதைக் காட்டிக் காட்டிப் பெருமைப் பட்டாள்.

கமலா மட்டும் ஒப்புக் கொள்ளவில்லை. "அம்பாள் சந்நிதியிலே வைத்துப் பூஜை பண்ணத்தான் அந்தப் புடவை லாயக்கு; உடுத்திக் கொள்ள யோக்யதை யில்லை யென்று தானே எழுதியிருக்கிறாள்! இல்லா விட்டால், எனக்குப் பிடித்திருக்கிறதென்று ஒரு வார்த்தை எழுதாமலா இருப்பாள்?" என்று வாதாடினாள்.

செல்லம்மாவுக்கும் அது நியாயமாகத்தான் பட்டது. 'இவ்வளவு எழுதினவள் புடவை பிடித்திருக்கிறது என்று ஏன் எழுதக் கூடாது? பிடிக்கவில்லை போலிருக்கிறது. அதனால்தான் அவள் எழுதவில்லை...' இப்படியெல்லாம் அவள் மனம் சங்கடப்பட்டுக் கொண்டிருந்தது.

தீபாவளி கழிந்து மறு நாள் கோபாலனும் கருணாவும் வருவார்களே, அவர்களிடம் புடவையைப் பற்றி எப்படிக் கேட்பதென்று செல்லம்மாவுக்குக் கவலையாக இருந்தது.

மறுநாள் இரவு இருவரும் வந்து சேர்ந்தார்கள். கோபாலன் அடையாளம் தெரியாமல் இளைத்திருந்தான். அவனைப் பற்றி விசாரிப்பதிலேயே எல்லோரும் லயித்திருந்தார்கள்.

கருணா, செல்லம்மாவைப் பணிவோடு நமஸ்கரித்தாள். "மஞ்சளும், குங்குமமுமாக நீ மங்களமாக வாழவேணும்" என்று செல்லம்மாள் அன்பாக ஆசீர்வதித்தாள்.

"உங்கள் அநுக்ரகம்தான் அம்மா, எங்களைக் காப்பாற்றியது. உங்கள் மனசு போல இப் புடவை எனக்கு ஆதரவாக அமைந்திருக்கிறது. இது எனக்கு ரொம்ப எடுப்பாக அழகாயிருக்கிறது என்று உங்கள் பிள்ளை சொல்லுகிறார். எனக்கும் இதுதான் பிடித்திருக்கிறது" என்று பெருமையும், மகிழ்ச்சியும் பொங்கக் கருணா சொன்னாள்.

செல்லம்மாவும், மற்றவர்களும், அப்போதுதான் கருணாவின் உடலில் அந்த மஞ்சள் புடவை பூரணப் பொலிவோடு பிரகாசிப்பதைப் பார்த்தார்கள்.

செல்லம்மாவுக்கு ஆனந்தம் தாங்கவில்லை. கருணாவை அப்படியே கட்டி அணைத்துக் கொண்டாள்.

"சீமந்தத்துக்கும் இதே மாதிரிப் புடவை வாங்கி விடுங்கள், அம்மா! எனக்கு மட்டுமென்ன? கோமளா, கமலா இரண்டு பேருக்கும் சேர்த்து மஞ்சள்புடவைகளே வாங்கிவிடுங்கள்; இல்லாவிட்டால் பொறாமைப் படுவார்கள்" என்றாள் கருணா. அப்போது அவர்களிடையே எழுந்த சிரிப்பு வெகு நேரம் வரை ஓயவில்லை.

செல்லம்மா கருணாவின் கன்னங்களைத் தடவித் திருஷ்டி கழித்தாள்!

# VISWANATHAN & CO.

DEALERS IN ELECTRICAL GOODS & ENGINEERING CONTRACTORS

103-A, GODOWN STREET - - - MADRAS-1

For

**Erection of Motors, Pump Sets and Oil Engines**
**House Wiring and Studio & Theatre Lighting**
**and for anything in Electricity**

ILLUMINATION A SPECIALITY

Telegrams: "VISCOM" - Post Box 1642 - Telephone: 4044




**சென்னை மாகாண கைத்தறி நெசவாளர் கூட்டுறவு சங்கம் லிமிடெட்**
ஜம்மி கட்டடம் 48-1.ராயப்பேட்டை ஹைரோடு சென்னை-4

# ஆராய்ச்சி சாமியார்

பரதன்



சாமியார்களைக் கண்டால் எனக்குச் சிறு வயது முதல் கொஞ்சமும் பிடிப்பதில்லை. நான் சிறு பையனாக இருக்கும்போது, பால் முதல் விளக்கெண்ணெய் வரையில் எனக்குப் பிடிக்காத பண்டங்களை என்னைச் சாப்பிட வைப்பதற்காக, என் தாயார் தெருவில் நடமாடிக் கொண்டிருந்த ஒரு தாடிச் சாமியாரைக் காட்டிப் பயமுறுத்துவாள். அதிலிருந்து தாடியையும் காஷாயத்தையும் கண்டாலே எனக்கு வெறுப்பும் துவேஷமும் ஏற்பட்டு விட்டன.

எனக்குச் சுய புத்தி வந்த பிறகு கூட இந்தக் காஷாய வெறுப்பு என் மனத்திலிருந்து அகலவில்லை. நான் மாணவனாக இருந்தபோது தாடிகளையும் காஷாயங்களையும் கண்டால் கிண்டல் செய்வேன். பிறகு அறிவு முற்றி, பகுத்தறிவு உண்டான பிறகு, சாமியார்களுக்கு இந்த உலகத்தில் இடமில்லை என்ற தீவிர தத்துவத்தைக் கைக்கொண்டேன். மற்ற எல்லா விஷயங்களிலும் எப்போதும் அஹிம்சா முறையைக் கையாளும் எனக்குச் சாமியார்களைக் கண்டால் மட்டும் பலவிதமான பலாத்கார எண்ணங்கள் உதிக்கலாயின!

போதாக் குறைக்கு, என்னுடைய முதிர்ந்த அனுபவம், பிரத்தியேகப் பகுத்தறிவு, நுண்ணிய புத்தி, பழுத்த ஞானம் இவையெல்லாம் என்னுடைய சாமியார் துவேஷத்துக்குப் பெரிதும் உதவி புரிந்தன. "தாடி ஒழிக", "காவி ஒழிக", "சாமியாரினம் ஒழிக" என்ற கோஷங்களைக் கூட ஒரு சமயம் நான் எழுப்பியதுண்டு (என் மனத்திற் குள்ளேயேதான்). தாடிக்குள் புகுந்து கொண்டிருக்கும் சாமியார்கள், மனித வர்க்கத்துக்கே விரோதிகள் என்றெல்லாம் நான் எண்ணியது உண்டு. க்ஷத்திரியப் பூண்டை அடியோடு ஒழிக்க முற்பட்ட பரசுராமரைப் போல், சாமியார்களை ஒழிப்பதற்குக் கலியுக பரசுராமராக நானே அவதரித்திருப்பதாகக் கூட நான் எண்ணுவதுண்டு.

என் மனம் அவ்விதம் பரிபக்குவ நிலையை அடைந்த சமயத்தில்தான் சொல்லி வைத்தாற்போல் வந்து சேர்ந்தார், அந்த ஸில்க் சாமியார்!

* * *

என் ஆப்த நண்பர் அண்ணுசாமி பெரிய கம்பெனியில் உயர்ந்த உத்தியோகத்தில் இருப்பவர். கெட்டிக்காரர்; படித்தவர்; விஷயமறிந்த விவேகி. இப்படி எல்லாம் இருந்தும் அவரிடம் ஒரு பெரும் குறை என்னவென்றால், அவருக்குச் சாமியார் பைத்தியம் அதிகம் என்பதுதான்.

ஒரு சமயம் அவர் யாரோ ஒரு சாமியாரைக் கொண்டு இல்லாத தடபுடல் எல்லாம் செய்து வந்தார். அந்தச் சாமியார் மற்றவர்களைப் போல் அதிகமாகப் பேசுவதில்லை.

"அப்பனே! ஆத்மா சாந்தி அடைந்ததா?" என்று எதற்கெடுத்தாலும் அந்தச் சாமியார் கேட்பார்.

அவ்வாறு கேட்கப் பட்டவர்கள், "தங்கள் கருணை, ஸ்வாமி!" என்று பதில் சொல்ல வேண்டும்.

இந்தச் சாமியாருக்கு மற்ற சில சாமியார்களைப் போல் நிர்ணயமான ஆகாரம், போஜன வேளை என்று எதுவும் கிடையாது. நினைத்தபோது, "கழுதைப் பால் கொண்டு வா, ஆத்மா சாந்தியடையட்டும்" என்பார்.

நண்பர் அண்ணுசாமி ஊரில் உள்ள வண்ணார்களைத் தாக்கிக் கொண்டு போய்க் கழுதைப் பால் கொண்டு வருவார். மேற்படி சாமியார் சில சமயம் பாதாம் கீரையே சாப்பிடுவார். ஒரு சமயம் ஆப்பிள் 'ஜூஸ்' இல்லாமல் அவர் ஆத்மா "சாந்தி" அடையாது! மற்றொரு சமயம் வீட்டிலேயே சங்கீதக் கச்சேரி வை என்பார். நாட்டில் உள்ள நாதஸ்வர வித்வான்களையெல்லாம் கூப்பிட்டு 'காயனம் படி' என்பார். படி என்றாலும் வாசி என்றாலும் பொருள் ஒன்றுதானே?

இப்படியெல்லாம் 'ஜாட்டி' படுத்தி விட்டு, நண்பர் அண்ணுசாமியைத் திருப்பதிக்குப் போகாமலே முடிப் பிரார்த்தனை நிறைவேறும்படி செய்து விட்டார் அந்தச் சாமியார்! அண்ணுசாமியிடம் ஓர் ஆயிரம் வரையில் தட்டிக் கொண்டு, திடீரென்று ஒரு நாள் அவர் அந்தர்யாமியாகி விட்டார். அந்த அனுபவத்துக்குப் பிறகு கூட,

அன்னுசாமிக்கு மட்டும் அந்தப் பித்து விடவில்லை. அதற்குப் பின்னரும் அன்னுசாமி வீட்டுக்குச் சாமியார்கள் வந்து கொண்டும் போய்க் கொண்டும் இருந்தார்கள்.

"அன்னுசாமி! கடைசியில் நீ காஷாயம் உடுத்திக் கொண்டு வெளியில் கிளம்பும் நிலை வரப் போகிறது! வேண்டாம்" என்று எவ்வளவோ நான் புத்திமதி கூறியும் அது அன்னுசாமியின் காதில் ஏறவில்லை.

"யாரோ ஒரு சாமியார் முறை தவறி நடந்து கொண்டார் என்பதற்காக எல்லாச் சாமியார்களையும் கேவலமாகச் சொல்லிவிடலாமா?" என்று அன்னுசாமி சமாதானம் கூறினார்.

° ° °

எப்போதும் போல் அந்த வருஷத் தீபாவளி யன்றும் கங்கா ஸ்நானம் ஆகி விட்டதா என்று விசாரிப்பதற்காக அன்னுசாமியின் வீட்டுக்குப் போனேன். வழக்கம் போல் அங்கு ஒரு சாமியார் தீபாவளிப் பட்சணங்களை நிதானமாகச் சுவைத்துக் கொண்டு காட்சி யளித்தார்.

எனக்கு வந்த ஆத்திரத்தில், நான் இறுமையைக் கூடக் கவனிக்காமல் திரும்பி விடுவது என்று ஒரு க்ஷணம் நினைத்தேன். பிறகு அந்தச் சாமியாரையும், அன்னுசாமி வீட்டுத் தீபாவளிப் பட்சணத்தையும் சும்மா விடுவதா என்ற ஒரு வைராக்கியம் உண்டாகி விட்டது. அன்று அந்தச் சாமியாருக்கு ஒரு வழி வைத்து விடுவதென்றே தீர்மானித்தேன்.

உள்ளே நுழைந்த நான் சிறிது தயங்கியதைப் பார்த்த அன்னுசாமி என்னை அன்புடன் வரவேற்றார். "ஏன் தயங்குகிறாய்? வா, வா! நல்ல சமயத்தில் வந்தாய்! சுவாமிகள் எழுந்தருளியுள்ள இச்சமயத்தில் நீ இங்கு வந்தது உன் பாக்கியம்தான்" என்றார்.

"ஸாந்த" சாமியாரிடம் ஆயிரம் ரூபாயைப் பறிகொடுத்த அன்னுசாமி, இன்னும் பழைய தோரணையிலேயே பேசியது எனக்குப் பிடிக்கவில்லை. இருந்தாலும் அன்னுசாமி வீட்டுப் பாதாம் அல்வாவை உத்தேசித்து அவருடன் அந்தச் சமயம் சண்டைக்குப்போக நான் விரும்பவில்லை. பாதாம் அல்வா சாப்பிட்ட பிறகு முழுத் தெம்புடன் சாமியாரை—ஏன், அன்னுசாமியைக் கூட—ஒரு கை பார்த்து விடுவது என்று தீர்மானித்தேன். எதிர்பார்த்தபடி பாதாம் அல்வாவுடன் பலரகப் பட்சணங்களும் என் முன் வைக்கப்பட்டன.

சாமியார் என்னைப் பார்த்து, "ஏன்? சாப்பிடலாமே! பட்சணங்கள் வெகு ருசியாக இருக்கின்றன" என்றார்.

அவர் சொன்ன தொனி, பாணி, நடை எல்லாம் என்னைத் தூக்கிவாரிப் போட்டன. அவர் பேசியது வழக்கமான சாமியார் பரிபாஷையே இல்லை; சாமான்ய பாஷைதான் என்பது தெரிந்தது. எனக்கு இருந்த ஆத்திரத்தில் இதுவரை நான் கவனிக்காத இன்னொரு விஷயம் அப்போது எனக்குச் சட்டென்று தென்பட்டது.

இந்தச் சாமியார், மற்ற சாமியார்களைப்போல் இல்லை. இவர் தலையில் அழுக்கு ஜடைகளைக் காணோம். அதற்குமாறாக அவர் நன்கு வாரிவிட்ட நாகரிகக் கிராப்புடன் விளங்கினார். அதிலிருந்து தைல வாசனை கம்மென்று வீசியது. அவரது கண்கள் பிரகாசமாக இருந்தன. ஆரஞ்சுக் கலரில் பளபளப்பான ஸில்க் ஜிப்பா, பட்டு அங்கவஸ்திரம், அரையில் ஜரிகை போட்ட ஸில்க் வேஷ்டி. பூஷிதரான அவரை நான் சாமியார் கோஷ்டியில் சேர்ப்பது எப்படி? ஆகவே, சாப்பிடும்படி எனக்கு அவர் இட்ட கட்டளையை உடனே நிறைவேற்றினேன்.

பாதாம் அல்வா தெம்பும் தைரியமும் கொடுக்கும் என்று நினைத்தேன். ஆனால் அந்த ஸில்க் சாமியார் முகத்தைப் பார்த்தபோது, என் மனோதிட-



மெல்லாம் கரைந்து விட்டது. அவர் கண்களில் ஏதோ ஒரு தனி ஒளி வீசியது. அவர் தொனியில் ஏதோ ஒரு சக்தி இருப்பது போல் தோன்றியது. அவரது பேச்சு எவரையும் மயக்கக் கூடியதாக இருந்தது.

இதற்குக் காரணம் என்ன வென்பது எனக்கே புரியவில்லை. அந்தச் சாமியார் வலையில் சிக்கக் கூடாதென்று நான் எவ்வளவோ முயற்சித்தும், என் முயற்சி பலிக்கவில்லை. அதற்கு மாறாக என்னை அறியாமல் அவரிடம் எனக்கு ஒரு விசுவாசம் பிறந்து விட்டது. ஸில்க் சாமியார் பேச்செல்லாம் சர்வசாதாரண பாஷையில் இருந்தாலும், அவர் ஏதோ புதிய கருத்துக்களை அள்ளிக் கொட்டிக் கொண்டிருந்தார்.

முதலில் பாதாம் அல்வாவை எடுத்துக் கொண்டார். "இந்த அல்வாவில் எவ்வளவு சரக்குகள் சேர்ந்திருக்கின்றன? பாதாம் பருப்பு, சர்க்கரை, நெய், ஏலக்காய், குங்குமப் பூ இவ்வளவும் இந்த ஒரு சிறிய துண்டில் 'எவன் லாக' இருக்கின்றன" என்றார்.

அவர் சொல்வதற்கு முன் இதைப் பற்றி நான் நினைத்ததே இல்லை. ஏதோ பாதாம் அல்வா கொடுத்தால் சாப்பிடுகிறோம்; ருசிப்பாக இருக்கிறது; நாலு ஐந்து துண்டுகள் சாப்பிட்டதும் திகட்டுகிறது; அதற்குக் கூட 'லேவரி' ஓமப்பொடி ஏதாவது வைத்துக் கொண்டோமானால் இன்னும் இரண்டு மூன்று துண்டுகள் உள்ளே தள்ள முடிகிறது. இதற்குமேல் என் யோசனை அந்தப் பாதாம் அல்வாவின் சேர்க்கைப் பொருள் பற்றிய ஆராய்ச்சியில் இறங்கியதில்லை.

'அடே! என்ன முட்டாளாக இருந்து விட்டோம்? இந்தப் பாதாம் அல்வாவில் இவ்வளவு பண்டங்கள் சேருவது நமக்கு இத்தனை நாள் தெரியாமல் போயிற்றே!' என்று ஸில்க் சாமியாரின் ஆராய்ச்சி ஞானத்தை மனத்திற்குள் மெச்சினேன்.

"இவ்வளவு பண்டங்களையும் நாம் வெறுமனே அப்படி அப்படிப் பக்கத்தில் வைத்து விட்டால் அவை தானுகவே பாதாம் அல்வா ஆகிவிடுகிறதா? இல்லை. பாதாம் பருப்புகளை ஊறப் போட்டு அரைக்க வேண்டியிருக்கிறது; அடுப்பில் வைத்துக் கிண்ட வேண்டியிருக்கிறது; சர்க்கரையைத் திட்டமாகப் போட வேண்டியிருக்கிறது; ஏலக்காயைப் பொடி செய்து போட வேண்டியிருக்கிறது; குங்குமப் பூவை இழைத்துப் போட வேண்டியிருக்கிறது; தீ ஒரே நிதானமாக இருக்கும்படி அடுப்பைப் பார்த்துக் கொள்ள வேண்டியிருக்கிறது.

"பிறகு அதைக் கரண்டியால் கிண்ட வேண்டும்; சரியான பதத்தில் இறக்க வேண்டும்; கிண்டுவதற்குக் கரண்டி வேண்டும்; கரண்டியைக் கையாள, வகையும் ஆளும் வேண்டும்; இத்தனைக்கும் ஒரு ஆள் மூலகர்த்தா இல்லாவிட்டால் நம்மால் பாதாம் அல்வா சாப்பிட முடியுமா?" என்று கேட்டார் சாமியார்.

"முடியாது, முடியாது; மூக்காலும் முடியாது!" என்று பலமாகத் தலை யசைத்தேன் நானும்.

"உலகச் சிருஷ்டித் தத்துவமும் இதுதான். நான், நீ, அன்னுசாமி எல்லோரும் சேர்ந்தால்தான் உலகம் — பாதாம் பருப்பு, சர்க்கரை, ஏலக்காய் இவை சேர்ந்து பாதாம் அல்வா ஆவது போல!" என்றார் சாமியார்.

* * *

ஸில்க் சாமியாரின் தத்துவங்கள் கேவலம் பாதாம் அல்வாவுடன் நிற்கவில்லை. மற்றொரு நாள் அவரை எதிர்பாராமல் சந்திக்க நேர்ந்தது.

உடனே அவர், "பார்த்தாயா? நினைத்தேன், நீ வருவாய் என்று! உடனே வந்து விட்டாய்!" என்றார்.

"நான்கூடத் தங்களைத் தரிசித்து நாலு நாளாயிற்றே!" என்றேன்.

"பார்த்தாயா! இதுதான் ஸைகோ பதிக் ப்ரோடோ பிளாஸ்மிக் ஆக்ஷன் என்பது! நாம் எல்லோரும் நடமாடும் அணு குண்டுகள்" என்று அவர் சொன்னதும் எனக்குத் தூக்கி வாரிப் போட்டது. என்றைக்காவது நாம் வெடித்து வைத்தால்......?

"நாமே ஒரு நடமாடும் ரேடியோ ஸ்டேஷன்" என்று மேலே சொன்னார்.

இதைக் கேட்டால் நமது ரேடியோ மந்திரி என்ன சொல்வாரோ? உடனே நம்மையும் ஒரு குலுக்குக் குலுக்கி, நம் மனத்தில் பதிந்திருக்கும் சினிமா சங்கீதத்தை அகற்றி விடக் கூடும் அல்லவா? "நான் இப்போது இங்கு ஒன்று நினைத்தால், அல்லது பேசினால், அது நம்மை அறியாமலே உலகம் பூராவும், பிரபஞ்சம் பூராவும் வியாபிக்கிறது. அது நம்மிடத்தில் உள்ள ஒரு பரப்புச் சக்தி. அணுக்களில் உண்டாவது போல் சங்கிலித் தொடர்ச் சலனத்தை (செயின் ரீ ஆக்ஷன்) உண்டு பண்ணுகிறது. இந்த செயின் ரீ-ஆக்ஷனுடைய இயக்கத்தால் எங்காவது இதை ஆகர்ஷிக்கும் சக்தி இருந்தால், அது உடனே இழுத்துக்கொள்கிறது" என்று விவரித்தார்.

என் மூளையில் அது ஒரு செயின் ரீ ஆக்ஷனைக் கிளப்பி விட்டுக் குழப்பத்தை உண்டுபண்ணிற்று.

மேலும் தொடர்ந்து பேசினார் ஸில்க் சாமியார்:

"நாம் எல்லாம் ஓர் எலெக்ட்ரிக் பல்பு போலத்தான்! மின்சாரத்தை வாங்கி ஒளி உண்டு பண்ணுகிறது பல்பு. நாம் அதே மாதிரி ஒரு சக்தியினால் நம்முடைய 'பேர்ஸனாலிடி'யை ஒளி வீசச் செய்கிறோம்."

இதைக் கேட்டதும் எனக்கு உள்ளுக்குள் ஒரு கதகதப்பும், வெப்பமும் உண்டாயின. 'அடே! நாமும் ஒரு எலெக்ட்ரிக் பல்பு போலத்தானா?' என்று நினைக்கவே எனக்கு அதிசய 'ஷாக்' அடித்தது.

ஸில்க் சாமியார் இப்படி அரிய வேதாந்த, பௌதிக, ரஸாயன, விஞ்ஞான தத்துவங்களை, சாதாரண துடைப்பக் கட்டை முதல், 'வாக்குவம் க்ளீனர்' வரையில் நமக்குத் தெரிந்த வஸ்துக்களைக் கொண்டு விளக்கி வந்தார். ஒவ்வொரு முறையும், அவர்மீதிருந்த மதிப்பு எனக்கு ஏறிக் கொண்டே போய் உச்ச நிலையை அடைந்தது.

இறுதியாகச் சாமியார் பக்தியில் நான் அனுமாருக்கு ஒரு படி மேலே போய்விட்டேன்.

* * *

ஸில்க் சாமியார் ஒரு நாள், தம்முடைய தத்துவ விளக்கத்தின்போது, ஒரு அபூர்வ தங்க விக்கிரகத்தை எடுத்துக் காட்டினார். அதில் நவரத்தினங்கள் பதிக்கப் பட்டு ஜொலித்தன. முக்கியமாக வைரமும் வைடூரியமும் கண்ணைப் பறித்தன. அந்த விக்கிரகத்தை வைத்துக் கொண்டு, உலக சமாதான நிலைமை, கொரியா போர், அமெரிக்க ஜனாதிபதி தேர்தல், நமது நாட்டு உணவு நிலை, ரேஷன் நிலை, பருவ மழை முதலியவற்றின் ரகசியங்களைப் பளிச்சென்று விளக்கிச் சொன்னார்.

மற்றொரு சமயம் அதே போல் ஒரு விக்கிரகத்தை—அல்லது அதே விக்கிரகந்தானோ என்னவோ — கொண்டு வந்தார். அதில் முன்னிருந்த ரத்னங்கள் இல்லை. வேறு நல் முத்துக்களும், பவழங்களும், வைரங்களும் காணப் பட்டன. அதை வைத்துக் கொண்டு, பூமிக்கும் ஆகாயத்துக்குமாக வேதாந்தத்தில் எங்களைப் பறக்க வைத்தார். இப்படி வெவ்வேறு சமயங்களில் புதிது புதிதாக விக்கிரகங்களைப் புதைய லெடுத்தது போல் கொண்டு வந்து எங்களுக்குப் பல உண்மைகளைப் புகட்டினார். இம்மாதிரிச் சந்தர்ப்பங்களில் ஒன்றில் தான் 'ஸில்க் சாமி



யார் வேதாந்தத்தை மட்டும் தமது தொழிலாக வைத்துக் கொள்ளவில்லை; அவருக்கு ஏராளமான காப்பி, தேயிலைத் தோட்டங்கள் மலைப் பிரதேசத்தில் இருக்கின்றன' என்பதையும் அறிந்து கொண்டேன்.

இதைத் தவிர அடிக்கடி அவர் பம்பாய், டில்லி, கல்கத்தா முதலிய இடங்களுக்கும் போய் வந்தார். ஒரு சமயம் நமது ராஷ்டிரபதியே அவரை டில்லிக்கு வரச் சொல்லி அழைத்ததாகச் சொன்னார். அழைப்பு சாதாரண போஸ்டு, ஏர் மெயில், தந்தி இவற்றின் மூலம் வருவதில்லை. அவர் பேசிக் கொண்டிருக்கும்போது திடீரென்று மனத் தந்தியில் வரும். உடனே புறப்பட்டு விடுவார்.

* * *

ஸில்க் சாமியாருக்கு மேல் நாடுகளிலும் பல சிஷ்யர்கள் இருப்பதாகத் தெரிந்தது. அடிக்கடி ரங்கூன், சிங்கப்பூர், டோக்கியோ, நியூயார்க், டிம்பக்டூ முதலிய இடங்களிலிருந்து அவருக்கு அவசர அழைப்புகள் வருவதாகக் கூட அவர் கூறினார்.

ஒரு சந்தர்ப்பத்தில் இம்மாதிரி எங்கிருந்தோ ஓர் அழைப்பு வந்ததாகச் சொல்லிப் பம்பாய்க்கு ஏரோப்ளேனில் ஏறிப் போனார். அதற்கு அப்புறம் அவரைப் பற்றிய தகவலே எதுவும் தெரியவில்லை. எங்கு மாயமாக மறைந்தாரோ, ஏரோப்ளேனிலிருந்தே காற்றோடு காற்றாகப் போனாரோ, தெரியாது. அவரைப் பற்றி நான் மிகவும் கவலைப் பட்டுக் கொண்டிருந்தேன். அவருடைய அரிய பெரிய அற்புதத் தத்துவ உபதேசங்களில்லாமல் வாடிக் கொண்டிருந்தேன்.

இப்படி இருக்கும்பொழுது தான் ஒரு நாள் ஒரு ஆஸாமி என்னிடம் வந்தார். ஏதேதோ பேசிவிட்டு, ஸில்க் சாமியாரைப் பற்றிப் பேச்செடுத்தார். நான் அவரைப் பிரமாதமாகத் துதி செய்து பேசினேன்.

வந்த ஆஸாமி, "ஸில்க் சாமியார் விக்கிரகஆராதனை செய்வதுண்டோ?" என்று வினவினார்.

"அதெப்படி இவருக்குத் தெரியும்?" என்று எண்ணினேன். ஸில்க் சாமியார் எங்களிடம் பற்பல விக்கிரகங்களைக் கொண்டு வந்து காட்டி, எங்களைத் தத்துவ வெள்ளத்தில் திணறடித்ததை விவரித்தேன். அந்த விக்கிரகங்களைப் பற்றி வர்ணிக்கச் சொன்னார். கூடியவரை வர்ணித்தேன். பிறகு "இதெல்லாம் எதற்காகக் கேட்கிறீர்கள்? நீங்கள் யார்?" என்று கேட்டு வைத்தேன்.

"நானா? நான் ஸி. ஐ. டி. ஸ்பெஷல் பிராஞ்ச் ஆஸாமி! உங்களுக்குத் தெரியாதா? சமீபத்தில் ஏராளமான வைரங்களும் ரத்னங்களும் இந்தியாவுக்குள் கள்ளத்தனமாகக் கொண்டு வரப்பட்டிருக்கின்றன. சென்ற மூன்று மாதத்தில் ஐந்து கோடி ரூபாய் மதிப்புள்ள விலையுயர்ந்த வைரங்களும் மணிகளும் வந்திருக்கின்றன. இவற்றிற்குச் சுங்க வரி கொடுக்காமலே திருட்டுத்தனமாகக் கொண்டுவந்திருக்கிறார்கள். உலகமெங்கும் இந்தக் கள்ள வியாபாரத்தை நடத்தும் ஒரு பெரிய கோஷ்டி எல்லா நாடுகளிலும் ஆள் வைத்து வேலை செய்கிறது. நீங்கள் போற்றும் சாமியார் அந்தக் கோஷ்டியைச் சேர்ந்தவர். அவர் இந்த விக்கிரகங்களை வைத்துக் கொண்டே அவற்றில் வைரங்கள் முதலியவைகளைப் பதுக்கி ஏராளமாகக் கொண்டு வந்து சேர்த்திருக்கிறார். அவரைத்தான் இப்போது தேடுகிறோம்" என்றார் அந்த ஆஸாமி.

அவ்வளவுதான். அவர் மேலும் ஏதோ சொல்லுவதற்குள் நான் அப்படியே மூர்ச்சை யடைந்து விட்டேன்.


ஸ்ரீ ராஜ ராஜேஸ்வரி பில்ம் கம்பெனியின்
ஏழை உழவன்
டைரக்ஷன் - கே. பி. நாகபூஷணம்
அஞ்சலி தேவி.... கண்ணாம்பா
ஸ்ரீ ராமமூர்த்தி. ரேலங்கி நடித்தது

# தீபாவளியின் போது ஞாபகமிருக்கட்டும்

உங்கள் **பழைய** ரேடியோ செட்டுக்கு

# ரூ. 65/-

லிருந்து

# 300/- வரை

பெறுங்கள்

எந்த மாடலுக்கும்

எந்த தயாரிப்புக்கும்




விபரங்களுக்கு உங்கள் அருகிலுள்ள அதிகாரம் பெற்ற

**பிலிப்ஸ்**

டீலரிடம் கேளுங்கள்.

## பாப்பா மலர்

## கதம்ப வெடி





கிட்டு:- எதற்கும் பந்தயம் கட்டும் கெட்ட வழக்கத்தை விட்டு விடப் போகிறேன்!
பட்டு:- உன்னால் முடியவே முடியாது.
கிட்டு:- என்ன பந்தயம் கட்டுகிறாய்?

வந்தவர்:- உன் அப்பா எப்பொழுது வருவார்? அவருக்காகக் காத்திருந்து காத்திருந்து கால் வலி எடுத்து விட்டது.
பையன்:- உங்கள் சிரமத்தைத் தானே பார்க்கிறீர்? உங்களுக்காக ஒளிந்திருந்து ஒளிந்திருந்து அப்பாவுக்கு மூச்சுத் திணறிக் கொண்டிருக்கிறதே!





வாத்தியார்:- எல்லாவற்றையும் கரைக்கக் கூடிய திராவகம் எது?
பையன்:- அது தொண்டையில் இருக்கிறது, ஸார்!....
வாத்தியார்:- ஐயையோ, அது அக்னித் திராவகம் டா! வெளியிலே கொண்டு வந்து விடு!

"கிட்டு! அந்த மந்தையில் எவ்வளவு ஆடுகள் இருக்கின்றன? சொல் பார்க்கலாம்!"
"மூன்னூறு ஆடுகள் இருக்கின்றன."
"பேஷ்! இவ்வளவு சுருக்க எப்படிடா சொன்னாய்?"
"எல்லா ஆடுகளின் கால்களையும் கூட்டி நாலால் வகுத்து விட்டேன்!"




பாட்டி:- கயிறை அறுப்பதற்காகவா இவ்வளவு சிரமப் படுகிறீர்கள்? கத்தியாலே நிமிஷத்தில் அறுத்து விடலாமே!




சாதாரண நாட்களில் அந்தப் பஸ்ஸில் அதிகக் கூட்டம் கூடுவதில்லை. மெதுவாகப் போகும் ஆமை, நத்தைகள் போன்ற ஜந்துக்கள்தான் அதிகமாக அதில் பிரயாணம் செய்யும். மறுநாள் தீபாவளி யாதலால் பெரிய காட்டுக்கும் சின்னக் காட்டுக்கும் இடையே பஸ் போய் வந்துகொண்டேயிருந்தது.

அந்தப் பஸ்ஸிலே ஒரே சமயத்தில் மூவாயிரம் எறும்புகள் ஏறினாலும் பஸ்ஸில் கூட்டம் இருப்பதாகத் தெரியாது; சில சமயத்தில் மூன்று யானைகள் மாத்திரம் ஏறிப் பஸ்ஸை நிரப்பி விடுவதும் உண்டு.

அன்று 'இதுதான் கடைசி பஸ்' என்று கண்டக்டர் குரங்கு கத்திக் கொண்டிருந்தது. அன்று தீபாவளிக்கு முதல் நாள் இரவு ஆனதால், பெரிய காட்டிலிருந்து சாமான்களை வாங்கிக் கொண்டு சின்னக் காட்டுக்கு அவசரமாகச் செல்வதற்குப் பல மிருகங்கள் போட்டி போட்டுக் கொண்டு ஏற ஆரம்பித்தன.

"உட்காரும் இடம் நிறைந்து விட்டது. இனிமேல் நிற்கத்தான் வேண்டும்" என்று கண்டக்டர் குரங்கு ஒரு கொக்கைப் பார்த்துச் சொல்லவே, கொக்குக்கு மூக்குக்கு மேல் கோபம் வந்து விட்டது. உடனே அது, தன் வாயில் கவ்விக் கொண்டிருந்த வாணங்களின் மூட்டையைக் கீழே வைத்து விட்டு, "என்ன குரங்காரே, என்னைப் பரிகாசம் பண்ணுகிறீர்களா? என்னால் உட்கார முடியாது என்றுதானே அப்படிச் சொல்லுகிறீர்?" என்று சொல்லிக்கொண்டே பஸ்ஸில் ஏறிக் கொண்டது.

"உங்களுக்கு உள்ளே இடமில்லை" என்று கூறி ஒட்டைச் சிவிங்கியையும், ஒட்டகத்தையும் கண்டக்டர் குரங்கு திருப்பி அனுப்பி விட்டது.



அப்பொழுது வெகு அவசரமாக ஒரு முள்ளம் பன்றி தன் இரண்டு குழந்தைகளுடன் பஸ்ஸில் ஏறிற்று. அவ்வளவுதான்! உடனே பஸ்ஸில் ஒரு பரபரப்பு ஏற்பட்டது.

கடைசி சீட்டில் உட்கார்ந்திருந்த மான், நாய், நரி இவைகள் துள்ளி எழுந்து இடம் கொடுக்கவே, முள்ளம்பன்றி தன் இரு குழந்தைகளுடன் சௌகரியமாக அந்த இடத்தில் உட்கார்ந்தது. முள்ளம் பன்றிக்குப் பக்கத்தில் உட்கார்ந்திருந்த காண்டா மிருகம் மாத்திரம் முள்ளம் பன்றியைச் சிறிதும் லட்சியம் செய்யாமல் அதன் பக்கத்தில் இன்னும் நெருங்கி உட்கார்ந்தது.

பஸ் புறப்படும் சமயத்தில், ஒரு காட்டுப் பூனை ஒரே தாவாகத்தாவி பஸ்ஸில் நுழைந்தது. அதைப் பார்த்ததும், உள்ளே உட்கார்ந்திருந்த ஓர் எலி ஜன்னல் இடுக்கு வழியாக ஒரே தாண்டலாகத் தாண்டி வெளியே ஓடி விட்டது.

பஸ் புறப்பட்டது. அப்போது "யானையானாலும் சரி, பூனையானாலும் சரி, ஒரே கட்டணம்தான்" என்று சொல்லிக் கொண்டே கண்டக்டர் குரங்கு ஒவ்வொரு பிரயாணியிடமிருந்தும் டிக்கட் பணம் வசூலிக்கத் தொடங்கியது.

"எங்கே உன் டிக்கட்?" என்று குறுக்கே ஓடி வந்த ஓர் எறும்பைக் குரங்கு கேட்க, "எனக்கு டிக்கட் கிடையாது. நான் பஸ்ஸில் வரவில்லை. நான் இருந்த இடத்துக்கே போய் விடுகிறேன்" என்று கூறிக் கொண்டே எறும்பு ஒரு கரடியின் தேன் புட்டிக்குள் நுழைந்து விட்டது.

கண்டக்டர் குரங்கு மிகவும் கெட்டிக்காரக் குரங்குதான். ஆனால் அதன் பாச்சா பஸ்ஸின் மீது உட்கார்ந்து சவாரி செய்யும் பறவைகளிடம் மாத்திரம் பலிக்கவில்லை. குரங்கு பஸ்ஸின் மேலே வருவதைப் பார்த்ததும், பறவைகள் பறந்தோடி விடும்.

கண்டக்டர் குரங்கு 'ரைட்' கொடுத்ததும் பஸ் புறப்பட்டுக் காட்டுப் பாதையில் கொஞ்ச தூரம் சென்று ஒரு அரச மரத்தடியில் நின்றது. சில மிருகங்கள் அங்கே இறங்கின. பஸ்ஸில் இடம் கொஞ்சம் காலியாயிற்று. அந்தக் காலி இடத்துக்கு ஆறு நெருப்புக் கோழிகள் போட்டி



போட்டுக்கொண்டு ஏறின. உடனே குரங்கு 'ரைட்' கொடுத்தது. பஸ்ஸும் நகர்ந்தது.

சிறிது நேரத்துக்கெல்லாம் பஸ் சின்னக் காட்டை நெருங்க ஆரம்பித்தது. பிரயாணிகள் இறங்குவதற்குத் தயாராயினர். அப்பொழுது "எங்கே, என் மூட்டையிலிருந்த வெடிகளும் வாணங்களும்?" என்று பயங்கரமாகக் கத்திற்று முன்னம் பன்றி.

"என் கூடையிலிருந்த வெடிகளையும் வாணங்களையும் காணவில்லையே!" என்று கோபத்துடன் பிளிறிட்ட ஒரு யானை, தன் துதிக்கையிலுள்ள கூடையை இப்படியும் அப்படியுமாக ஆட்டிற்று.

சின்னக் காட்டை அடைந்தவுடன், கண்டக்டர் குரங்கு, "பஸ்ஸிலிருந்த ஒருவரும் வீட்டுக்குப் போகக் கூடாது. இந்தத் திருட்டை இப்பொழுதே கண்டு பிடித்தாக வேண்டும். நான் போலீசுக்குச் சொல்லி அனுப்புகிறேன்" என்று கூறியது.

வெகு நேரம் கழித்துப் போலீஸ் இன்ஸ்பெக்டர் கரடி அங்கு வந்து சேர்ந்தது. அது ஒவ்வொரு மிருகமாகப் பரிசோதித்துக் கொண்டு வந்தது. அச்சமயத்தில் பக்கத்திலிருந்த கரி பஸ்ஸிலிருந்து ஓர் நெருப்புத் தணல் கீழே விழவே, அருகிலிருந்த ஒரு நெருப்புக் கோழி அதை 'லபக்' என்று விழுங்கி விட்டது. அவ்வளவுதான்! அடுத்த நிமிஷம் அதன் வாயிலிருந்து கம்பி மத்தாப்பு கொளுத்தியது போல் வெளிச்சம் வரத் தொடங்கியது. "உடனே இதோ ஒரு திருடன் அகப்பட்டான்" என்று போலீஸ் இன்ஸ்பெக்டர் கரடி நெருப்புக் கோழியைக் கைப் பிடியாகப் பிடித்துக் கொண்டது.

தனது அசட்டுத் தனத்தால் வெளி வந்த திருட்டை மறைக்க முடியாமல் நின்ற நெருப்புக் கோழிக்கு உடல் நடுங்கியது. "நான் மாத்திரம் வாணங்களையும் வெடிகளையும் தின்னவில்லை; நிற்கும் என் சிநேகிதர்களாகிய இந்த ஐந்து நெருப்புக் கோழிகளும் கூடத் தின்றன" என்று சொல்லவே, நெருப்புக் கோழிகள் தவிர மற்ற மிருகங்களெல்லாம் அவ்விடத்தை விட்டுப் போக அனுமதிக்கப் பட்டன. அங்கிருந்து புறப்பட்ட மிருகங்கள் யாவும் ஒரே ஓட்டமாக ஓடிப் பக்கத்தில் இருந்த நரியாரின் பட்டாசுக் கடைக்குச் சென்றன. ஒன்றுக்கு இரண்டாக விலையைக் கொடுத்து வாணங்களையும் வெடிகளையும் வாங்கின. அதனால் சில நிமிஷங்களில் நரியாரின் கடையிலுள்ள வாணங்களெல்லாம் காலியாகி விட்டன.

மிரட்டிய போலீஸ் இன்ஸ்பெக்டர் கரடியாரிடம் ஆறு நெருப்புக் கோழிகளும், "ஐயா, எங்களை ஒன்றும் செய்யாதீர்கள். அதோ வாணக் கடை வைத்திருக்கும் நரிதான் தன் கடையில் வியாபாரம் ஆக வேண்டும் என்பதற்காக எங்களுக்கு ஆசை வார்த்தைகள் கூறி எங்களைப் பஸ்ஸில் பிரயாணம் செய்யச் சொல்லி, வெடிகளையும் வாணங்களையும் தின்னும்படி செய்தது" என்றன.

இதைக் கேட்டதும் "எங்கே அந்த நரி?" என்று கரடி ஓடிச் சென்று பார்க்கவே, கடை காலியாக இருந்தது. காலியான கடையில் நரிக்கு என்ன வேலை? அது தன் கடையைக் கட்டிக் கொண்டு ஓடி மறைந்து விட்டது!

* * * *

"ஆடையடி பஸ்ஸும் வந்து விட்டது. இன்னும் மாப்பிள்ளையைக் காண வில்லையே!" என்றது கரடியின் மனைவி.

"நமக்கு வாய்த்த மாப்பிள்ளையோ கோபக்கார மாப்பிள்ளை. வாசலில் வந்து கூட உள்ளே வருவதற்கு யோசிப்பார்" என்று போலீஸ் இன்ஸ்பெக்டர் கரடி பதில் சொல்லிற்று. "உங்கள் வாயில் தேனைத்தான் கொட்டவேண்டும், அதோ பாருங்கள்! உள்ளே வருவதற்கு யோசித்துக் கொண்டே மாப்பிள்ளை வெளியே நிற்கிறார்" என்று கரடியாரின் மனைவி சொல்லிற்று. உடனே, "வாருங்கள் மாப்பிள்ளை!" என்று சொல்லிக் கொண்டே இன்ஸ்பெக்டர் கரடி, மாப்பிள்ளைக் கரடியை உள்ளே அழைத்து வந்தது. மாப்பிள்ளைக் கரடி என்ன பேசினாலும் அதைக் கேட்கவேயில்லை. உள்ளே அதற்கு என்று போடப் பட்டிருந்த மணையில் இன்ஸ்பெக்டர் கரடி உட்கார வைத்தது. பக்கத்தில் பெண் கரடியும் உட்கார்ந்தது. அங்கிருந்த கரடிக் குட்டிகளும் இதையெல்லாம் வேடிக்கை பார்த்தன.

"எனக்கு உடம்பு சரியாக இல்லை. என் அம்மா என்னை எண்ணெய் தேய்த்துக்கொள்ள வேண்டாம் என்று சொல்லி இருக்கிறாள்" என்று மாப்







பிள்ளைக் கரடி சொல்லியும் கரடியின் மனைவி கேட்கவில்லை. "மாப்பிள்ளை! நீங்கள் அப்படிச் சொல்லக் கூடாது. எண்ணெய் தேய்த்துக் கொண்டுதான் ஆக வேண்டும்" என்று பிடிவாதம் செய்தது.

எண்ணெய் ஸ்நானம் முடிந்தது. உடனே கரடியின் மனைவி, "புது வஸ்திரங்களைக் கட்டிக் கொள்ளுவதற்கு மாப்பிள்ளையைக் காணவில்லையே!" என்று கூறவே, "மாப்பிள்ளையை எங்கே காணோம்?" என்று கேட்டுக் கொண்டே இன்ஸ்பெக்டர் கரடி வாசலில் எட்டிப் பார்த்தது.

"இதோ மாப்பிள்ளை வந்து விட்டேனே!" என்று நிஜ மாப்பிள்ளை. அதன் மைத்துனர்களுக்கு நிறைய வாணங்களையும் வெடிகளையும் வாங்கிக் கொண்டு உள்ளே நுழைந்தது.

கையில் பெரிய மூட்டையுடன் அப்பொழுது தான் உள்ளே நுழைந்த மாப்பிள்ளைக் கரடியைப் பார்த்தவுடன் இன்ஸ்பெக்டர் கரடிக்கும் மனைவிக் கரடிக்கும் ஒரே அதிசயமாய்ப் போய்விட்டது. 'மாப்பிள்ளை இப்பொழுதுதான் ஊரிலிருந்து வருகிறார்! அப்படியானால் இத்தனை நேரம் இங்கிருந்த கரடி, மாப்பிள்ளை இல்லையா?' என்று தனக்குத்தானே சொல்லிக் கொண்டது இன்ஸ்பெக்டர் கரடி.

"போதும்! அவருக்குத் தெரியப் போகிறது. எனக்கு அப்போதே சந்தேகம். நாம் முதலில் உபசரித்த கரடி, மாப்பிள்ளைக் கரடி மாதிரியே இல்லை" என்றது பெண் கரடி.

"உஸ்! வாயைத் திறக்காதே! மாப்பிள்ளைக்குத் தெரிந்து விட்டால் அவமானம்" என்றது போலீஸ் இன்ஸ்பெக்டர் கரடி.

"பஸ்ஸிலிருந்து மாப்பிள்ளை தாமதமாக வந்ததினால் அல்லவா இப்படி நமக்கு அவமானம் நேரிட்டது? அதற்குக் காரணமாயிருந்த அந்தத் திருட்டு நரியை என்ன பண்ணுகிறேன், பார்!" என்று கோபத்துடன் சொல்லிக் கொண்டே போலீஸ் இன்ஸ்பெக்டர் கரடி வெளியே கிளம்பிற்று.

நரியின் தோழர்களான ஆறு நெருப்புக் கோழிகளுக்கு நரி இருக்குமிடம் தெரியும் அல்லவா? அவைகள் அங்கு சென்று, "நரியாரே! நீங்கள் பேசியபடி எங்கள் கூலியைத் தாருங்கள்" என்று கேட்டன.

நரி பொல்லாத நரி. "நீங்கள் வயிறார வாணங்களையும் வெடிகளையும் தின்றீர்களே, அது போதாதா? அதற்கு மேல் கூலி வேறு வேண்டுமா?" என்று கூறி அது நகைத்தது.

இதைக் கேட்டதும் நெருப்புக் கோழிகளுக்குக் கோபம் வந்தது. உடனே அவைகள் நெருப்பைக் கக்கின. "இதோ எங்களுடைய தோழர்களின் உதவியால் உங்களை என்ன பண்ணுகிறோம், பாருங்கள்" என்று கூறி விட்டுக் கோபத்துடன் அங்கிருந்து புறப்பட்டன.

அடுத்த நிமிஷத்தில், உள்ளே படுத்திருந்த மாப்பிள்ளை நரி, "என் உடம்பெல்லாம் முள் குத்துகிறதே! படுத்துக்கொள்ள முடியவில்லையே!" என்று கத்திற்று. உள்ளே சென்று பார்த்தால் ஐந்தாறு முள்ளம் பன்றிகள் சுற்றிச் சுற்றி வந்து கொண்டிருந்தன. "மாப்பிள்ளைக்கு வைத்திருந்த ஜரிகை வேஷ்டிகளில் பல துவாரங்கள் இருக்கின்றனவே!" என்று நரியாரின் மனைவி சொல்லிக் கொண்டிருக்கும் பொழுது, அந்த வேஷ்டியைக் கடித்த எலிகள் ஓடி மறைந்தன. மாப்பிள்ளை நரியின் பக்ஷணத் தட்டிலே ஒரு நெருப்புக்கோழி தெரியாமல் ஒரு வெங்காய வெடியைப் போட, அதை ஒரு லட்டு என்று மாப்பிள்ளை நரி கடிக்க, டமால் என்ற பலத்த சப்தத்துடன் அது கீழே விழுந்தது.

அப்பொழுது, "நரியாரே, வெளியே வாருங்கள்!" என்று பலத்த கூக்குரல் கேட்டது. நரியின் வீட்டுக்கு வெளியில், பஸ்ஸில் பிரயாணம் செய்த எல்லா மிருகங்களும் அதன் வீட்டைச் சூழ்ந்து கொண்டன. நடுங்கிக் கொண்டே வெளியே வந்த நரியை அங்கு வந்திருந்த யானை தன் துதிக்கையினால் தூக்கி இன்ஸ்பெக்டர் கரடியிடம் ஒப்புவித்தது. நரியின் முன் கால்களில் விலங்கிடப் பட்டது. அதைப் பார்த்த மாப்பிள்ளை நரி, லட்டு என்று வெங்காய வெடியைக் கடித்ததால் தன் வாயில் உண்டான காயத்தைக் கூட லக்ஷியம் செய்யாமல், தன் மனைவியை அழைத்துக் கொண்டு, "இந்த மாமனாரின் சம்பந்தமே வேண்டாம்" என்று கூறிப் பின் பக்கமாகக் குதித்து ஓடி விட்டது.








இனிது! இனிது!!
அமிழ்தினிது!!!
அமிழ்தினுமினிது!!!!

ஸ்டார் புகையிலை

மீ.ந.அ.செ. & சன்ஸ்,
புதுக்கோட்டை.






by. V.V.Natarajan






காலை நேரத்தை வரவேற்க, வழக்கப் படி கடற்கரைக்குப் போனேன். முருகக் கடவுளின் மயில் தோகை போல் அருணோதயத்தின் கதிர்த் தோகைகள் வானெங்கும் நீண்டு பரவி, நீல விதானத் திலே வெண்கோலம் போட்டு விளையாடிக் கொண்டிருந்தன. சூரிய நமஸ்காரம் செய்ய ஆயத்தமானேன்.

அப்போது சிறிது தூரத்தில் ஒரு படகின் பக்கத்திலிருந்து முனகல் சத்தம் கேட்டது. 'என்னடா இது! காலையில் எவனோ ஒருவன் சலித்துக் கொள்கிறானே! என்ன சங்கடமோ, பார்ப்போம்!' என்றெண்ணிப் படகின் பக்கமாகச் சென்றேன். அங்கே ஒரு மனிதர் உட்கார்ந்திருந்தார். அவரை நோக்கி "ஐயா, நீர் யார்?" என்று கேட்டேன்.

அவர் கொஞ்சம் கூடத் தயங்காமல், "நான் ஒரு படுபாவி, ஸார்!" என்றார்.

"என்ன ஐயா இது! உம்மை நீரே கோபித்துக் கொள்ளுகிறீரே! என்ன விஷயம்! ஏன் இப்படி உட்கார்ந்திருக்கிறீர்!" என்று கேட்டேன்.

அவர் ஒரு முறை கனைத்துக் கொண்டு, "எவன் தன்னைத்தானே கோபித்துத் தனக்குத் தானே தண்டனை விதித்துக் கொள்கிறானோ, அவன்தான் ஐயா, மனிதன்! ஒருவன் தன்னைத்தானே கோபித்துக் கொள்ளும் சமயத்தில், ஒரு வேதாந்தி ஆகிவிடுகிறான். அதாவது நிர்க்குணத்திற்குத் தயாராகி விடுகிறான்" என்று உறுதியான குரலில் ஒருவருக்கும் இலேசில் புரியாத பீடிகை ஒன்றைத் தூக்கி போட்டார்.

"ஏய் ஐயா! இவ்வளவு ஒழுங்காகப் பேசும் நீர், ஏன் தனிமையில் சலித்துக் கொண்டு இப்படி சமுத்திரத்தோடு பேசிக் கொண்டிருக்கிறீர்! ஒருவேளை நீர் இயற்கையோடு பேசும் ஒரு எழுத்தாளரோ!" என்று கேட்டேன் சந்தேகத்துடன்.

"இல்லை, இல்லை. ஒரு நல்ல எழுத்தாளரைக் கொன்ற கொலைபாதகன் நான்" என்று பெருமூச்சு விட்டுக் கொண்டே பதில் அளித்தார் அந்த மனிதர்.

"ஏன் ஐயா! போயும் போயும் ஒரு எழுத்தாளரையா கொன்றீர்! அவர் தாமாகவே செத்துப் போகும் ஜீவப் பிராணி ஆயிற்றே!" என்றேன் அனுதாபத்துடன்.

"ஆமாம், ஆமாம். நீர் சொல்வது முழுவதும் உண்மை. அந்த எழுத்தாளரை என் கையால் கொல்லவில்லை. எல்லாக் கவிகளையும் போல, அவராகத்தான் காலமானார். ஆனால் அவர் இறப்பதற்கு நான்தான் காரணமாக இருந்தேன். எழுத்தாளர் மட்டும் அல்ல. இன்னும்......" என்று மேலும் இழுத்தார்.

"என்ன ஐயா! 'எழுத்தாளர் மட்டும் அல்ல. இன்னும்...' என்று இழுக்கிறீரே! இன்னும் யார் யாரை ஐயா கொன்றீர்!" என்று பயத்துடன் கேட்டேன்.

"சொல்லுகிறேன், ஸார்! எழுத்தாளர், டைரக்டர், கதாநாயகன் இந்த மூன்று பேர் மரணத்துக்குமே நான்தான் முக்கியமான காரண பூதனாக இருந்தேன்" என்று அங்கலாய்த்தார் அந்த மனிதர்.

'ஏதேது! ஆசாமி பேசும் 'ஸ்டைலை'ப் பார்த்தால் சினிமா பாஷையாக இருக்கிறதே!' என்று உற்சாகம் அடைந்தேன்.

"எழுத்தாளர், டைரக்டர், கதாநாயகன் மூன்று பேரும் இறந்தால் கதாநாயகியும் 'புரொட்யூஸரு'ம் கூட அவர்களைத் தொடர்ந்துதானே போயிருக்க வேண்டும்! நீர் சொல்லும் கதை மூன்றுக்குப் பின் மூளியாக இருக்கிறதே! கதையில் விறுவிறுப்பு (Tempo) கொஞ்சம் குறைகிறதே! ஓகோ! இப்போதுதான் உம்மைத் தெரிந்து கொண்டேன். மனுஷன், காலையில் வந்து ஏதோ சினிமாவுக்காக கதையைக் கற்பனை பண்ணுகிறீர். இல்லையா! தாராளமாகச் செய்யும். நானும் எனக்குத் தோன்றிய சில 'ஐடியா'க்களைக் கூறி வைக்கிறேன்."

இவ்வாறு கூறி என் பேச்சு வன்மையின் முதல் சூழ்ச்சியைக் காட்டு முன்பே, அந்த மனிதரின் கண்களிலிருந்து தாரை தாரையாக நீர் வழிந்தது. அப்போதுதான் எனக்குத் தெரிந்தது, எனது நாவன்மைப் பேச்சு அவரை அப்படி ஓரே அடியாக அழ வைத்து விட்டது என்று!

தழு தழுத்த குரலில் தடுமாறிப் பேசினார் அவர். "என்னைக் கொஞ்சம் கூடத் தெரிந்து கொள்ளாமல் கையாண்டு செய்து விட்டீர். நான் வேதனையிலே வெம்பிப்போன வெள்ளரிப் பழம், ஸார்! சோதனைக் கல்லால் தாக்குண்ட கரைக் காய், பாதகப் பாலில் ஊறிய பாதாம் அல்வா, நீரில்லாத ஆறு, மோரில்லாத சோறு, ஆவியில்லாத பாவி, மேளமில்லாத தாளம், வாசல் இல்லாத பங்களா!" என்று சினிமாவில் வருவதுபோன்ற சோக வாசகங்களைச் சொல்லி நாளைய விருந்தை அள்ளி வீசினார் அந்த மனுஷர்.

"சரி, சரி. நீர் யார்! எதனால் இப்படி ஆனீர்! வெளியில் சொல்லியாவது உம்

துயரத்தை ஆற்றிக் கொள்ளும். முடிந்தால் என்னால் ஆன உதவியைச் செய்கிறேன்" என்றேன் கடைசியாக.

அவ்வளவுதான்! சினிமா முடிந்ததும் வெளியேறும் ஜனக் கும்பலும் சைக்கிள் கூட்டமும் போல் அவர் கதையும் கண்ணீரும் ஒன்றை யொன்று முட்டி மோதிக்கொண்டு வெளி வந்தன.

அவர் தமது சரித்திரத்தைச் சொல்லத் தொடங்கினர்:

என் பெயர் சோணாசலம். சொந்தக் கிராமத்தில் சுகமாகவே இருந்தேன். பத்து வேலி நிலம். மாடு வீடு. ஆள் தேள், வண்டி, கிண்டி எல்லாம் இருந்தன. உலகத்தைப் பற்றித் தெரிந்து கொள்ளாமல் அலட்சியமா இருந்தேன். அதற்காக உலகம் என்னைப் பழி வாங்க நேரத்தை எதிர்பார்த்துக்கொண்டிருந்தது போலும்! என் விதியின் தூதராக வந்தார் ஒருவர். அவரது பெயர்தான் ஸ்ரீமான் ஆசையார்.

எனது செல்வமெல்லாம் அமைதியான நதிக்கரை, தளரக் கடலான வயல்கள், அசைந்தாடும் தென்னந்தோப்பு, அதில் அசைபோடும் கால் நடைகள், சுகமான சாப்பாடு, சொந்த வீடு, இவைதாம். இந்த இன்பங்களை விட்டு நிக்கல் ரூபாய்களிலோ, பித்தளைக் காசுகளிலோ, அல்லது தொட்டால் துவளும் காகிதச் சாமான்களிலோ எனக்கு நாட்டம் பிறந்ததில்லை. ஆனால் ஸ்ரீமான் ஆசையார் அடியெடுத்து வைத்ததுதான் தாமதம், என் மனம் தடுமாறத் தொடங்கியது.

ஸ்ரீமான் ஆசையாரின் பிடிவாதத்தின் பேரில் சிறிது காலத்துக்கென நான் சென்னையில் குடியேறினேன். ஸ்ரீமான் ஆசையார் என்னை எங்கெல்லாமோ இழுத்தடித்தார். கார்ப்பரேஷன் மேஸ்திரிகூட அப்படி தெருத் தெருவாகச் சுற்றியிருக்க மாட்டான். நாங்கள் அப்படி அலைந்தோம். முதன் முதலாகச் சென்னையில் எனக்குச் சிநேகமானது ஹோட்டல் சாப்பாட்டினுல் வந்த 'டயபிடீஸ்' நோய். அதன் காரணமாக ஒரு டாக்டரின் நட்பு, அது நீடிக்க ஒரு காரின் தேவை, கார் காரணமாக நான்கு பேர் சிநேகம், நண்பர்கள் நீடிக்க ஒரு பங்களா, பங்களா நீடிக்கப் பணம்—இப்படியாக வளர்ந்து கொண்டே போயிற்று.

பங்களா வாங்கி விட்டுப் பேசாமல் உட்கார்ந்திருந்தால் காரியம் நடக்குமா!

ஆகவே, நாங்கள் ஒரு 'பிஸினெஸ்' ஆரம்பிக்கத் திட்டம் போட்டோம்.

"ஹோட்டல் வைக்கலாமா!" என்று கேட்டார் ஸ்ரீமான் ஆசையார்.

"உழைக்கத் தெரியாதே!" என்றேன்.

"பத்திரிகை ஆரம்பிக்கலாமே!"

'எழுதத் தெரியாதே! என்ன செய்வேன்!" என்று கையை விரித்தேன்.

"சினிமா பிடிக்கலாமே!" என்றார்.

"பார்க்கக்கூடத் தெரியாதே!" பிடிப்பது எப்படி!" என்றேன்.

"பரவாயில்லை, பணமிருந்தால் போதும். அறிவை விலைக்கு வாங்கித் தொழில் செய்ய முடியும். பிறர் அறிவும் நமது பணமும் சேர்ந்தால் கொள்ளை லாபம் தானாகவே கதறிக் கொண்டு வரும். மேலும் சினிமாத்தொழில் பெரிய கம்ப



சித்திரமல்ல. ஒரே மாதத்தில் சினிமாவின் சகல தொழில் இரகசியங்களையும் கற்றுக் கொள்ள முடியும். உங்கள் அறிவுக்கு ஒருமாதமே அதிகம்!" என்று என்னை முடுக்கிவிட்டார் ஆசையார்.

கிராமத்தில் எனக்குச் சொந்தமான வீடுகள், பட்டணத்தில் உள்ள பங்களாவுக்குக் கொடுக்கும் வாடகைப் பணங்களாக மாறின. காவிரிக் கரை வயல்கள் காருக்குப் பெட்ரோல் வாற்றுக உதவின. அருமையான மாந்தோப்பை விற்றேன். அந்தத் தொகையைக் கொண்டு ஸ்டுடியோவில் காகிதத் தோப்புகளை நிர்மாணித்தேன். பணத்தை இறைத்தேன்; படத்தைப் பிடித்தேன். தங்க நகைகளை விற்று, தகர டப்பாக்களை வாங்கினேன். சொந்தத் தங்கத்தை மாற்றி, செல்லுலாய்ட் பிலிம்களைக் கட்டினேன். சிவந்த ரோஜா மலர்களால் கடவுளை அர்ச்சித்த எனது கைகள், காலியில் சிகரெட் டப்பாக்களை ஏந்திய வண்ணம் காட்சியளித்தன. இப்போது சென்னையில் இருபது மாதங்களையும், எழுலட்சத்தையும் செலவு செய்த படமுதலாளி நான். படம் பாதி முடிந்தது. அதற்குள்ளாக இயற்கையாக என்னிடம் அமைந்திருந்த குணங்களும் பாதி மறைந்தன.

இப்போது எனக்கு எவரைப்பற்றியும் கவலையில்லை. ஏனெனில் நான் எல்லாம் தெரிந்தவனாக, சகல கலாவல்லவனாக ஆகி விட்டேன். இந்த அபிப்பிராய போதை அகங்கார விஷமாக மாறி என் அறிவைச் செல்லரித்து விட்டது. நான் எடுத்துக் கொண்டிருந்த படத்தைப் பற்றி எல்லோரும் ஒரே குரலில் புகழ்ந்து பேசியது உண்மைதான். அதுவரை வேலை செய்தவர்களைக் கொண்டே தொடர்ந்து முடித்திருந்தால் நிச்சயமாக அது நல்ல படமாகத்தான் வெளி வந்திருக்கும். பணமும் கிடைத்திருக்கும். என்னவோ, போங்கள்! திடீரென்று நான் மாறினேன். ஆசையின் வேகம், பணம் போட்ட மமதை, கேட்பாரற்ற சுதந்திரம். இந்தச் சூழ் நிலையால் என் மதி மயங்கியே விட்டது.

யார் யாரோ எனக்கு நல்லதைச்சொல்ல முன் வந்தார்கள். எவர்பேச்சும் என் காதில் விழவில்லை. பாதிப்படம் வரை எல்லோருக்குமே வெகு பிடிப்பாயிருந்த கதையில் திடீரென எனக்குச் சோகை தென்பட்டது. அன்று ஒரு நாள், படத்தின் கதாநாயகி தனக்குக் கதை பிடிக்கவில்லை என்று என்னிடம் தனியாகச் சொன்னது தான் என் மனமாற்றத்துக்குக் காரணம். அவளுக்கு அப்படித் தோன்றுவதற்குக் காரணம், எழுத்தாளர் அவளை இரண்டு கையாலும் கும்பிடவில்லை என்பதுதான்!

இவை எல்லாவற்றிற்கும் மேலான முக்கிய காரணம் என் கெட்ட காலம்.

உடனே எழுத்தாளரைக் கூப்பிட்டேன். கதாநாயகனுக்கிருந்த கட்டங்களை வெட்டச் சொல்லி, கதாநாயகிக்கே அதிகப் பகுதிகளைச் சேர்க்கச் சொன்னேன். "கதை செத்துப் போகும்" என்று வாதாடினர், எழுத்தாளர். அவர் கூறியது உண்மைதான். ஆனால் அவரது வார்த்தைகள் அப்போது எனக்குக் கோபத்தைத் தான் மூட்டின. "ஓய், உம்முடைய கதை என் படத்துக்காக, என் படம் கதாநாயகிக்காக, இந்தக் காலம் கதா நாயகிகள் காலமே தவிரக் கதா நாயகன் காலமல்ல. ஆகையால் உலக க்ஷேமத்தை முன்னிட்டு உமது கதையைக் கதாநாயகிக்காக மாற்றி விடும்" என்று அடித்துக் கொண்டேன்.

எழுத்தாளரோ எதற்கும் அசையாத இலட்சியவாதி. என்னிடமே நேரிடையாக எதிர்த்துப் பேசினர்!

"உலகத்தைப்பற்றி உங்களுக்கு என்ன ஐயா தெரியும்" என்று என் மண்டையில் அடிப்பது போல் ஒரு கேள்வி கேட்டார். அத்துடன் அவர் நிற்கவில்லை. "சிந்தனையிலே அறிவை ஆயிரக்கி முடிவு செய்யும் எங்கள் உள்ளம்தான் உலகம். குழி விழுந்த எங்கள் கண்கள்தான் காலத்தின் கண்ணாடி. எங்கள் பேச்சுத்தான் மக்களின் குரல். எங்கள் எழுத்துத்தான் சமுதாயத்தின் அலங்காரம். உங்களிடம் பணமிருக்கலாம். அது எங்கள் அறிவைப் பயன் படுத்திக் கொள்ளலாமே தவிர, எங்களை அடிமைப் படுத்திவிட முடியாது. போம்; உமக்குக் கெட்டகாலம் ஆரம்பமாகி விட்டது. ஆகையால்தான் கதாநாயகியின் அபிப்பிராயப்படி ஏதேதோ உளறுகிறீர்! கதையை மாற்ற முடியாது. நான் போகிறேன். பாக்கிப் பணத்தை அனுப்பி விடும்" என்று வெறி பிடித்தவர்போல் கூறி விட்டு வெளியேறி விட்டார் எழுத்தாளர்.

நானும் அவரைத் துரத்திவிட்டேன். பணத்தையும் கொடுக்கவில்லை. என்னை நம்பிக் குடும்பத்தோடு பட்டணத்துக்கு வந்து இரவு பகலாக உழைத்துக் கொண்டிருந்த அவர் ஏகப்பட்ட கடன் வாங்கியிருந்தார். திடீரென்று நான் விரட்டியதால், அவர் மனம் சோர்ந்து வியாதி வந்து, ஆஸ்பத்திரியில் அடைக்கலம் புகுந்து அகால மரண மடைந்தார்.

இவ்வாறு கூறிப் பெருமூச்சு விட்டார் சோணாசலம். பிறகு, நிறுத்திய இடத்திலிருந்து மேலும் கதையைத் தொடர்ந்தார்:

மறுநாள், "பிரபல எழுத்தாளர் சித்தன் தம் கடைசிப் படத்துக்கு வசனம் எழுதி முடிக்கு முன்பே காலமாகிவிட்டார்" என்ற செய்தியைக் கொண்டு வந்த ஸ்ரீமான் ஆசையார், "சார்! நல்ல மனிதர்கள் இறக்கும்போது கூடப் பிறருக்காக ஒரு நன்மை செய்துவிட்டே போகிறார்கள், பாருங்கள். இப்போது நம் சித்தன் காலமானது கூட நம் நன்மையை உத்தேசித்துத்தான். அவர் மரணம் நம் படத்தின் பணவரவுக்கு ஒரு முக்கிய காரணமாகப் போகிறது. அவர் எழுதிய கடைசிப் படம் என்று விளம்பரம் செய்தால், அதற்காகத் தினம் ஆயிரம் பேர் வருவார்கள். எப்படி என் 'ஐடியா'!" என்று கேட்டார்.

டைரக்டர் உள்ளே வந்தார். "எப்படியாவது காலஞ்சென்ற சித்தன் எழுதிய




கற்பனைப்படியே கதை எடுத்தால்தான் ஓடும். இல்லாவிட்டால் படம் படுதோல்வி யடையும்" என்று ஒரே பிடிவாதமாகக் கூறினார் டைரக்டர்.

"டைரக்டர் சொல்லுகிறபடி கதையை எடுப்பதானால், நான் நடிக்க முடியாது" என்று கதாநாயகி ஒரே உறுதியாக ஒற்றைக் காலால் நின்றாள். அதோடு அவள் நிற்கவில்லை. "எனக்காகத்தான் கதையே தவிர, கதைக்காக நான் இல்லை" என்றும் இறுதியாகக் கூறிவிட்டாள்.

நான் என்ன செய்வது! இந்தப் பக்கம் டைரக்டர் விழிக்கிறார், அந்தப் பக்கம் கதாநாயகி மிரட்டுகிறாள். இரண்டு ரேடியோவை ஏககாலத்தில் திருப்பியது போல இருவரும் ஒரு மணி நேரம் சரமாரியாக ஏதேதோ பேசிக் கொண்டார்கள்.

இருபதாயிரத்துக்கு வேலை செய்யும் டைரக்டரின் சொற்படி நடப்பதா? அல்லது இரண்டு லட்சத்தை ஏப்பம்விட்டு விட்டு மூன்றாவது லட்சத்துக்கு மோப்பம் பிடிக்கும் நட்சத்திரத்தின் சொற்படி கேட்பதா! எனக்கு ஒன்றும் புரியவில்லை. கடைசியாக நட்சத்திரத்தின் முடிவுக்கே நான் வோட்டுக் கொடுத்தேன். ஆரம்பத்தில், டைரக்டரே தான் அந்தக் கதாநாயகிக்கு இரண்டு லட்சத்தை வாங்கிக் கொடுத்தார். இப்போது அவள் சொல்படி நடக்கமாட்டேன் என்று அவர் சொன்னால் அது நியாயமாகுமா! எனது முடிவைக் கேட்ட டைரக்டர் என்னிடம் கோபித்துக் கொண்டு தமது ஆட்களுடன் வெளியேறி விட்டார்.

கதாநாயகி இப்போது என் கம்பெனியின் சர்வாதிகாரி ஆனாள். "இன்னும் ஆறு மாதத்தில் படத்தை முடிக்காவிட்டால் மேற்கொண்டு இரண்டு லட்சம் தரவேண்டும்" என்று பயமுறுத்தினாள். எனக்கோ வேறு டைரக்டர் கிடைக்கவில்லை.

ஆகவே, நானே 'டைரக்டர்' ஆனேன். கதை எழுத எந்தக் கவியும் முன்வராமற் போகவே, கதாநாயகியே கதை, வசனம், பாடல், நடனம், சங்கீதம் எல்லாவற்றையும் கற்பனை செய்து என் அறிவைப் பஞ்சாமிர்தமாகக் குழப்பிக் கொண்டிருந்தாள்.

அதன் பலனாகத் திடீரென்று ஒருநாள், கதாநாயகனும் மனம் நொந்து என் கம்பெனியிலிருந்து வெளியேறி விட்டார்.

'மேக் அப் மேன்' என்னைக் கதாநாயகன் ஆக்கி விடுவதாக அபய மளிக்கவே, நான் கதாநாயகனானேன். கதாநாயகி டைரக்டர் ஆனாள். ஒரு மாதிரியாகப் படம் முடிந்தது.

இனி படத்தை விற்று வாங்கிய கடனைக் கொடுத்து விடலாம் என்று பெருமூச்சு விட்டேன். படத்தை வாங்க எவரும் முன் வரவில்லை.

இந்தக் கவலையில் நான் தத்தளித்துக் கொண்டிருந்த போது முன்பு என்னிடம் கோபித்துக் கொண்டு போன டைரக்டர் மாரடைப்பால் காலமான செய்தி வந்தது.

அதற்கு மறுநாள், கதாநாயகனுக்குக் கதாநாயகி மேல் கொண்ட காதல் முற்றி காலனாக முடிந்ததாகச் செய்தி வந்தது.

அதற்கடுத்த வாரம் எங்கள் படத்தை நாங்களே திரையிட ஏற்பாடு செய்தோம்.

எவ்வளவு கவலைம், பாருங்கள்! போனவன் பெயரைச் சொல்லி, பொது மக்கள் பணத்தைப் பறிக்கும் அளவுக்கு எங்கள் அறிவு மட்டமாகி விட்டது, சார்! ஆனால் நம் ஜனங்களா ஏமாறுவார்கள்! எப்படியெல்லாமோ "பார்க்கத் தவறாதீர்கள்" என்று பக்கம் பக்கமாக விளம்பரம் போட்டும், என் படத்தை எல்லோருமே பார்க்கத் தவறி விட்டார்கள். ஸ்ரீமான் ஆசையாரும் என்னைத் தவிக்கும்படி செய்துவிட்டு எங்கேயோ மறைந்து விட்டார், சார்! நான் என்ன செய்வேன்!" என்று கூறி ஓவென்று கதறினார் அந்த மனிதர்.

"என் ஐயா, அழுகிறீர்! வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்க வேண்டுமே என்று அழுகிறீரா! போனால் முடியாது என்று கை விரித்து விட்டு நிம்மதியாயிரும்!" என்றேன்.

"என் காரணமாக அகால மரணமடைந்த அந்த எழுத்தாளர், டைரக்டர் கதாநாயகன் இம்மூவருடைய குடும்பங்களுக்கும் ஏதாவது ஒரு வழி செய்தால்தான் என் உயிர் அமைதியாகப் பிரியும். அதுவரையில்..." என்று கூறி விம்மத் தொடங்கி விட்டார் அந்த மனிதர்.

அவர் அழுகை எனக்கு ஒரு வீர உணர்ச்சியை உண்டாக்கிவிட்டது. "உமது உயிர் வாழ்வின் முடிவில் இல்லை. இப்போதுதான் உமது வாழ்வு துவங்கி யிருக்கிறது. செய்த வற்றை உணர்ந்த நீர்தான் மனுஷர். அழுகையை விட்டுவிட்டு என்னோடு புறப்படும். முடிந்தவரை நீர் செய்த பாவத்துக்கு பிராயச்சித்தம் தேடலாம். பணம் போனால் போகட்டும். நீர் கண்ட அனுபவத்திலே புது வாழ்வு மலரும்" என்றேன்.

வாழ்வின் துவக்கத்தைக் காணும் ஐந்து வயதுப் பாலகனைப் போல் அந்தச் சோணாசலம் என்னுடன் புறப்பட்டார்!

அன்றைய உலகைத் துவக்கி வைத்த சூரியன் தங்கத் தடாகத்தில் குளித்து, வைரப் பந்தாக உருண்டு, வானிலே எல்லை இன்பமுடன் நீந்திக் கொண்டிருந்தான்.



# இலட்சியத் தம்பதிகள்

**அகிலன்**



கனவு உலகம், கற்பனை உலகம், ஆவி உலகம் என்று சொல்கிறார்களே, இவற்றில் அப்போது நான் எந்த உலகத்தில் இருந்தேனோ, தெரியாது. கனவாகவே இருக்கலாம். அதையும் நிச்சயமாய் எப்படிச் சொல்வது! எனக்குத்தான் விழித்திருக்கும் போதே கனவு காண்பதும், கனவு காணும்போது விழித்திருப்பதாக நினைப்பதும் வழக்கமாயிற்றே!

குற்றாலத்தில் அப்போது கோடை காலம். பத்து நாள் பொழுதை நிம்மதியாய்க் கழிக்கத் தீர்மானித்தேன். பெரிய பங்களா ஒன்றில் சிறிய அறையை வாடகைக்கு எடுத்துக் கொண்டேன். பார்ப்பதற்கும் பசுமைக் காட்சி, படிப்பதற்குப் புத்தகங்கள், குளிப்பதற்குக் குளிர் அருவி, நினைப்பதற்கு நெஞ்சம் காணும்; வேறென்ன வேண்டும்!

வந்த அன்றைக்கு முதல் நாளிரவு ஒன்பது மணிக்கு மேல் ஓட்டலில் சாப்பிட்டு விட்டு அருவிக் கரைப் பக்கம் நடந்தேன். பூரணச் சந்திரன் அருவி நீரில் கரைந்து பாலாகப் பொங்கி வழிந்தது. அந்த நேரத்தில் கூட அங்கே கூட்டத்திற்குக் குறைவில்லை. ஆணும் பெண்ணும் தனித்தனியாகவும் ஒன்று சேர்ந்தும் குளிப்பதற்காக வந்து போனார்கள்.

அருவிக்குச் செல்லும் பாலத்துக்கு அருகில் கருங்கற் பாறை வழவழப்பாகக் கிடந்தது. துண்டை உதறிக் கீழே போட்டுக் கொண்டு உட்கார்ந்தேன். அருவியின் ஓசையில் அமைதி ஒளிந்தது; சுற்றுப் புறத்தின் அழகில் நெஞ்சு மயங்கியது. அண்ணாந்து மேலே பார்த்தேன். கோயில் கோபுரம், குன்றின் உச்சி, வானப் பரப்பு, வண்ண நிலவு எல்லாம் சேர்ந்து என் உள்ளத்தைப் பரவசமடையச் செய்தன.

நேரம் போனதே தெரியவில்லை. நிலவும் பெருக்கிய அருவியில் என்னுடன் நேரமும் காலமும் சேர்ந்து குளித்தன. தூரத்தில் ஏதோ சத்தம் கேட்டு விழித்துக் கொண்டேன். சுற்றுமுற்றும் பார்த்த போது குளித்துக் கொண்டிருந்தவர்களில் ஒருவரையும் காணோம். மனித சஞ்சாரமே அற்றுவிட்டது. இரவு ஒரு மணியாவது ஆகியிருக்க வேண்டும்.

சற்றுத் தொலைவில் எனக்கெதிராக ஒரு உருவம் ஓட்டமும் நடையுமாய் வந்தது. எழுந்து அறைக்குத் திரும்ப நினைத்தவன் சற்றுத் தாமதித்தேன்.

அந்த உருவம் வேறெங்கும் போகவில்லை. நேரே என்னைப் பார்த்துக் கொண்டு, என் முன்னே வந்து நின்றது! அவள் ஒரு பெண் பிள்ளை. வெள்ளைச் சேலை உடுத்தியிருந்தாள். தலை மயிர் அவிழ்ந்து தொங்கியது. அழகுச் சுடர் விடும் முகத்தாள்.

மோகினிகளை நான் கண்டதில்லை. ஆவி உலகத்து அப்ஸரஸ்களைச் சந்தித்ததில்லை. அவர்கள் இப்படித்தான் இருப்பார்களோ!

"கல்லைப் போல் உட்கார்ந்திருக்கிறீர்களே! நீங்கள் மனிதரா! பேயா!"

இப்படிக் கேட்டவண்ணம் அவள் என் எதிரே பாறையில் உட்கார்ந்தாள். ஒரு மாதிரித் தலையைச் சாய்த்துக் கொண்டு என்னைக் கோணல் பார்வை பார்த்தாள். அந்தப் பார்வை பயங்கரமாக இருந்தது.

"ஏன் இப்படிப் பயந்து சாகிறீர்கள்! நான் உங்களைக் கடித்துத் தின்று விடுவேன்!" என்று கேட்டாள்.

எனக்கு என்ன சொல்வதென்று விளங்கவில்லை. நாக்குத் தொண்டைக்குள் பதுங்கிக் கொண்டது. இவள் பெண்ணா அல்லது பேயா! பிரமித்துப் போய்விட்டேன்.

"முகத்தைப் பாருங்கள், பேயறைந்த மாதிரி!" என்றாள் அந்தப்பெண்.

நான் திடுக்கிட்டேன். என் வாயிலிருந்து ஒரு வார்த்தை கூடக் கிளம்பவில்லை.



சரவணன்

"ஆண் பிள்ளைகள் அத்தனை பேருமே கோழைகள்! பயந்தாங் கொள்ளிகள்! பெண்டாட்டி அழகாயிருந்தால் பயம், அவலட்சணமாக இருந்தால் பயம், படித்தவளா யிருந்தால் பயம், படிக்காதவளா யிருந்தால் பயம்!"

கொஞ்சம் துணிவு வந்தது எனக்கு. "எனக்கு அந்தப் பயமே கிடையாது; இன்னும் எனக்குக் கல்யாணமே ஆக வில்லை!" என்று சொன்னேன்.

"பெண்ணை வைத்து வாழப்பயந்தவர்!"

'இந்தமாதிரிப் பெண் வந்து வாய்த்தால் எப்படி வாழ்வது!' என்றது என் மனம்.

வேறு எதை எதையோ அவள் உளறிக் கொட்டி விட்டுத் திடீரென்று சம்பந்தமில்லாமல், "ஒரு கதை சொல்கிறேன், கேட்கிறீர்களா!" என்று ஆரம்பித்தாள்.

நான் என்ன செய்வது! கேட்பதைத் தவிர எனக்கு வேறு வழி தோன்றவில்லை.

அவள் சொல்ல ஆரம்பித்தாள்.

"சென்னையில் வளர்ந்த சீதா பி.ஏ. ஆனர்ஸ், திருநெல்வேலிக்காரரான ராமன் எம். ஏ. எல். டி.யைக் கல்யாணம் செய்து கொண்டாள். ராமனுக்குக் கலாசாலை ஒன்றில் பேராசிரியர் வேலை. இரண்டு பேரும் இரண்டு வருஷ காலம் வெளி உலகத்தையே மறந்து, இலக்கியங்களில் வருகிற இலட்சியத் தம்பதிகளைப் போல ஆனந்தமாக வாழ்ந்து வந்தார்கள்.

"மூன்றாவது வருஷம் வந்தது. திருநெல்வேலியை விட்டுப் பாளையங் கோட்டையின் காலனியான பகுதிக்கு இருவரும் குடிபெயர்ந்தார்கள். இவர்களுடைய குடும்பம் வெளி உலகத்தில் பங்கெடுத்துக் கொள்ளவும், வெளி உலகம் இந்தக் குடும்பத்தில் பங்கெடுத்துக் கொள்ளவும் தொடங்கின. சீதா காஸ்மாபாலிடன் கிளப் மெம்பரானாள்; ராமன் கம்பர் கழகத்தின் காரியதரிசியானார்.

"மூன்றாவது வருஷத்தின் மூன்றாவது மாதத்தில் இருவரும் ஒருவருக்கொருவர் நேர் எதிரான வழிகளில் வேகமாகப் போய்க்கொண்டிருப்பதைக் கண்டார்கள்.

"சீதாவுக்கு ராமன் கர்நாடகப் பேர்வழியாகக் காட்சி அளித்தார்.

"ராமனுக்குச் சீதா அடங்காப் பிடாரியாகத் தோன்ற ஆரம்பித்தாள். நாலு பேர்களுடன் அவள் கலகலப்பாகப் பேசிப் பழகுவது அவருக்குப் பிடிக்கவில்லை. கட்டுப் பெட்டியாக நடந்து கொள்ளும்படி உபதேசம் செய்தார்; படி தாண்டாப் பத்தினியாக இருக்கும்படி பலமுறைத்தியும் பார்த்தார்.

"உன்னுடைய திருவல்லிக்கேணி நாகரிகத்தை இங்கே தாமிரவருணித் தண்ணீரிடம் காட்டாதே!' என்றுகூட ஒருநாள் அவளுடைய சிநேகிதிகள் முன்னிலையில் சொல்லி விட்டாரென்றால் பார்த்துக் கொள்ளுங்களேன்!......"

இந்தக் கட்டத்திற்குக் கதை வரும் போது அவள் கதையை நிறுத்தி யோசனை செய்தாள். நான் கதை கேட்கும் ஆவலில் அவள் முகத்தையே நோக்கினேன். அவள் மேலும் தொடர்ந்தாள்:

"என்னுடைய சிநேகிதிகள் இதனால் என்னை மதிக்கவில்லை; சிநேகிதர்கள் அநுதாபப் பட்டார்கள். அவருக்கோ இதைப் பற்றிக் கவலையே கிடையாது."

'என்னுடைய' என்று அவள் வாய் தவறிச் சொல்லும்போதே நான் அவள் தான் சீதாவாக இருக்க வேண்டும் என்பதைத் தீர்மானித்து விட்டேன்.

"ஒருநாள் இரவு வெளியிலிருந்து திரும்பியவர் வெறி பிடித்தவர்போல் கத்தினார். 'இன்று நீ உன்னுடைய 'சோஷலிஸ'த்தைத் தலை முழுக வேண்டும்; இல்லாவிட்டால் என்னைத் தலை முழுகவேண்டும்! என்ன சொல்கிறாய்?' என்று கேட்டார்.

"எனக்கு மாத்திரம் ஆத்திரம் வராதா, என்ன! நானும் பதிலுக்குக் கத்தினேன். 'நான் உங்களுக்கு அடிமை அல்ல; யாரா யிருந்தாலும் என் சுதந்திரத்தைப் பறிக்க விடமாட்டேன்!' என்று மிகவும் அழுத்தந் திருத்தமாகக் கூறினேன்."

"அப்புறம்!" என்றேன் நான்.

"ஒரே அடியில் ஒரு வழியாக என் மண்டையைப் பிளந்து விட்டார். நான் செத்துப் போனேன்!" என்றாள் அவள்.

இதைக் கேட்டவுடன் என்னுடைய எலும்புக் குருத்துக்குள் கட்டி பாய்கிற மாதிரி இருந்தது. செத்துப்போனவளா! இந்த நடுநிசி வேளையில் நான் இந்த மோகினியிடமிருந்து எப்படித் தப்புவது!





சீதா சற்றுநேரம் வாயடைத்துப் போய் இருந்தாள். பிறகு முழங்காலைக் கட்டிக் கொண்டு ஓவென்று கதறத் தொடங்கினாள். தலை கவிழ்ந்திருந்தது. அவளது கூந்தல் கருநாகக் கூட்டம்போல் நெளிந்து நெளிந்து தொங்கிற்று.

பெண்ணென்றால் பேயும் இரங்கும் என்பார்கள். பேயின் நிலைக்கு யார் இரங்குவது!

“பெண் புத்தி பின் புத்திதான். ஆத்திரத்தில் நான் அறிவிழந்தேன். அவர் தங்கமான மனிதர்; குழந்தை சுபாவம் கொண்டவர்; அன்பு செலுத்துவதில் அவரைப் போல இந்த உலகத்தில் யாருமே இருக்க மாட்டார்கள்.

“இரண்டு வருஷமும் கோடைக்கு இங்குதான் வந்தோம். அந்த இன்ப நாட்களை மறக்க முடியுமா! ஏழேழு ஜன்மத்திற்கும் நான் அவருக்குக் கடமைப் பட்டவள். ‘சீதா!’ என்று வாய் நிறைய அவர் அழைக்கும் ஒரு சொல்லுக்காகவே அவர் கையால் நூறு தரம் சாகலாமே! புருஷனுக்கும் மனைவிக்கும் உள்ள பந்தத்தின் அருமை உங்களுக்கு எப்படித் தெரியும்!”

உட்கார்ந்திருந்த சீதா எழுந்தாள். கையெடுத்துக் கும்பிட்டு விட்டு அவள் பாலத்தின் வழியே நடந்தாள்.

பெரிய சுமை இறங்கியது போலிருந்தது. கீழே விரித்த துண்டைக் கூட எடுக்காமல், அவசரம் அவசரமாய் அவ்விடத்தை விட்டு ஓட்டமும் நடையுமாகக் கிளம்பினேன்.

* * *

கொஞ்ச தூரம் வருவதற்குள், “ஸார்!” என்று என்னை யாரோ அழைக்கும் குரல் கேட்டது.

இருளை ஊடுருவிப் பார்த்தபோது, ஓர் உருவம் அங்கு உட்கார்ந்திருந்தது. தாடியும் மீசையும் அதன் முகத்தில் மண்டிக் கிடந்தன. நீட்டிய காலை மடக்காமலும் சாய்ந்த முகத்தை நிமிர்த்தாமலும் அது என்னை விசித்திரமாய் நோக்கியது.

“இப்படி வந்து உட்காருங்கள், ஸார்! அந்த அம்மாள் வந்த பிறகுதானே நீங்கள் போக வேண்டும்!” என்று கேட்டது.

மந்திரத்தில் கட்டுப்பட்ட மாதிரி நான் போய் அதன் அருகில் உட்கார்ந்தேன்.

“அது யார்! உங்கள் சம்சாரமா!”

“இல்லை; யாரோ தெரியாது!”

“காலம் கெட்டுப் போச்சு, ஸார்!”

உண்மைதான்! காலம் கெடாவிட்டால் இப்படி நான் பெண் பேயிடமிருந்து தப்பி ஆண் பேயிடம் அகப்படுவேனா!

“அர்த்த ராத்திரி வேளையில் ஒரு பெண் பிள்ளை தனியாக இந்தப் பக்கம் வரலாமா! முன்பின் தெரியாதவரிடம் பேசலாமா! இந்தமாதிரிப் பெண்களை நம்புவதைவிடப் பேய்களை நம்பலாம், ஸார்!”

சீதாவின் ஞாபகம் எனக்கு வந்தது.

“நான் அநுபவத்தில் பேசுகிறேன். கொஞ்ச நாளைக்கு முன் பத்திரிகையில் படித்திருப்பீர்களே! நான்தான் ராமன் எம். ஏ. எல். டி. — ஒரே அடியில் அவளைத் தீர்த்து விட்டேன்.

“மனுஷனுக்கு மானந்தான் பெரிது. அதைக் காப்பாற்றத் தெரியாதவர்கள் இருந்தென்ன! இல்லாவிட்டால் என்ன!

“ஒரு நாள் ஸினிமாவுக்குப் போயிருந்தேன். எதிர் வரிசையில் இருந்த நாலு பெண்களும் இவளைப் பற்றியே பேசிக் கொண்டிருந்தார்கள். ‘புருஷன் கையால் சாகாதவளா இருந்தாள் எல்லாம் அப்படித்தான்!’ என்றுகூட அவர்கள் சொல்லிக் கொண்டார்கள்.

“பாதி ஆட்டத்தில் வீட்டிற்கு வந்தேன். அவளை ஒரே அடியில் யமலோகத்திற்கு அனுப்பிவிட்டேன்.”

ராமன், சீதா இருவர் சொல்லிய கதையிலும் நான் முடிச்சுப் போட்டேன். ராமனிடமிருந்து நீண்ட பெருமூச்சும் ஒரு விம்மலும் வெளிப்பட்டன.

“அவள் உத்தமி! மாசுமறுவற்ற பச்சைக் குழந்தை! நல்லது கெட்டது அவளுக்குத் தெரியாது. அவள் போன பிறகு நிமிஷ நேரங்கூட எனக்கு நிம்மதி இல்லை.”

அதைச் சொல்லும்பொழுது அவன் கண்களில் நீர் பெருகி ஓடுவதைக் கவனித்தேன்.

“சட்டம் என்னைமதிக்கவில்லை. போலீஸ்காரர்கள் பிடிக்க மறுக்கிறார்கள். நீதிபதி தூக்குப் போட மறுக்கிறார். அதனால் எனக்கு நானே தண்டனை கொடுக்கப் போகிறேன். இன்னும் அரை மணிக்



கெல்லாம் அருவியில் குதித்து மிதக்கப் போகிறேன், பாருங்கள்.”

இந்தக் கட்டத்தில் என்ன செய்ய வேண்டும் என்பது எனக்குப் புரியவில்லை. ஒருபுறம், சீதா குளித்து முழுகிவிட்டு ஈரப் புடவையுடன் அங்கு வந்து கொண்டிருந்தாள். இன்னொரு புறம், மூன்று நான்கு முரடர்கள் என்னைப் பிடிக்க வருகிற மாதிரி ஓடிவந்தார்கள்.

“அடே! இங்கே இரண்டும் ஆஜராக இருக்கிறதுடா!” என்றான் ஒருவன்.

“அதோ, பார்! அங்கே ஒரு பெண் வருகிறது!” என்றான் மற்றொருவன்.

“கலிகாலம் வந்து விட்டாலே இதுகளுக்குக் கொண்டாட்டந்தான்” என்று வேறு ஒருவன் சொல்லிச் சிரித்தான்.

“சரிடா! சாமி காத்துக் கொண்டு இருக்கும்; வாருங்கள், இவர்களை இழுத்துக்கொண்டு போவோம்!”

வந்தவர்கள் தங்களுக்குள் பேசிக் கொண்டார்கள். பயங்கரமான நிழற் படத்தில் நடப்பது போல் எல்லாக் காரியங்களும் நடந்தன. மூன்று பேரையும் இழுத்துப் பிடித்துக் கைகளில் விலங்கை மாட்டினார்கள். ராமன் அவர்களைக் கண்டபடி திட்டினான்; முஷ்டியை ஓங்கிக் காண்பித்து அடிக்கப் போனான். சீதா கதறி அழுதாள்; வர முடியாதென்று சண்டித்தனம் செய்தாள். நான் என் சக்தியை இழந்து மௌனமாக அவர்களுடன் சென்றேன்.

* * *

மருத மரங்கள் சூழ்ந்த பெரிய தோட்டத்திற்குள் நாங்கள் நுழைந்தோம். நானாவிதமான குரல்கள் அங்கே எழுந்தன. ஆடல், பாடல், அலறல், உளறல், கத்து, கும்மாளம் இப்படி ஒரே கதம்பக் கச்சேரியாக இருந்தது! எங்களைக் கொண்டுபோய் ஒரு அறைக்குள் உட்கார்ந்திருந்த சாமியாரின் முன்பு நிறுத்தினார்கள். மங்கலான விளக்கு வெளிச்சத்தில் சாய்வு நாற்காலியில் இருந்தவாறே சாமியார் என்னை மட்டிலும் தனியாக உற்றுப் பார்த்தார். நானும் அவரையும் அவருக்குப் பின்னால் தொங்கிய துணித் திரையையும் பார்த்தேன்.

“பைத்தியத்திற்கு வைத்தியம் செய்யப்படும். மந்திர ஔஷதங்களால் சகலவிதமான மூளைக் கோளாறுகளும் நீக்கப்படும்—ஸ்வாமி பிரும்மானந்தர்” என்று அந்தத் திரையில் எழுதப்பட்டிருந்தது.

“இது யார், புதிதா யிருக்கிறதே!” என்று கேட்டார் சாமியார்.

வைத்தியர் ஸ்வாமிகளின் சிஷ்யர்கள் பரிதாபமாய் விழித்தார்கள். நல்ல சமயம் என்று நான் என்னுடைய கதைக் கருத்தை அவரிடம் சொல்லி முடித்தேன். விலங்குகளிலிருந்து விடுதலை கிடைத்தது. சாமியார் ஆசனம் அளித்து என்னை உட்காரச் செய்தார். பல முறை என்னிடம் மன்னிப்புக் கேட்டுக் கொண்டார்.

இந்தச் சமயத்தில் ராமனும் சீதாவும் ஒருவரை ஒருவர் உற்றுப் பார்த்துக் கொண்டார்கள்.

“சீதாவா!” என்று அலறினான் ராமன்.

“யார், நீங்களா!” என்று அவன் கால்களில் விழுந்தாள் சீதா.

அவர்களைத் தனியே அங்கு விட்டுவிட்டு நாங்கள் அடுத்த அறைக்குச் சென்றோம். சாமியாரிடமிருந்து எனக்கு அவர்களைப் பற்றிய முழு விவரமும் கிடைத்தது.

“ராமன் அவளைக் கொன்று விட்டதாக நினைத்தான். அதே நிமிஷத்தில் அவனுக்கு நினைவு தவறியது. சீதாவும் அந்த அடியால் மூளை கலங்கித் தான் இறந்து போனதாகவே நினைத்துக் கொண்டாள். ராமன் இங்கே சிகிச்சைக்கு வந்து மூன்று மாதமாகிறது. இன்றுதான் சீதாவைக் கொண்டு வந்தார்கள். இது வரையில் காயம் ஆறுவதற்காக அவள் ஆஸ்பத்திரியில் சேர்க்கப்பட்டிருந்தாள்.”

“அவர்கள் இதற்கு முன்பு சந்திக்கவே இல்லையா!”

“சந்திக்க ஏற்பாடு செய்தேன்; ஒருவரை ஒருவர் புரிந்து கொள்ளவில்லை. இப்போது உங்களுக்கு முன்னால் அடையாளம் கண்டு கொண்டார்களே, அதுதான். இனிமேல் சீக்கிரம் குணமாகி விடும்.”

“பாவம்! படிப்பும் பண்பும் உள்ளவர்களுக்கா இந்தக் கஷ்டம் வரவேண்டும்! ஒருவரிடம் ஒருவர் உயிரையே வைத்திருக்கிறார்களே!” என்றேன் நான்.

“படிப்பு இருக்கிறது; ஆனால் பண்பில்லை! சீதாவைப் போன்ற பெண்கள் தமிழ்ப் பண்பை உணர வேண்டும். நல்லவர்களாக இருந்தால் மாத்திரம் போதுமா! நல்லவர்களைப் போலவும் இருக்க வேண்டும். தன்னுடைய முழு நடத்தையை உணர்ந்து நடக்க வேண்டும். புருஷனின் நோக்கத்துக்கு நேர்மாறாக நடந்து கொள்வது தான் சுதந்திரம் என்று எண்ணி விடக் கூடாது” என்றார் சாமியார்.



அழகின்
ஆராதனையில்
கேஸ்ராஞ்சன்
மிகச் சிறந்த
ஹேர்ஆயில்




KAVIRAJ N. N. SEN'S
keshranjan
oil

## புதிய "CZ" 125 ஸி. ஸி.

மற்றும்

## "ஜாவா" 250 ஸி. ஸி.

சமீபத்தில் தருவிக்கப் பட்டவை!

•

இவைகளுக்கு நிகர்
வேறெதுவும் இல்லை

•

ஒப்பற்ற அம்சங்கள்:

★ மாக்னெடோ இக்நீஷன்
★ ரியர் ஸ்பிரிங்கிங்
★ முற்றிலும் மூடிய இன்ஜின்



"ஜாவா" 250 c. c.

**இந்தியாவில் அபரிமிதமான விற்பனை**

டிஸ்டிரிப்யூட்டர்கள்:

## ஐடியல் மோட்டார்ஸ்

காவாஸ்ஜி பட்டேல் தெரு, போர்ட், பம்பாய்

மதராஸ்:

கே. ஆர். மோட்டார்ஸ்
76, பிராட்வே, மதராஸ் - 1

பெங்களூர்:

கோயமுத்தூர் ஆடோமோபைல்ஸ்
3-H, சென்ட்ரல் தெரு, பெங்களூர்-1



நீடித்த இன்பத்திற்கு
இணையிலா இன்ப சங்கீதம்!

## எம். எஸ். சுப்புலக்ஷ்மி

N. 18680
என்னகானு ராம பஜன
2 பாகங்கள் (பந்துவராளி)

N. 18685
ஸாதுன பாலிம்ப
2 பாகங்கள் (கேதார கௌள)

N. 28557
ப்ரோசே வாரு
2 பாகங்கள் (கமாஸ்)
[வயலின் : மைசூர் டி. சௌடய்யா]

N. 18208
மாதயை
2 பாகங்கள் (வஸந்த)

N. 18250
மாலைப் பொழுதினிலே
2 பாகங்கள் (ராகமாலிகை)

N. 18270
யாரோ இவர் யாரோ
2 பாகங்கள் (பைரவி)

## என். ஸி. வஸந்தகோகிலம்

N. 18219
ஆனந்த நடனம்
2 பாகங்கள் (காம்போதி)

N. 18239
தந்தை தாய்
2 பாகங்கள் (ஷண்முகப்ரியா)

N. 18207
இந்த வரம் (கரஹரப்ரியா)
உதய ஸூந்தரி (விருத்தம்)

N. 18299
அந்தரங்கமெல்லாம்
2 பாகங்கள் (வாசஸ்பதி)

## ஜி. என். பாலசுப்பிரமணியம்

HT. 123
வாசுதேவாயனி
2 பாகங்கள் (கல்யாணி)

HT. 125
ராதா ஸமேதா (மிஸ்ரயமன்)
ஹிமகிரிதனயே (சுத்த தன்யாசி)

## பி. ஏ. பெரியநாயகி

N. 28060
சுந்தர குஞ்சித
2 பாகங்கள் (கரஹரப்ரியா)

மற்றும் பல அபூர்வ இசைத் தட்டுகள்!














# தந்தப் பல்லக்கு

வை. மு. நரசிம்மன்



ஆதியில் கற்கள், மரங்கள் இவைகளைக் கொண்டே அபூர்வமான உருவங்களைச் சிற்ப நிபுணர்கள் சிருஷ்டி செய்து வந்தனர். பிறகுதான் தந்தத்தில் கண்களைக் கவரும் சிற்ப வேலைகள் செய்யும் வழக்கம் வளரத் தொடங்கியது.

கிறிஸ்து பிறப்பதற்கு மூவாயிரம் ஆண்டுகளுக்கு முன் சிந்து நதிப் பிராந்தியத்தில் மோகன்ஜதாரோ, ஹரப்பா முதலிய நாகரிகங்கள் பரவியிருந்தன. அக்காலத்தில் அங்கிருந்து அபூர்வ வேலைப்பாடுள்ள தந்த உருவங்கள் ஏராளமாக அகப்பட்டன.



வர்ஜில், ஹோமர் போன்ற உலகப் பிரசித்தி பெற்ற கவிச்சக்கரவர்த்திகளும் இந்தியச் சிற்பிகள் சிருஷ்டித்த தந்த உருவங்களைப் பற்றிப் பிரமாதமாகப் பாராட்டியிருக்கிறார்கள்.

தந்தத்தின் அருமை பெருமைகளை வெகு காலத்துக்கு முன்பே இந்தியர்கள் அறிந்து கொண்டுள்ளனர். புதை பொருள் இலாக்காவில் உள்ள கல்வெட்டுகளிலிருந்து இதெல்லாம் சந்தேகமின்றித் தெரிய வருகிறது.

இதைத் தவிர தந்தத்தில் அற்புதமான வேலைப்பாடுகளுடன் கூடிய பொருள்களை, பாரத நாடு அன்னிய தேசங்களுக்கும் அனுப்பி வந்தது என்பதற்குச் சரித்திரத்தில் எத்தனையோ ஆதாரங்கள் இருக்கின்றன.

அற்புதமான தந்த வேலைப்பாடுள்ள ஏராளமான கடவுள் உருவங்கள், முகம்மதியரின் ஆட்சிக்காலத்தில் அழிக்கப்பட்டு விட்டன என்றும்

தெரிகிறது. பல உருவங்கள் காலக்கிரமத்தில் தானாகத் தேய்ந்து அழிந்து விட்டன என்பதற்கும் ஆதாரம் இருக்கிறது.

விஜய மன்னர் காலத்தில்தான் நம் நாட்டில் தந்தச் சிற்பங்கள் உன்னத நிலையை அடைந்திருந்தன.

குறிப்பாக, பாண்டிய நாட்டில் பக்த சிரோமணியாக விளங்கிய திருமலை நாயக்கர் (1623—1650 கி. பி.) காலத்திலும் தந்தச் சிற்பங்கள் மகோன்னத நிலையை அடைந்திருந்தன.

திருமலை நாயக்கர் ஸ்ரீரங்கத்தில் பள்ளி கொண்டுள்ள ஸ்ரீரங்கநாதருக்கு ஒரு தந்தப் பல்லக்கும், அழகிய வேலைப்பாடுடன் கூடிய தந்தப் பெட்டியும் காணிக்கையாகக் கொடுத்தார். திருமாலிருஞ் சோலைமலை என்கிற அழகர் கோவில் அழகருக்கு ஒரு தந்தப் பள்ளியறை மஞ்சமும் செய்து கொடுத்தார். இன்றைக்கும் அந்த அழகிய மஞ்சத்தைக் காணலாம். ஆனால் மேலே குறிப்பிட்டுள்ள தந்தப் பல்லக்கு ஒடிந்து தேய்ந்து விட்டதென்று தெரிகிறது. தந்தப் பெட்டியை இன்றைக்கும் பார்க்கலாம்.

இங்கு பிரசுரமாகியுள்ள படங்களில் சில மேலே குறிப்பிட்ட தந்தப் பல்லக்கிலிருந்து எடுக்கப்பட்ட பதுமைகளின் படங்களாகும். மற்றவை அழகர் கோவில் மஞ்சத்தில் உள்ள பதுமைகளின் படங்கள்.

இவைபோன்ற அபூர்வ தந்த வேலைப்பாடுள்ள சிற்பங்களை இக்காலத்தில் காண்பது அரிது. இந்த உருவங்கள் வர்ணிக்க முடியாத அழகுடன் விளங்குகின்றன. எனவே, இவற்றை நமது சிற்பக் கலையின் பொக்கிஷங்கள் என்று சொல்லலாம். ஆகையால் தமிழரின் இந்தப் பண்டைச் செல்வத்துக்கு எவ்விதப் பழுதும் ஏற்படாமல் பாதுகாக்க வேண்டியது அத்தியாவசியமாகும்.

1. அந்தக் காலத்து நாயக்க மன்னரின் அமைச்சர்களில் ஒருவர். முகத்தில் தவழும் புன்னகையையும், மக்களுக்கு அபயம் அளிக்கும் கையையும் பாருங்கள்! அவரது கழுத்தில் ருத்ராட்ச மாலையையும் காதுகளில் குண்டலங்களையும் கவனிப்போர் அவர் ஒரு சிறந்த சிவ பக்தர் என்பதை அறியலாம்.

2. ஒய்யாரமாக நிற்கும் நடனமாது. அங்கங்களின் நெளிவு குழைவுகளைத் தெளிவாகக் காட்டி இதைச் சிருஷ்டித்த சிற்பி தலை சிறந்த நிபுணர்களில் ஒருவராக இருந்திருக்க வேண்டும்.

3. வேட உருவம் தரித்து, வேட்டைக்குச் சென்ற பரமசிவன்.

4. நாயக்க மன்னர் காலத்து வீர அமைச்சர்.

5. காதலர்கள். காதலியின் நாணமும் கூந்தலின் பின்னல் அழகும் குறிப்பிடத் தக்கவை.

6. ஊர்த்துவ தாண்டவ மூர்த்தி சிற்பத்தில் காணும் எண்ணிக்கையற்ற நுணுக்கமான இழைப்பு வேலைகளைக் கவனிக்கும் ரசிகர்கள் யாரும் ஆச்சரியம் அடையாமல் இருக்க முடியாது.

7. வீணை வாசிக்கும் விதுஷி. முக பாவம் மிகவும் அருமையாகச் சித்திரிக்கப் பட்டிருக்கிறது.

8. கோவில் யானையும் வெண்சாமரம் வீசும் பெண்மணியும், யானையின் நடை தத்ரூபமாக அமைந்திருக்கிறது அல்லவா?







# நம்பிக்கை

கி.ரா.கோபாலன்



நடேசன் ஒரு விநோதமான பிரகிருதி. உலகத்தில் எல்லாவற்றிலுமே அவன் நம்பிக்கை இழந்திருந்தான். வாழ்வில் ஏற்பட்ட சோதனைகளும், வேதனைகளும் தான் அவன் மனத்தை அப்படியாக்கி விட்டன. கடவுள் இல்லை; சாஸ்திரம், சம்பிரதாயம் எல்லாம் பொய்; எல்லாம் மோசக் கருத்தோடும், சுயநலத்தோடும் மனிதனை ஏமாற்றுவதற்காகச் சிருஷ்டிக்கப் பட்டவை — இதுதான் அவனுடைய திடமான முடிவு!

குடும்ப வாழ்க்கையில் ஏற்பட்ட சில சேதங்களின் அனுபவ ரீதியாக அவன் மனத்துக்குப் பட்ட தீர்மானங்கள் இவை. உலகத்தில் காணும் எல்லாவற்றுக்குமே அவன் மனம் கோணல் வழியில் ஒரு விதண்டாவாதமான எதிர்ப்புச் சக்தியை வளர்த்துக் கொண்டு வந்தது.

அவனுக்கு ஏற்பட்ட மன வெறுப்பினால் அவன் முற்றும் துறந்த முனி போலாகி விடவில்லை. உலகத்தில் சாதாரண மனிதனாக வாழும் வசதிகளெல்லாம் அவனுக்கு வேண்டியதாயிருந்தன.

நடேசன் பெரிய குடும்பத்தில் பிறந்தவன்தான். ஆனால் அவன் குழந்தையாய் இருக்கும்போதே அந்தக் குடும்பம் பல வகையிலும் சின்னா பின்னமாகி விட்டது. அவனுடைய பெற்றோர்கள் பக்தி மார்க்கத்திலும் வைதீக கர்மாக்களிலும் குடும்பச் செல்வத்தைச் செலவு மீறிச் செலவு செய்து, இந்த உலகத்தை விட்டும் சென்று விட்டனர். அவனுடைய மூத்த சகோதரன் போன இடமே தெரியாமல் எங்கேயோ போய் விட்டான்.

எனவே, அவன் மாத்திரம் தனியாகத் தவித்தான். அவன் அதிகம் படித்தவனல்ல. ஆனால் கிராமபோன், கடிகாரம் முதலியவைகளைப் பழுது பார்ப்பதில் மிகவும் கெட்டிக்காரன். அதுவே அவனுடைய ஜீவனோபாயத்திற்கு அமைந்த தொழிலாகி விட்டது.

அவனுடைய குணமும் கொள்கையும் எப்படிப் பட்டதாக இருந்தாலும், தொழிலில் நிபுணனாகவும், ஒழுங்கானவனாகவும் இருந்ததால் பலருடைய நம்பிக்கைக்குப் பாத்திரமானவனாக விளங்கினான். தொழிலில் நல்ல வருமானம் கிடைத்து வந்தது. வருமானத்துக்குத் தக்கபடி தாராளமாய்ச் செலவும் செய்து வந்தான்.

அவனுக்கு வயது முப்பதாகி விட்டது. அவனுக்கு எதில் நம்பிக்கை இல்லாவிட்டாலும், வாழ்க்கைக்குத் துணையாக ஒரு பெண் பக்கத்திலிருக்க வேண்டுவது அவசியம் என்பதில் நம்பிக்கை குறையவில்லை. இந்த விருப்பம் நாளுக்கு நாள் அதிகமாகி வந்தது. ஆனால் இந்த விருப்பத்தை வெளியே காட்டிக் கொள்ள வெட்கப் பட்டான். உலகத்தில் வான ரம்பை போல் விளங்கும் யுவதிகளில் ஒருத்தி தான் தனக்கு மனைவியாக வாய்க்க வேண்டும் என்பது அவன் விருப்பம்.

அவன் சீக்கிரம் ஒரு பெண்ணைக் கல்யாணம் செய்து கொண்டுதானாக வேண்டும். ஆனால் அந்தப் பெண் அவனுடைய கொள்கைக்கு அனுசரணையானவளாக இருக்கவேண்டும்; அல்லது தனக்கு வாய்க்கும் மனைவி எல்லாப் பெண்களையும்போல் ஆஸ்திக மனப்போக்கிலிருந்தால் அவளைத் திருத்தித் தன் வழிக்குக் கொண்டு வர வேண்டும். இதுதான் அவனுடைய கனவாக இருந்து வந்தது.

அன்று தீபாவளி. ஊர் முழுவதும் குதூகலமாக இருந்தது. ஆனால் அவனுக்கு மாத்திரம் எல்லாம் வெறுப்பாகவும் கசப்பாகவும் தோன்றியது. ஜனங்களெல்லாம் கண் மூடித்தனமாக இந்தப் பண்டிகையைக் கொண்டாடுகிறார்கள் என்பதுதான் அவனுடைய சித்தாந்தம்.

அவன் தெருவோடு போய்க் கொண்டிருந்தான். புத்தம் புது ஆடை அணிந்து அலங்காரங்களுமாகப் போகும் பெண்களிடம் அவன் கண்கள் மாறி மாறிப் பாய்ந்தன.

திடீரென்று அவன் மீது ஒரு பட்டாசு வெடிச்சரம் விழுந்து படபட வென்று வெடிக்கத் தொடங்கியது. அவன் துள்ளிக் குதித்தான். அதைக்கண்ட தெருவிலிருந்த சிறுவர்கள் கைதட்டிச் சிரித்தார்கள்.

யார் அவன் மீது அந்தப் பட்டாசுச் சரத்தைக் கொளுத்திப் போட்டது! கோபத்தோடும் புகைச்சலோடும் பார்த்தான். அவன் பார்வை சென்ற இடத்தில் பதினாறு பதினேழு வயதுள்ள ஒரு அழகிய யுவதி மிரண்ட பார்வையோடு நின்று கொண்டிருந்தாள். அவள்தான் அந்தக் காரியத்தைச் செய்திருக்க வேண்டுமென்பதை அவன் எளிதில் ஊகித்து உணர்ந்து கொண்டான்.





அவளைக் கண்டதுதான் தாமதம், அவன் மனத்திலெழுந்த கோபப்புகை இருந்த இடம் தெரியாமல் கலைந்து விட்டது. அவன் மனத்தில் என்றும் ஏற்படாத இரக்கம் ஏற்பட்டது. அவளுடைய தவறுக்காக அவன் மனம் அவளிடம் இரக்கம் காட்டியது. அந்தத் தவறை யார் செய்திருந்தாலும் அவன் மன்னித்திருக்க மாட்டான். ஆனால் அதைச் செய்தவள் ஒருபெண் — அழகான யுவதி. அந்த மிரண்ட விழிகளும் பயந்த பார்வையும் அவன் மனத்தை உருக்கி விட்டன. அந்தப் பெண்ணை அவன் திரும்பிப் பார்த்ததும், அவள் மான் போலத் துள்ளி வீட்டிற்குள் ஓடிவிட்டாள்.

அவன் மெதுவாக நடந்தான். அவன் மனத்தில் அவளுடைய முக அழகு பதிந்து விட்டது. பாவம்! அவன் மீது அவள் பட்டாசு வெடியைக் கொளுத்திப் போட்டது மட்டுமல்ல; அவளுடைய கணநேரப் பார்வை அவன் இருதயத்தையே வெடிவைத்துக் கலக்கி வைத்து விட்டதென்றுதான் சொல்ல வேண்டும்!



எப்பொழுதும் அவனுக்கு அவள் நினைவுதான். அவளை மறுபடியும் பார்க்க வேண்டுமென்ற துடிப்புத்தான் அவனுக்கு அதிகமாக இருந்தது. அடிக்கடி அந்தத் தெரு வழியாக அவனுடைய

வீட்டையே உற்றுப் பார்த்துக் கொண்டு போவான், அந்த அழகு முகம் துளி யாவது கண்ணில் படாதா என்று ஏங்கிய வண்ணம். ஆனால் அவளை மாத்திரம் அவ னால் பார்க்க முடியவேயில்லை.

ஒரு நாள் அவளை அவன் கோவில் வாச லில் தற்செயலாகப் பார்த்து விட்டான். அன்று வெள்ளிக்கிழமை. அவள் தன் தம்பியைத் துணைக்கு அழைத்துக் கொண்டு ஸ்வாமி தரிசனம் செய்யப் போய்க் கொண்டிருந்தாள். அவளைப் பின் தொடர்ந்து செல்ல வேண்டுமென்ற ஆவல் அவனுக்கு எழுந்தது.

ஆனால் அவன் கோவிலுக்குச் செல்வ தில்லை என்று நெடு நாட்களுக்கு முன்பே சபதம் செய்திருந்தான். அவன், தப்பித் தவறிக்கூடக் கோவில் வாசற்படியில் காலடி வைத்தவனல்ல. எனவே, அவன் சிறிது நேரம் யோசித்தான், நெடு நாட்க ளாகக் காப்பாற்றி வந்த லட்சியத்தைக் கைவிடுவதா என்று.

எனினும் நெடு நாட்களாக ஏங்கிக் காத் திருந்து கிடைத்த சந்தர்ப்பத்தைக் கை நழுவ விட்டு விட முடியுமா! இதனால் தன் கொள்கையிலிருந்து சிறிது நழுவினும் பாதகமில்லை என்று அவனுக்குப் பட்டது. அவன் அதிக நேரம் தாமதிக்கவில்லை. அந்தப் பெண்ணைப் பின் தொடர்ந்து கோவிலுக்குள் போனான்.

சன்னிதானத்தில் அந்தப் பெண் நின்று கொண்டிருந்தாள். சிறிது ஜனக் கூட்ட மிருந்தது. அவளுக்கு எதிர் வரிசையில் நடேசன் நின்று அவளையே விழி அசைக் காமல் பார்த்துக் கொண்டிருந்தான். அவள் அவனைப் பார்க்கவேயில்லை. கரம் குவித்த வண்ணம் ஸ்வாமியைத் தரிசித்துக் கொண்டிருந்தாள்.

அவளுடைய பார்வை சட்டென்று திரும்பியது. அப்பொழுது எதிர் வரிசை யில் அவன் நிற்பதைக் கண்டு திடுக்கிட் டாள். அவன் தன்னைப் பார்க்கிறான் என் பதைத் தெரிந்துகொண்டவுடனே, அவளை யறியாமல் அவள் பார்வை ஸ்வாமி சன்னி தானத்தை நோக்கித் திரும்பியது. யந்தி ரப் பொம்மை கை தூக்குவதுபோல் இரு கரங்களையும் குவித்து நமஸ்காரம் செய் தாள். இதை யெல்லாம் அவள் சுய நினைவோடு செய்யவில்லை.

குருக்கள் விபூதி குங்குமம் முதலிய பிர சாதங்களை வழங்கிக் கொண்டு வந்தார். அவர் கொடுக்கும்போது கை நீட்டி வாங் காமலிருக்க முடியுமா! மரியாதையோடு வாங்கிக் கொண்டாள்.

அப்பொழுது அவளுடைய பார்வை மறுபடியும் அவன்மீது விழுந்தது. அப் பொழுது அவனும் அவளைப் பார்த்தான், அவள் என்ன செய்கிறாள் என்பதைப் பார்ப்பதுபோல். எல்லாவற்றையும் கிரம மாகச் செய்கிறவன்போல் அவன் விபூதி யையும் குங்குமத்தையும் ஒழுங்காக நெற் றியில் இட்டுக் கொண்டான்.

அந்தப் பெண் சன்னிதானத்தை விட்டுப் புறப்பட்டாள். அவளோடு ஒரு வார்த் தையாவது பேச வேண்டுமென்று அவ னுக்குத் துடிப்பு. அவளைப் பின் தொடர்ந்து கோவிலுக்கு வெளியே வந் தான். அந்தப் பெண் அவன் தன்னைப் பின் தொடர்ந்து வருவதைக் கண்டு பயந் தவள் போல் வெகு வேகமாக நடக்கத் தொடங்கினாள்.

அவளைத் துரத்திக்கொண்டு போய் ஏதா வது பேசவேண்டுமென்று அவன் நினைத்த பொழுது, துரதிருஷ்டவசமாக அவனு டைய நண்பன் தும்பு எதிரில் வந்து கொண்டிருந்தான். எதிர்பாராத வண்ணம் ஏற்பட்ட இந்த இடையூறு அவனுக்கு மிகவும் வெறுப்பையும் எரிச்சலையும் உண் டாக்கியது. தும்புவைக் கண்டதும் மேல் அங்கவஸ்திரத்தினால் நெற்றி வியர்வை யைத் துடைத்துக் கொள்கிறவன் போல் நெற்றியில் இட்டுக் கொண்டிருந்த குங்கு மத்தையும் விபூதியையும் அவசரமாக அழித்துக் கொண்டான்.

நடேசன் கோவிலுக்குள்ளிருந்து வரு வதைப் பார்த்த தும்புவுக்கு ஆச்சரியமா கப் போய்விட்டது. அவன் சிரித்துக் கொண்டே நடேசனைப் பார்த்து, "இனி மேல் எந்த விஷயத்திலும் பிரளயம் வந்து இந்தக் கலியுகத்தைத் திரேதாயுகமாக்கி விடலாம்......" என்றான்.

அவன் தும்புவைக் கண்டு தயங்கி நின்ற போது, அந்தப் பெண் தன்னுடைய கண் பார்வையிலிருந்து மறைந்து விட்டதைக் கவனித்தான். "ஏன் அப்படிச் சொல் கிறாய்......?" என்றான் தன் நினைவையே நழுவ விட்டவன்போல்.

"உன்னைப்போல நாஸ்திக வெல்லாம் கோவிலுக்கு வரத் தொடங்கினால்......?" என்றான் தும்புவும் கிண்டலாக.

"நான் இங்கே ஸ்வாமி தரிசனத்துக் காக வரவில்லை, தெரியுமா! ஒரு புண்ய வான் கடிகாரம் 'ரிப்பேர்' செய்த பணம் பாக்கி கொடுக்க வேண்டும். அந்தப் பக்தி மான் வழக்கமாய் வெள்ளிக்கிழமை தவறா மல் கோவிலுக்கு வருவார். அவரைப் பார்க்கவே வந்தேன்" என்று தன் கொள்கையை விட்டுக் கொடுக்காதவன் போல் தடபுடலாகப் பேசினான்.

"எதற்காக இருந்தாலென்ன! உன்னைப் போன்றவனையும் கடவுள் தன் சன்னி தானத்திற்கு இழுத்தாரென்றால், அவ ருடைய மகிமையைப் பற்றி நாம் என்ன சொல்ல முடியும்!" என்றான் தும்பு கேலியாகச் சிரித்துக்கொண்டே.

நடேசன் இதற்குப் பதில் ஒன்றும் சொல்லவில்லை. அவன் நினைவு அப்பொ ழுது அவனிட மிருந்தால்தானே!



* * *

நடேசன் தன் அறையில் உட்கார்ந்து ஒரு கடிகாரத்தைப் பழுது பார்த்துக் கொண்டிருந்தான். "ஸார்" என்று கூப் பிட்டுக் கொண்டே அந்த அறையில் ஒரு மனிதர் நுழைந்தார். அவரைக் கண்ட துமே அவர் யாரென்று நடேசன் தெரிந்து கொண்டான். அவன் மனத்தை எந்தப் பெண் கனவிலும் நினைவிலும் ஏங்க வைத் துக் கொண்டிருந்தாளோ, அவளை எந்த வீட்டில் முதன் முதலாகப் பார்த்

தானே, அதே வீட்டிலுள்ள மனிதர்தான் அவர் என்று அவனுக்குத் தெரியும். அவருடைய முக ஜாடையிலிருந்து அவர் அவனுக்குத் தகப்பனாராகத்தானிருக்க வேண்டுமென்று முடிவு செய்திருந்தான்.

“வாருங்கள். உட்காருங்கள். என்ன சமாசாரம்!” என்றான் கொஞ்சம் விசேஷ உபசாரத்தோடு.

“ஒரு கடிகாரம்......!”

“ரிப்பேரா......!” என்றான் அவர் முழுவதும் சொல்லுவதற்குள் துடிப்பாக.

“இல்லை. விலைக்கு வந்திருக்கிறது. அதை என்ன விலைக்கு வாங்கலாமென்று உங்களை மதிப்புக் கேட்க வந்தேன்” என்றார் ஒரு கைக் கடிகாரத்தை எடுத்து அவனிடம் காட்டி.

அவன் கடிகாரத்தை வாங்கிப் பார்த்து விட்டு ஐம்பது ரூபாய்வரை தாராளமாகக் கொடுக்கலாம்” என்றான்.

அந்த மனிதர் தயங்கியபடியே சிறிது நேரம் இருந்துவிட்டு, “இதை நீங்கள் எப்படியாவது விற்றுக் கொடுக்கிறீர்களா......!” என்றார் மிகவும் பணிவோடு.

“இது உங்கள் கடிகாரமா! நீங்கள் வேறு யாரிடமிருந்தோ விலைக்கு வாங்கப் போவதாகச் சொன்னீர்களே! இதை எதற்காக விற்க வேண்டும்! இது நல்ல கடிகாரமாச்சே......!” என்றான்.

“ஏதோ கஷ்டம்தான். என்ன செய்வது! பணமுடை. நாளையதினம் என் தாயார் சிராத்தம். கையில் தம்பிடிகூட இல்லை!” என்று உள்ள நிலைமையை மறைக்காமல் அவனிடம் கூறிவிட்டார்.

கடேசன் அவரை அனுதாபத்தோடு பார்த்தான். “சிராத்தமா! மனிதன் வயிற்றுப்பாட்டுக்குத் திண்டாடும் போது, அவனுக்கு இந்தமாதிரித் தொல்லை யெல்லாம் வேண்டாம், சார்...” என்றான்.

“அப்படிச் சொல்லாதீர்கள். நாம் நம்முடைய பெற்றோர்களை வருடத்தில் ஒரு நாளாவது நினைக்கவேண்டாமா! அவர்கள் இறந்துவிட்டாலும், அவர்களை நினைத்து ஏதாவது செய்தால்தான் ஆத்ம திருப்தி ஏற்படுகிறது. ஜீவனத்திற்கே கஷ்டப்படுகிறோம் என்பது உண்மைதான். ஆனால் எனக்குத் தாயாரின் சிராத்தத்தை விடக் கடிகாரம் கட்டிக் கொள்வது முக்கியமாகப் படவில்லை......” என்றார்.

“ஹூம்......சரி. இந்தக் கடிகாரத்தை நீங்கள் வாங்கப் போகிறீர்கள் என்று சொன்னதால் ஐம்பது ரூபாய் கொடுக்கலாமென்று சொன்னேன். இது உங்கள் கடிகாரமாக இருந்து விற்பதாயிருந்தால் எண்பது ரூபாய் வரை நானே விற்றுத் தருவேன். அதற்கு மனிதர் இருக்கிறார். கடிகாரத்தை என்னிடம் கொடுத்து விட்டுப் போனால், நாளையதினம் நான் பணம் வாங்கி வைக்கிறேன்” என்றான்.

அவர் கடிகாரத்தை அவனிடம் கொடுத்துவிட்டுச் சென்றார்.

மறுநாள் அவருடைய கடிகாரத்தை ஒருவரிடம் எண்பது ரூபாய்க்கு விற்று விட்டு அவரிடம் பணத்தைக் கொடுத்தான் கடேசன். நாளடைவில் அவர்களிருவருக்கும் நெருங்கிய நட்பு ஏற்பட்டது.

அவர் பெயர் சீதாராமய்யர். அவருடைய பெண்தான் ஜானகி. சில மாதங்களாக அவருக்கு உத்தியோகம் இல்லாததால் குடும்பம் ஏழ்மை நிலையில் உழன்று வந்தது. அவருடன் கடேசனுக்கு நெருங்கிய பழக்க மேற்பட்டதால் அவருடைய குடும்ப நிலவரங்களை யெல்லாம் தெரிந்து கொண்டான். அடிக்கடி அவருடைய வீட்டிற்குப் போகக்கூடிய சந்தர்ப்ப மேற்பட்டதினால், அவனுக்கு ஜானகியிடம் ஏற்பட்ட காதல் அதிகமாயிற்று. அவனுடைய மனப்போக்கிலும் பழக்க வழக்கங்களிலும் சிறிது மாறுதல் காணப்பட்டது.

எப்படியாவது சீதாராமய்யரிடமோ, ஜானகியிடமோ தன் மனத்திலுள்ளதைச் சொல்ல வேண்டுமென்று நினைத்தான். ஆனால் அதற்கேற்ற சந்தர்ப்பம் அவனுக்குக் கிடைக்கவில்லை.




ஒருநாள் சீதாராமய்யர் அவனிடம் தன் குடும்பக் கஷ்ட நிலைமையைச் சொல்லிக் கொண்டிருந்தார்.

“நீங்கள் இவ்வளவு கஷ்டப் படுகிறீர்களே! இந்தக் கஷ்டத்தில் உங்கள் பெண் ஜானகிக்கு எப்படிக் கல்யாணம் செய்யப் போகிறீர்கள்!” என்றான் மிகவும் பரிவும் விசாரமும் உள்ளவன் போல்.

அவரும் அவன் இப்படி ஏதாவது கேட்க மாட்டானா என்று எதிர் பார்த்தவர் போல், “அதற்கு, உங்களைப் போன்றவர்களுக்கெல்லாம் தயவு பிறந்து விட்டால் கஷ்டமே இருக்காது...” என்றார்.

“இதில் என்னால் ஆகக் கூடியது ஏதாவதும் செய்யச் சித்தமாய் இருக்கிறேன்...” என்றான்.

“இப்படி யார் சொல்லப் போகிறார்கள்! சரி, நீங்கள் உங்கள் ஜாதகத்தைக் கொடுங்கள் போதும்” என்றார் அவர்.

நடேசனுக்கு அவர் சொல்லிய வார்த்தையின் பொருள் விளங்கினாலும், தெளிவாகத் தெரிந்து கொள்ள முடியாதவன் போல் அவர் முகத்தைப் பார்த்தான்.

"என் பெண் ஞானத்தைக் கல்யாணம் செய்து கொள்ள உங்களுக்கு இஷ்டம் தானே......!" என்றார் அவர் ஒருவிதமாகச் சிரித்துக் கொண்டே.

"எனக்கு இஷ்டம்தான்.........ஆனால் எனக்கு ஜாதகம் பார்க்கிற விஷயத்திலெல்லாம் நம்பிக்கை இல்லையே......" என்றான் தன் கொள்கையை விட்டுக் கொடுக்க இஷ்டப்படாதவன் போல்.

"உங்களுக்கு நம்பிக்கை இல்லாத விஷயங்களெல்லாம் எனக்குத் தெரியும். இருந்தாலும் கல்யாணப் பேச்சை ஆரம்பிப்பதற்கு வியாஜமாக இப்படி ஏதாவது செய்ய வேண்டியிருக்கிறது. ஜாதகமில்லாவிட்டால் பாதகமில்லை. சகுனப் பொருத்தமாவது பார்த்துச் செய்தால்தான் எங்கள் மனத்துக்குத் திருப்தி ஏற்படும்..." என்று அவர் சொல்லிக் கொண்டிருக்கும் போது, அங்கு பழுது பார்ப்பதற்காக வந்திருக்கும் சுவர்க் கடிகாரம் ஒன்று மணி அடிக்கத் தொடங்கியது.

"அடடே! மணியடிக்கிறது பெரிய சகுனம். இனிமேல் எதைப் பற்றியுமே யோசிக்க வேண்டியதில்லை. நான் பார்க்க வேண்டியதுதான்......" என்றார் சீதாராமய்யர் உற்சாகத்தோடு.

அப்பொழுது அவனுக்குக் கூட ஒரு அசட்டு நம்பிக்கை ஏற்பட்டது. அந்தக் கடிகாரம் அன்று நல்ல வகையில் அவனுக்கு உதவி செய்தது. அந்த மனிதர் வேறு வகையில் சகுனம் பார்க்கப் போய் அது கோணலாக முடிந்தாலும் முடியலாமல்லவா! அப்படி நேர்ந்தால் அவனுடைய ஆசை யெல்லாம் வீணாகிவிடுமல்லவா!

## நானும் சிரிக்கிறேன்!






இதற்காக அவன் கடவுளை வாழ்த்தாவிட்டாலும், நல்ல சமயத்தில் சகுனம் கொடுத்த அந்தக் கடிகாரத்தை வணங்குவதற்குத் தயாராயிருந்தான்!

வெகு சீக்கிரத்தில் நடேசனுக்கும் ஞானத்துக்கும் விவாகம் நடந்தது. இதனால் அவனுடைய வாழ்க்கையில் ஒரு மாறுதல் ஏற்பட்டது என்று சொல்வதைவிட, ஒரு மலர்ச்சி ஏற்பட்டது என்று சொல்வது மிகவும் பொருத்தமாயிருக்கும்.

* * *

ஞானம் துளசி மாடத்தைச் சுற்றி நமஸ்காரம் செய்தாள். அவளையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்த நடேசன் சிரித்துக்கொண்டே, "இதெல்லாம் எதற்காக ஞானு! உன்னைப்போன்ற விஷயம் தெரிந்த பெண்களுக்குக்கூட இந்தப் பைத்தியக்காரத்தனமெல்லாம் விடவில்லையே......!" என்றான்.

"நான் பைத்தியக்காரியாக இருந்தால் இருந்துவிட்டுப் போகிறேன். நீங்கள் நல்ல சித்தத்துடன் இருந்தால் போதும். நீங்கள் நன்றாக இருந்தால் எனக்குத்தானே நல்லது. அதற்காகத்தான் இதெல்லாம் செய்கிறேன்..." என்றாள் சிரித்துக்கொண்டே.

அவள் சிரித்துக் கொண்டே சொல்லிய வார்த்தை அவனுடைய சிந்தனையை வேறுவகைக் கிளறி விட்டது.

மூட பக்தியாக இருக்கலாம்; அர்த்தமற்ற பழக்க வழக்கங்களாக இருக்கலாம். ஆனால் அவையெல்லாம் மனிதனின் நலனுக்காகத்தான் செய்யப் படுகின்றன. அதில் ஒரு நம்பிக்கை வளருகிறது. அதில்தான் அன்பு, பாசம், கடமை, காதல், இன்பம் எல்லாம் வளர்ந்து பெருகி வாழ்வை வாழ்விக்கின்றன. இவைகளெல்லாம் இல்லாவிட்டால், உலகில் துளிக்கூடச் சந்தோஷமும் இன்பமும் இல்லாமல் வறண்டு போனாலும் போய்விடலாம்.

சில எண்ணங்கள் மனத் தூய்மை ஏற்படுவதற்கு, கோவிலுக்குச் செல்லுவது, இறைவனை வணங்குவது, பூஜை செய்வது இவையெல்லாம் சாதனங்களாக இருக்கலாம் அல்லவா! அவற்றில் நம்பிக்கை இல்லை யென்று சொல்லக் கூடிய யோக்கியதை தனக்கு இருக்கிறதா!

இந்த உண்மையெல்லாம் அவன் சிந்தையில் சுழன்று சுழன்று வந்தன.

சிற்பக் கலை
அற்புதங்கள் —1




காஞ்சி கைலாசநாதர்
கோயில் சிற்பம்

கல்கி தீபாவளி மலர் 1952

# புன்னைவனத்துப் புலி

## கல்கி

### முன்னுரை

திருவளர் செல்வன் சந்திர சூடனுக்குத் திருமணம் நடக்கப் போகிறது என்று அறிந்த போது அவனுடைய நண்பர்கள் பலரும் அடைந்த வியப்புக்கு அளவில்லை. ஏனெனில், சந்திரசூடன் நெடுங்காலமாகக் "கலியாணம் என்ற பேச்சையே என் காதில் போட வேண்டாம்" என்று சொல்லிக் கொண்டிருந்தான். அவ்வளவு எளிதில் அவனுடைய நண்பர்கள் அவனை விட்டு விடுகிறதாக இல்லை. அவன் கேட்க விரும்பவில்லை என்று சொன்ன வார்த்தையையே ஓயாமல் அவன் காது செவிடுபடும்படி டமாரம் அடித்துச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். "இப்படி எத்தனையோ விசுவாமித்திரர்களைப் பார்த்து விட்டோம்!" என்று அவனைக் கேலி செய்துகொண்டுமிருந்தார்கள். இத்தகைய நண்பர் கூட்டத்தில் சந்திரசூடன் அகப்பட்டுக் கொள்ளும்போது, "ஒருவேளை நான் புத்தி தடுமாறிக் கலியாணம் செய்து கொண்டாலும் இந்தியா தேசத்தின் ஜனத் தொகையை மட்டும் பெருக்க மாட்டேன்" என்று சில சமயம் சொல்லுவதுண்டு. சொல்லுவதுடன் நின்று விடாமல் அவன் கர்ப்பத் தடை முறைகளைப் பற்றிய விஞ்ஞான ரீதியான இலக்கியங்கள், அதே விஷயத்தைச் சுற்றி வளைக்காமல் அப்பட்டமாகச் சொல்லும் நூல்கள், - இவற்றை யெல்லாம் வாங்கிப் படித்தும் வந்தான்.

அத்தகைய சந்திரசூடன் இப்போது திருமணம் செய்து கொள்ளப் போகிறான், அதிலும் ஏற்கெனவே குழந்தை உள்ள ஒரு பெண்மணியைக் கலியாணம் செய்து கொள்ளப் போகிறான் என்றால், அவனை அறிந்தவர்கள் ஆச்சரியக் கடலில் மூழ்கித் தத்தளிப்பது இயல்பே யல்லவா?

அத்தகைய பரிகாசத்துக் கிடமான காரியத்தை அவன் செய்ய முன் வந்ததின் காரணத்தை அறிந்து கொள்ள அவனுடைய நண்பர்கள் ஆசைப்பட்டதிலும் அவ்வளவு வியப்பில்லை அல்லவா?



திருமணக் கடிதத்தைப் பார்த்ததிலிருந்து அவனைக் கண்டு பிடித்து நெருக்கு நேர் கேட்டு விடுவதென்று பலரும் துடியா யிருந்தார்கள். அவர்களில் நானும் ஒருவன். கடைசியாக அவனை ஒருநாள் கையும் மெய்யுமாகப் பிடித்து "அப்பனே! இந்த விபத்தில் எப்படி அகப்பட்டுக் கொண்டாய்? உண்மையைச் சொல்லி விடு!" என்றேன். "சொல்லாவிட்டால் நீர் விடப் போகிறீரா? ஏதாவது கதையும் கற்பனையுமாகச் சேர்த்து எழுதித் தள்ளி விடுவீர். அதைக் காட்டிலும் நானே சொல்லி விடுவது நல்லது" என்றான்.

"அப்படியானால், கதையாக எழுதுவதற்குத் தகுதியானது என்று ஒப்புக் கொள்ளுகிறாயா?" என்று கேட்டேன்.

"எல்லாம் கதையினால் வந்த விபத்துத்தான்! முழுக் கதைகூட அல்ல; பாதிக் கதையினால் வந்த ஆபத்து. 'தீபம்' என்னும் மாதப் பத்திரிகையில் பாதிக் கதைப் போட்டி ஒன்று நடத்தினார்களே? ஞாபகம் இருக்கிறதா?" என்றான் சந்திரசூடன்.

ஆம்; அது என் ஞாபகத்தில் இருந்தது.

"தீபம்" பத்திரிகையில் அத்தகைய போட்டி ஒன்று சில காலத்துக்கு முன்பு நடத்தினார்கள். ஓர் இதழில் "விமான விபத்து" என்ற தலைப்புடன் ஒரு பாதிக் கதையை வெளியிட்டார்கள். அதைப் பூர்த்தி செய்யும்படி வாசக நேயர்களைக் கேட்டுக் கொண்டிருந்தார்கள். இந்தப் போட்டிக்கு வரும் பிற்பகுதிக் கதைகளில் சிறந்ததைப் பத்திரிகையில் வெளியிடுவதுடன், அதற்கு நூறு ரூபாய் சன்மானம் கொடுப்பதாகவும் அறிவித்திருந்தார்கள்.

இந்த அறிவிப்பு வெளியான இரண்டு மாதங்களுக்குப் பிறகு, பரிசு பெற்ற பிற்பகுதிக்கதையும் மேற்படி பத்திரிகையில் வெளியாகி யிருந்தது.

கதையை அச்சமயம் மேலெழுந்தவாரியாகப் படித்திருந்தேன். ஓர் ஆகாச விமானம் பிரயாணப் பட்டுச் சென்றது; ஆனால் குறித்த இடத்துக்குப் போய்ச் சேரவில்லை. பிரயாணிகளுடன் மாயமாய் மறைந்து விட்டது. எங்கேயோ மேற்கு மலைத் தொடரில் மனித சஞ்சாரத்துக்கு அப்பாற்பட்ட இடத்தில் விழுந்து எரிந்து போயிருக்க வேண்டும் என்று அநுமானிக்கப்பட்டது. இதுதான் கதையின் முக்கிய சம்பவம். இம்மாதிரி ஒரு துர்ச் சம்பவம் உண்மையாகவே சில காலத்துக்கு முன்பு நிகழ்ந்திருந்தது.

இதையெல்லாம் ஞாபகப்படுத்திக் கொண்டு, "ஆமாம்; அந்தப் பாதிக் கதைப் போட்டிக்கும் உன் கலியாணத்துக்கும் என்ன சம்பந்தம்?" என்று கேட்டேன்.

சந்திர சூடன் அந்தச் சம்பந்தம் இன்னதென்பதை விவரமாகச் சொல்லித் தீர்த்தான். சொல்லாமற் போனால் யார் விடுகிறார்கள்?

# 1

பாண்டிய நாட்டையும் மலையாள தேசத்தையும் பிரித்து நிற்கும் நீண்ட மேற்கு மலைத் தொடர் ஒவ்வோரிடத்தில் ஒவ்வொரு பெயருடன் விளங்குகிறது. இந்த மலைத் தொடரை எந்த இடத்திலே பார்த்தாலும் அதன் இயற்கை வனப்பு அற்புதமாக இருக்கும். எனினும், நாகலாபுரம் மலைச் சாரலின் சௌந்தரியத்துக்கு ஒப்புவமை இல்லை என்று அந்தப் பகுதியைப் பார்த்தவர்கள் சொல்வார்கள். அங்கே இயற்கை அரசி பசும்பொன் சிங்காதனத்தில், நீலப் பட்டாடை உடுத்தி, நவரத்தின மாலைகளை அணிந்து, மணி மகுடம் தரித்து, செம்பவள இதழ்களின் வழியாக முத்து நகை புரிந்து, கருங்குவளைக் கண்களில் கருணை ஒளி வீசியவாறு வீற்றிருக்கிறாள் என்று கவிதா ரஸிகர்கள் வர்ணனை செய்வார்கள். மலையும், காடும், அருவியும், பொய்கையும், பல நிற மலர்களும் அப்படி ஒரே வர்ண ஜாலமாகக் காட்சி அளிக்கும்.

அத்தகைய நாகலாபுரம் மலைச் சாரலை யொட்டி எத்தனையோ கிராமங்கள் உண்டு. அவற்றில் புன்னை வனம் என்னும் கிராமம் பிரசித்தமானது. அது கிராமந்தான் என்றாலும், பட்டணவாசத்தின் வசதிகள் எல்லாம் அங்கு உண்டு. புன்னைவனத்துக்குக் கொஞ்ச தூரத்தில் பெரிய நீர்த் தேக்கம் ஒன்று இருக்கிறது. அதிலிருந்து விழும் அருவியைக் கொண்டு மின்சார சக்தி உற்பத்தி செய்கிறார்கள். எப்போது மின்சார வசதி இருக்கிறதோ, அப்போது பட்டண வாசத்தின் சகல சௌகரியங்களையும் ஏற்படுத்திக் கொள்ளலாம் அல்லவா?

வருஷத்தில் ஒன்பது மாதம் புன்னைவனம் கிராமமாகத் தோற்றமளிக்கும். சாரல் காலத்தில் அதாவது ஜூன் மாதம் முதல் ஆகஸ்டு முடியும் வரையில் அது நகரமாக மாறிவிடும். (ஜன நெருக்கத்தை அவ்வளவாக விரும்பாத 'ரிஸார்ட்டுக்காரர்கள்' அந்த மூன்று மாதமும் அது 'நரக'மாக மாறிவிடும் என்பார்கள்.) அந்த மூன்று மாதங்களிலும் தென்னிந்தியாவின் பல பகுதிகளிலிருந்தும் ஜனங்கள் தேக சுகத்தையும் மன உல்லாசத்தையும் தேடிப் புன்னை வனத்துக்கு வருவார்கள்.

சென்ற வருஷத்தில் சந்திரகுடனுக்கு அம்மாதிரி தேக சுகத்தையும் மன அமைதியையும் தேடி எங்கேனும் போக வேண்டிய அவசியம் ஏற்பட்டது. உதக மண்டலம், கோடைக்கானல், குற்றாலம் முதலிய இடங்களைப் பற்றி யோசித்து, பல காரணங்களினால் அவற்றை ஒதுக்கி விட்டு, புன்னைவனம் போவதென்று முடிவு செய்தான். அம்மாதிரி அவன் முடிவு செய்ததற்குச் சிற்சில முக்கிய காரணங்கள் இருந்தன. ஒன்று, புன்னை வனத்தின் இயற்கை எழிலைப் பற்றி ஒரு சிநேகிதன் மூலமாக அவன் கேள்விப் பட்டிருந்தது. இரண்டாவது காரணம், அங்குள்ள ஓட்டல்களில் நல்ல சாப்பாடு கிடைக்கும் என்பது. மூன்றாவது காரணம், சில நாளைக்கு முன்னால் "புன்னை வனத்துப் புலி" என்ற தலைப்புடன் தினப் பத்திரிகைகளில் வெளியான செய்திகள்.

நாகலாபுரம் மலையின் உட்பகுதிகளில் துஷ்ட மிருகங்கள் எப்போதுமே உண்டு. ஆனால் மலையை யொட்டிக் கீழே யுள்ள கிராமங்களுக்கு அவை வருவது அபூர்வம். அப்படி அபூர்வமாக ஒரு புலி புன்னைவனத்தில் ஒரு நாள் காணப் பட்டதாகவும், பின்னர் அடிக்கடி அங்கு மீண்டும் தோன்றி ஆடுமாடுகளைக் கொன்று வருவதாகவும், அதைச் சுட்டுக் கொல்லுவதற்குச் செய்யப்பட்ட முயற்சிகள் இதுவரையில் பலிக்கவில்லை யென்றும் தினப் பத்திரிகைகளில் செய்திகள் வெளியாகி யிருந்தன. சந்திரகுடன் கலாசாலை மாணுக்கனு யிருந்தபோது இராணுவப் பயிற்சிப் படையில் சேர்ந்து துப்பாக்கியை உபயோகிக்கக் கற்றுக் கொண்டிருந்தான். அப்படிப் பயின்ற வித்தையைக் காரியத்தில் பயன் படுத்துவதற்கு இப்போது ஒரு சந்தர்ப்பம் கிடைத்திருப்பதாக எண்ணினான். புன்னைவனத்துப் புலி தன் துப்பாக்கிக்கு இரையாவதற்காகவே மலைமேலிருந்து கீழே இறங்கி வந்திருக்கிறது என்று முடிவு செய்து கொண்டு கிளம்பினான்.

'நாகலாபுரம் சாலை' என்னும் ரயில் நிலையத்தில் இறங்கி முப்பது மைல் தூரம் பஸ்ஸில் பிரயாணம் செய்து புன்னை வனத்தை அடைந்தான். அந்த ஊர் அவனுக்கு ரொம்பப் பிடித்திருந்தது. அதைப் பற்றி அவன் கேள்விப் பட்டிருந்ததை யெல்லாம் விட அமைதியும் அழகும் இனிமையும் எழிலும் பொருந்தி யிருந்தது. இனிய புனல் அருவி அங்கே தவழ்ந்து விளையாடியது. இன்ப மலைச் சாரல்களில் தென்றல் உலாவியது. கனிகுலவும் சோலைகளில் கருவண்டு பண் இசைத்தது. புன்னை மரங்களின் கீழ்ப் பூப் படுக்கை விரித்திருந்தது. அமுத நீர்ப் பொய்கைகளில் குமுத மலர் செழித்திருந்தது. அவன் தங்கி யிருந்த ஹோட்டலில் சாப்பாடும் முதல்தரமா யிருந்தது. சென்னையிலுள்ள பாங்கிக்காரர்கள் மட்டும் கொஞ்சம் தாராள புத்தியுடன் தான் கேட்கும் போதெல்லாம் பணம் அனுப்பிக் கொண்டிருந்தால், புன்னை வனத்திலேயே தன் வாழ்நாளைக் கழித்து விடலாம் என்று சந்திரகுடன் எண்ணமிட்டான்.

இரண்டு தினங்கள் இவ்விதமாக ஊரைச் சுற்றிப் பார்ப்பதிலும் கற்பனைக் கனவுகள் காண்பதிலும் கழிந்தன. மூன்றாம் நாள் புன்னை வனம் தபால் ஆபீஸுக்குச் சென்றான். கையில் கொண்டு வந்திருந்த பணம் துரிதமாகக் குறைந்து கொண்டு வந்தது. மேலும் பணம் தருவித்துக் கொள்ளச் சென்னைக்குக் கடிதம் எழுத வேண்டும். அதோடு, தனக்கு ஏதேனும் தபால் வந்திருக்கிறதா என்றும் விசாரிக்க வேண்டும். தபால்களைக் காட்டிலும் அதிக ஆவலுடன் 'தீபம்' பத்திரிகையின் அந்த மாதத்து இதழை அவன் எதிர்பார்த்தான். 'விமான விபத்து' என்னும் பாதிக் கதையின் முடிவு என்ன என்று தெரிந்து கொள்வதில் அவனுக்கு அவ்வளவு ஆர்வம் இருந்தது. உண்மை என்னவென்றால், அந்தப் பாதிக்கதைப் போட்டியில் அவனும் கலந்து கொண்டிருந்தான். தான் எழுதிய பாதிக் கதையை ஒரு வேளை பத்திரிகைக்காரர் ஏற்றுக் கொண்டிருக்கலாம் அல்லவா? அப்படியானால் பணத்துக்குப் பணம் ஆயிற்று; புகழுக்குப் புகழ் ஆயிற்று. இல்லையென்றால், தன்னைவிட நன்றாக அந்தக் கதையைப் பூர்த்தி செய்தவர் யார்? எப்படிப் பூர்த்தி செய்திருக்கிறார்?—இதையெல்லாம் அறிந்து கொள்வதற்கு அவன் மிக்க ஆர்வம் கொண்டிருந்தான்.

தபால் ஆபீஸுக்குச் சந்திரகுடன் போய்ச் சேர்வதற்கும், தபால் கட்டு வந்து சேர்வதற்கும் சரியா யிருந்தது. அவனைப்போல் இன்னும் இரண்டொரு புது மனிதர்களும் அங்கே வந்து காத்திருந்தார்கள். சந்திரகுடன் போஸ்டுமாஸ்டரிடம் தன் பெயரைச் சொல்லி "ஏதாவது தபால் இருக்கிறதா?" என்று கேட்டான். போஸ்டு மாஸ்டர் தேடிப் பார்த்து ஒரு தபாலையும் ஒரு சஞ்சிகையையும் எடுத்துக் கொடுத்தார். சஞ்சிகை 'தீபம்' பத்திரிகையின் அந்த மாத இதழ்தான். சந்திர குடனுக்கு இருந்த பரபரப்பில், தபாலைக் கூடக் கவனியாமல் சஞ்சிகையைப் பிரித்துப் புரட்டினான். அவன் எதிர்பார்த்தபடியே "விமான விபத்து" கதையின் இரண்டாம் பகுதி அதில் வெளியாகி யிருந்தது. அவன் எழுதியது அல்ல என்று பார்த்தவுடனே தெரிந்து போய் விட்டது. பரிசு பெற்ற கதைப் பகுதி அவ்வளவு என்ன பிரமாதமாக அமைந்திருக்க முடியும் என்ற எண்ணத்துடன், நின்றபடியே, அதைப் படிக்கத் தொடங்கினான்.

ஏறக்குறைய படித்து முடிக்கும் சமயத்தில் ஒரு பெண்மணி அங்கே வந்தாள். தனக்கு ஏதாவது தபால் உண்டா என்று விசாரித்தாள். இல்லை என்று அறிந்ததும் அவள் பெரிதும் ஏமாற்ற மடைந்ததாகத் தோன்றியது.

"தயவுசெய்து நன்றாய்ப் பாருங்கள், ஸார்! 'தீபம்' பத்திரிகை என் பெயருக்கு ஒன்று வந்திருக்க வேண்டுமே?" என்று கெஞ்சும் குரலில் கூறினாள்.

"இல்லை, அம்மா! ஒரே ஒரு 'தீபம்'தான் வந்திருந்தது. அதில் இவருடைய விலாசம் எழுதியிருந்தது. கொடுத்து விட்டேன்!" என்று, போஸ்ட்மாஸ்டர் சந்திரகுடனைச் சுட்டிக் காட்டினார்.

உடனே அந்தப் பெண்ணின் பார்வை சந்திரகுடன் மீது சென்றது. அவன் கையில் விரித்து வைத்திருந்த பத்திரிகையை அருவை கலந்த ஆர்வத்துடன் நோக்கினாள்.

சந்திரகுடனுடைய கவனத்தில் ஒரு பகுதி, பத்திரிகைக் கதையில் சென்றிருந்தது. மற்றொரு பகுதி அந்தப் பெண் மணி தபாலாபீஸுக்குள் வந்ததிலிருந்து நிகழ்ந்தவைகளை மனதில் வாங்கிக்கொண்டிருந்தது. அவள் தன் கையிலிருந்த பத்திரிகையை ஆசையுடன் பார்க்கிறாள் என்று அறிந்ததும், உடனே படிப்பதை நிறுத்தி விட்டு, "தங்களுக்குத் 'தீபம்' வேண்டுமானால், இதையே எடுத்துக் கொள்ளலாமே?" என்று கூறிப் புன்னகை புரிந்தான்.

அந்தப் பெண் ஒரு சில வினாடி நேரம் தயங்கி நின்று விட்டு, "ஆம்; அதில் ஒரு விஷயம் பார்க்க வேணும். கொடுத்தால் இங்கேயே பார்த்து விட்டுத் தந்து விடுகிறேன்" என்றாள்.

"அவ்வளவு அவசரம் ஒன்றுமில்லை. தாங்கள் வீட்டுக்கு எடுத்துப் போய்ச் சாவகாசமாய்ப் படிக்கலாம். தங்கள் ஜாகை எங்கே என்று சொன்னால், நானே வந்து திரும்ப வாங்கிக் கொள்கிறேன்" என்றான் சந்திரகுடன்.

அந்தப் பெண் தபால் ஆபீஸின் பலகணி வழியாகச் சுட்டிக்காட்டி, "அதோ, அங்கே தான் என் வீடு! போஸ்ட் மாஸ்டரின் வீட்டுக்கு அடுத்த வீடு!...அல்லது, தாங்கள் இருப்பிடத்தைச் சொன்னால் பத்திரிகையை அனுப்பி விடுகிறேன்" என்றாள்.

"வேண்டாம், வேண்டாம்! அவ்வளவு சிரமம் தங்களுக்கு வேண்டாம். நானே வந்து வாங்கிக் கொள்கிறேன்" என்றான் சந்திரகுடன்.

"மிக்க வந்தனம். காலை பத்து மணி வரையில் வீட்டில் இருப்பேன். பிறகு பள்ளிக்கூடம் போய்விட்டு மாலை ஐந்து மணிக்குத் திரும்பி வருவேன்" என்று சொல்லிவிட்டு அந்தப் பெண் பத்திரிகையை எடுத்துக்கொண்டு சென்றாள்.

## 2

**ச**ந்திரகுடன் அவள் போவதைப் பலகணி வழியாகப் பார்த்துக் கொண்டிருந்தான். நடக்கும் போதே அவள் பத்திரிகை படித்துக் கொண்டு போனதைக் கவனித்தான். ஒரு தடவை கூட அவள் திரும்பிப் பார்க்கவில்லை. அந்தப் பெண்ணின் கவனத்தை அவ்வளவு தூரம் கவரக் கூடிய விஷயம் 'தீபம்' பத்திரிகையில் என்னதான் இருக்கும் என்று அதிசயித்தான்.

இதற்குள் தபால் வாங்குவதற்காக அங்கு வந்திருந்த மற்ற இரண்டொருவரும் போய் விட்டார்கள்.

சந்திரகுடன் தொண்டையைக் கனைத்துக் கொண்டு போஸ்டு மாஸ்டரைப் பார்த்து, "பெண்களுக்குப் படிப்பில் ருசி உண்டாகிவிட்டால் ஒரே பைத்தியமாகப் பிடித்துக் கொள்கிறது. இந்தப் பெண்ணுக்குத் 'தீபம்' பத்திரிகையின் மீது எவ்வளவு ஆர்வம்? அப்படியொன்றும் அதில் பிரமாதமான விஷயமும் இல்லை!" என்றான்.

"மிஸ் மனோன்மணிக்குப் படிப்பில் ஆர்வம் அதிகம் தான்! அதிலும் இந்த மாதத்துத் 'தீப'த்தில் அவள் அதிக ஆர்வம் கொள்வதற்கு முக்கிய காரணம் இருக்கிறது" என்றார் போஸ்ட்மாஸ்டர்.

"அப்படியா? அந்தக் காரணம் என்னவோ?"

"அதில் ஒரு பாதிக் கதைப் போட்டி வைத்திருந்தார்கள் அல்லவா? அதற்கு இந்தப் பெண்ணும் எழுதியிருந்தாள் போலிருக்கிறது."

"ஓஹோ! அதுதானே நானும் பார்த்தேன்!... மிஸ் மனோன்மணி பிரசித்தமான எழுத்தாளியோ? இங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாள்? ஏதோ பள்ளிக்கூடம் போவதாகச் சொன்னாளே?"

"இந்த ஊரில் உள்ள பெண் பள்ளிக்கூடத்தில் உபாத்தியாயினியாயிருக்கிறாள். சம்பளம் சொற்பம். வீட்டிலே கிழவர்கள் இருவர்; ஒரு நொண்டிக் குழந்தை. இவளுடைய சம்பாத்தியத்திலே தான் காலட்சேபம் நடக்க வேணும். தபால் இலாகா, கல்வி இலாகா—இரண்டுந்தான் தெரிந்த விஷயம் ஆயிற்றே? ஊருக்கு இளைத்தவர்கள் நாங்கள். ஒழிந்த வேளையில் பத்திரிகைகளுக்கு எழுதினால் ஏதாவது கிடைக்காதா என்று இந்தப் பெண்ணுக்கு எண்ணம். 'தீபம்' பாதிக் கதைப் போட்டியில் மனோன்மணிக்குப் பரிசு வந்திருக்கிறதோ என்னமோ தெரியவில்லை. இதிலாவது அவள் ஏமாற்ற மடையாமலிருந்தால் சரி. அந்தப் பெண் சிரித்துச் சந்தோஷமாயிருந்ததை நான் பார்த்ததே யில்லை. ஆறு மாதமாகப் பக்கத்து வீட்டில் தான் இருக்கிறேன்."

"ஐயோ பாவம்! வாழ்க்கையில் துன்பப் பட்டவள் போலிருக்கிறது. என்ன கஷ்டமோ, என்னமோ?"

"அதுதான் பெரிய மர்மமாயிருக்கிறது. 'மிஸ்' என்று சொல்லிக் கொள்கிறாள். வீட்டில் நாலு வயது நொண்டிக் குழந்தை ஒன்று வளர்கிறது. இவளை 'அம்மா' என்று அழைக்கிறது. புருஷனால் நிராகரிக்கப்பட்டவள் என்று ஒரு வதந்தி. 'விதவை' என்றும் சிலர் சொல்கிறார்கள். வேறு ஏதாவது கன்றாவியாயிருந்தாலும் இருக்கலாம். யார் கண்டது? உலகம் வரவரக் கெட்டுப் போய் வருகிறது. நாகரிகம் முற்றிக் கொண்டு வருகிறது. பண்ணையார் சங்கர சேதுராயருடைய கலிகாரப் பையன் ஒருவன் இந்தப் பெண்ணை இப்போது சுற்றத் தொடங்கியிருக்கிறான். அவனைப் பார்த்தாலே 'கில்லாடி' என்று தெரியும். இந்த ஊருக்கு நீங்கள் புதியவர்தானே!"

"ஆம், ஐயா!"

"புன்னை வனத்தின் அழகு வேறு எந்த ஊருக்கும் வராது. ஆனால் கொஞ்சம் பொல்லாத ஊர். ஜாக்கிரதையாக இருக்க வேணும். போதாததற்குப் புலி ஒன்று வந்து கழுத்தை அறுக்கிறது!"

"நான் கூடப் பத்திரிகையில் படித்தேன். அந்தப் புலியை இன்னும் யாரும் கட்டுக் கொல்ல வில்லையா?"

"அது ரொம்பக் கெட்டிக்காரப் புலியாயிருக்கிறது. துப்பாக்கியை எடுத்துக் கொண்டு வேட்டையாடுகிறேன் என்று வருகிறவர்களின் கண்ணில் மட்டும் அது அகப்படுவதே யில்லை..."

"அப்படி ரொம்பப் பேர் வந்திருக்கிறார்களோ?"

"அதோ பாருங்கள், ஒரு வேட்டைக்காரர் போகிறார்! பண்ணையாரின் கலிகாரப் புத்திரன் என்று சொன்னேனே, அவர்தான் இவர்! வெறுமனே புத்திரன் என்று சொன்னால் போதாது! 'புத்திர சிகாமணி' என்று சொல்ல வேண்டும்!" என்றார் போஸ்ட்மாஸ்டர்.

**ப**லகணியின் வழியாகச் சந்திரகுடன் பார்த்தான். பட்டை பட்டையாகச் சிவப்புக் கோடு போட்ட பனியன் ஒன்றை உடம்பை யொட்டி அணிந்திருந்த வாலிபன் ஒருவன் சாலையோரம் போய்க் கொண்டிருந்தான். அவனைப் பார்த்தாலே புலி வேஷக்காரன் மாதிரி இருந்தது. அவன் கையில் வெள்ளிப் பூண் போட்ட குட்டையான பிரம்பு ஒன்று இருந்தது. அதை அவன் சுழற்றிக் கொண்டே நடந்தான். அவனுக்குப் பின்னால், துப்பாக்கியும், மற்றும் வேட்டை சாமான்கள் அடங்கிய நீண்ட பை ஒன்றும் எடுத்துக் கொண்டு இன்னொருவன் பின் தொடர்ந்தான்.

"நீங்கள் சொன்ன புத்திர சிகாமணி முன்னால் போகிறவன் தானே!" என்று சந்திர குடன் கேட்டான்.

"ஆமாம்; பின்னால் போகிறவன் யாரோ முஸ்லிம் வாலிபன் என்று தோன்றுகிறது. அவன் கொஞ்ச நாளாகத்தான் இவனோடு போகிறான். புலி வேட்டையாடுவதற்கு இவனுக்கு ஒத்தாசையாக வந்திருக்கிறான் போலிருக்கிறது. இரண்டு பேரும் தினம் இந்த நேரத்துக்குத் துப்பாக்கி சகிதமாக மலைக்குப் போகிறார்கள். சாயங்காலம்

திரும்பி வருகிறார்கள். வரும்போது ஒரு முயல் குட்டி அல்லது நரிக்குட்டி அல்லது ஒரு பெருச்சாளியைப் பிடித்துக் கொண்டு வருகிறார்கள். புலி மட்டும் இவர்களிடம் அகப்படாமல் டிமிக்கி கொடுத்துக் கொண்டிருக்கிறது!..."

"இவனுடைய சுவீகாரத் தகப்பனார், யாரோ பண்ணையார் என்று சொன்னீர்களே, அவர் யார், ஸார்!"

"இந்தப் பக்கத்திலேயே பெரிய முதலாளி, பண்ணையார் சங்கர சேதுராயர்தான். அவருக்கு இரண்டாயிரம் ஏக்கரா நிலம் இருக்கிறது. அதில் ஐந்நூறு ஏக்கராவில் ஏலம் பயிரிட்டுப் பணத்தை அள்ளிக் குவிக்கிறார். ஆனால் பணம் மட்டும் இருந்து என்ன பிரயோஜனம்!"

"பாவம்! புத்திர பாக்கியம் இல்லையாக்கும்!"

"அது ஒரு கண்றாவிக் கதை. மகன் ஒருவன் இருந்தானாம். வெகு புத்திசாலியாம். சாதி விட்டுச் சாதியில் யாரோ ஒரு பெண்ணைக் காதலித்துக் கலியாணம் செய்து கொண்டானாம். 'இனிமேல் எனக்கு நீ மகன் இல்லை; என் முகத்தில் விழிக்காதே!' என்று பண்ணையார் அவனை வீட்டை விட்டுத் துரத்தி விட்டாராம்..."

"அப்புறம்?..."

"அப்புறம், பையன் திரும்பி வரவே யில்லை. கொஞ்ச காலத்துக்கு முன்னால் அவன் ஏதோ விமான விபத்தில் செத்தே போய் விட்டதாகக் கேள்வி. வேண்டுமென்றே உயிரை மாய்த்துக் கொண்டதாகவும் வதந்தி. அவனுக்குப் பதிலாகத்தான் இந்த 'சுப்ர தீப'மான புத்திரனைப் பண்ணையார் ஸ்வீகாரம் எடுத்துக் கொண்டிருக்கிறார்."

"சில பேருக்கு அப்படி அதிர்ஷ்டம் அடிக்கிறது!"

"அதிர்ஷ்டமாவது, மண்ணாங் கட்டியாவது! எல்லாம் நமது கையினாலாகாத அரசாங்கத்தினால் ஏற்படுவதுதான். என்னைக் கேட்டால், சுவீகாரம் எடுத்துக் கொள்ளுவதையே சட்ட விரோதமாக்க வேண்டும் என்று சொல்லுவேன். பிள்ளை இல்லாதவர்களின் சொத்துக்களை யெல்லாம் சர்க்கார் எடுத்துக் கொள்ள வேண்டும்!..."

"ஆமாம்; எடுத்துக் கொண்டு, தபாலாபீஸ் சிப்பந்திகளுக்குப் பிரித்துக் கொடுத்தாலும் பிரயோஜனம் உண்டு!"

இவ்விதம் போஸ்டு மாஸ்டர் மனம் குளிர ஒரு வார்த்தை சொல்லி விட்டுச் சந்திரசூடன் வெளியேறினான்.

## 3

**ம**று நாள் மாலை சந்திரசூடன் மிஸ் மனோன்மணியின் வீட்டுக்குப் போனான். சிறிது தயக்கத்துடனேதான் சென்றான். ஏனெனில், அதற்குள், பண்ணையார் சங்கர சேதுராயரின் சுவீகாரப் புதல்வன் மனோகரனைப் பற்றிச் சிறிது அவன் தெரிந்து கொண்டிருந்தான். மனோகரனும் பெரிய குடும்பத்தில் பிறந்தவன் தானாம். ஆனால் அந்தப் பெரிய குடும்பத்தின் சொத்துக்கள் எல்லாம் எப்படியோ காலியாகி விட்டன. இவன் பிறந்த வேளைதான் என்று சிலர் சொன்னார்கள். பங்களூரில் அவனுடைய தந்தை பெரிய அளவில் வியாபாரம் நடத்தி வந்தார். தடபுடலான நாகரிக வாழ்க்கையும் நடத்தி வந்தார். பையன் இளம் பிராயத்தில் பல வருஷம் பங்களூரில் கழித்தான். அங்கேதான் படித்தான். நவ நாகரிகத்துக்குரிய நடை உடைகள் எல்லாம் பயின்றான். வியாபாரத்தில் திடீரென்று நஷ்டம் ஏற்பட்டுத் தந்தை 'இன்ஸால்வெண்ட்' ஆனார். இந்த இக்கட்டான நிலைமையில்தான் புன்னைவனத்துப் பண்ணையாரிடமிருந்து அவனுக்கு அழைப்பு வந்தது. இரண்டு வருஷங்களாக இங்கேதான் இருந்து வருகிறான். சுவீகாரத் தந்தைக்கு மிக நல்ல பிள்ளையாக நடந்து வருகிறான். ஆனால், ஊரில் உள்ளவர்களிடையே அவனைப் பற்றி நல்ல அபிப்பிராயம் சொல்லுவார் இல்லை.

"அப்பேர்ப்பட்ட உத்தமமான பிள்ளையைப் பறி கொடுத்து விட்டு இந்த ஒன்றாம் நம்பர் கில்லாடியைப் பிள்ளையென்று தாலாட்டிச் சீராட்டுகிறாரே, பண்ணையார்! அவர் தலையில் எழுத்து அப்படி! இவனுக்கு அடித்த யோகம் இப்படி!" என்று சொன்னார்கள்.

இவ்விதம் பெயர் வாங்கிய மனோகரன் மிஸ் மனோன்மணியின் வீட்டுக்கு அடிக்கடி போவதுண்டு என்று அறிந்த பிறகு, சந்திரசூடனுக்கு அங்கே போவதில் தயக்கம் ஏற்பட்டது இயல்புதானே? ஆயினும், பத்திரிகையைத் திரும்பி வாங்கிக் கொள்ள வேண்டும்; வருகிறதாக





அவனிடம் சொல்லியும் ஆகிவிட்டது! ஆகையால், போய் விட்டு உடனே திரும்பிவிட வேண்டும் என்ற உறுதியுடன் சந்திரசூடன் சென்றான்.

சுற்றிலும் மதில் சூழ்ந்த ஒரு விசாலமான தோட்டத்தின் முன் பகுதியில் நாலு சின்னஞ்சிறு வீடுகள் ஒரே மாதிரியாகக் கட்டப்பட்டிருந்தன. யாரோ முதலாளி அந்த வீடுகளை வாடகைக்கு விடுவதற்காகவே கட்டியிருக்க வேண்டும் என்று பார்த்தவுடனே தெரிந்தது. அவற்றில், நேற்று மனோன்மணி சுட்டிக் காட்டிய வீட்டை நினைவு படுத்திக் கொண்டு சந்திரசூடன் அங்கே சென்றான்.

அந்த வீட்டின் வாசலில், கைவண்டி ஒன்றில், ஒரு குழந்தை உட்கார்ந்திருந்தது. கையில் ஒரு பொம்மையை வைத்துக் கொண்டு அத்துடன் பேசி விளையாடிக் கொண்டிருந்தது. இலட்சணமான குழந்தை; பிராயம் நாலு இருக்கும். சந்திர சூடனுக்குக் குழந்தைகள் என்றால் அவ்வளவாகப் பிரேமை இல்லைதான். குழந்தைக் குலத்தின் எதிரி என்று கூட அவனைச் சொல்லலாம். ஆயினும் இந்தக் குழந்தையிடம் ஏதோ ஒரு தனிக் கவர்ச்சி அவனை இழுத்தது. போகும் வழியில் ஒரு கணம் நின்று, "என்ன, பாப்பா! என்ன சேதி?" என்றான்.

குழந்தை அவனை நிமிர்ந்து பார்த்து, "என்ன, மாமா! என்ன சேதி?" என்று சொல்லிப் புன்னகை புரிந்தது.

"நீ ரொம்ப சமர்த்துப் பாப்பாவா யிருக்கயே?" என்றான் சந்திரசூடன்.

"நீங்க ரொம்ப சமர்த்து மாமாவா யிருக்கேளே?" என்றது குழந்தை.

"பலே! பலே!" என்றான் சந்திரசூடன்.

"சபாஷ்! சபாஷ்!" என்றது குழந்தை.

இதையெல்லாம் உள்ளே யிருந்து கேட்டுக் கொண்டே மனோன்மணி வெளியே வந்தாள். அவள் முகமலர்ச்சி, உள்ளத்தின் உவகையைக் காட்டியது.

"வாருங்கள், வாருங்கள்! ராஜ்மோகனுக்கு உங்களைப் பிடித்துப் போயிருக்கிறது. அதென்னமோ, சில பேருக்குத்தான் குழந்தைகளுடன் சிநேகமாயிருக்கும் வழி தெரிகிறது. வேறு சிலரைக் கண்டாலே குழந்தைகள் அலறத் தொடங்கி விடுகின்றன!" என்றாள் மனோன்மணி.

"ஆமாம்; குழந்தைகளுடன் சிநேகம் பிடிப்பது ஒரு தனி வித்தைதான்!" என்றான் சந்திர சூடன்.

வீட்டின் முன்புறத்தில் இருந்த சிறிய தாழ்வாரத்தில் இரண்டு பிரம்பு நாற்காலிகள் இருந்தன. அவற்றில் ஒன்றைக் காட்டி, "உட்காருங்கள்; இதோ, நீங்கள் கொடுத்த பத்திரிகையைக் கொண்டு வருகிறேன்" என்று சொல்லி விட்டு மனோன்மணி உள்ளே சென்றாள்.

ஐந்து நிமிஷத்துக்கெல்லாம் ஒரு கப் காப்பியும் 'தீபம்' சஞ்சிகையும் எடுத்துக் கொண்டு வந்தாள்.

சந்திரசூடன் காப்பியைச் சாப்பிட்டு விட்டு, "பாதிக் கதைப் போட்டியில் பரிசு உங்களுக்குத்தானா? நீங்கள் எழுதியதுதான் வந்திருக்கிறதா?" என்று கேட்டான்.

"இல்லை; இல்லை! நான் எழுதியது வரவில்லை. பரிசு எனக்குக் கிடைக்கா விட்டால் போகட்டும்; ஆனால் கதையை இவ்வளவு சோகமாக முடித்திருக்க வேண்டாம்."

"அடடா! சோகமாகவா முடித்திருக்கிறது? நான் நன்றாய்ப் படிக்கவில்லை!"

"ஆமாம்; நேற்று நீங்கள் கொஞ்சம் படிப்பதற்குள் நான் வாங்கிக் கொண்டு வந்து விட்டேன். நான் பரிசுப் போட்டிக்கு எழுதி யிருக்கிறேன் என்று உங்களுக்கு யார் சொன்னது?"

"போஸ்டு மாஸ்டர் சொன்னார்."

"ஓகோ! என்னைப் பற்றி இன்னும் ஏதாவது வம்பு வளர்த்தாரா?"

"இல்லை, இல்லை! தங்களைப் பற்றி ரொம்ப நல்ல மாதிரி பேசினார்."

"போகட்டும்; இந்தமட்டும் விட்டாரே? இந்த ஊரிலேயே வம்புப் பேச்சு அதிகம்!"

"அதைப் பற்றி நமக்கு என்ன? நம்முடைய மனச் சாட்சிக் கேற்ப நாம் நேர்மையாக நடந்து கொண்டால், ஊரில் உள்ளவர்கள் என்ன பேசினால் நமக்கு என்ன கவலை?"

"நம் காதில் விழாமல் என்ன பேசிக் கொண்டாலும் பரவாயில்லை. நம்மிடமே வந்து ஏதாவது வேண்டாத கேள்வி கேட்கத் தொடங்கி விடுகிறார்கள். பாருங்கள்! இதோ இந்தக் குழந்தை இருக்கிறானே, இவன் என் சொந்தக் குழந்தையா, இல்லையா என்று ஊராருக்கு என்ன கவலை? எத்தனை பேர் என்னைக் கேட்டிருப்பார்கள் என்று நினைக்கிறீர்கள்?"

"சில பேருக்கு இப்படிப் பிறத்தியாரைக் குறித்து வம்பு வளர்ப்பதிலேயே ஆனந்தம். அவர்களுடைய சுபாவமே அப்படி! அது போனாற் போகட்டும். கதையை எப்படி முடித்திருக்க வேண்டுமென்று உங்களுக்குத் தோன்றுகிறது? நீங்கள் என்ன மாதிரி கதையை முடித்திருந்தீர்கள்?" என்று கேட்டான் சந்திரசூடன்.

"அதைப் பற்றிப் பேசுவதற்கே எனக்குச் சங்கடமாயிருக்கிறது" என்றாள் மனோன்மணி.

"அடடா! அவ்வளவு சகிக்க முடியாமல் எழுதியிருப்பதற்கா பரிசு கொடுத்திருக்கிறார்கள்?"

"சகிக்க முடியாமல் எழுதியிருப்பதாக நான் சொல்ல மாட்டேன். ஒரு விதத்தில் நன்றாகத்தா னிருக்கிறது. ஆனால் என்னுடைய சொந்த அனுபவமும் இந்தக் கதையில் சேர்ந்திருப்பதால் வருத்தம் உண்டாக்குகிறது."

"சொந்த அனுபவமா? ஆச்சரியமா யிருக்கிறதே!"

"சொந்த அனுபவம் என்றால், எனக்கே நேர்ந்தது அல்ல. இந்தக் கதையில் உள்ளது போன்ற ஒரு சம்பவம் என் சிநேகிதி ஒருத்தியின் வாழ்க்கையில் நடந்தது......"

"அப்படியா?"

"இப்போது என் மனம் சரியாயில்லை. இன்னொரு நாள் வந்தீர்களானால் சொல்லுகிறேன். யாரிடமாவது சொன்னால் என் மனத்தில் உள்ள பாரம் குறையலாம். ஆனால் அநுதாபத்துடன் கேட்பவர்களா யிருக்க வேண்டும். தங்களைப் பார்த்தால், அவ்விதம் கேட்பீர்கள் என்று என் மனத்தில் ஏனோ தோன்றுகிறது."

"அது என்னுடைய அதிர்ஷ்டந்தான்! இன்னொரு நாள் அவசியம் வருகிறேன்."

இந்தச் சமயத்தில் வாசலில் காலடிச் சத்தம் கேட்டுச் சந்திரசூடன் திரும்பிப் பார்த்தான். நேற்று போஸ்ட் மாஸ்டர் சுட்டிக் காட்டிய புலிவேட்டை மனோகரன் வந்து கொண்டிருந்தான். அவனைத் தொடர்ந்து சென்ற சாயபு எதிரே யிருந்த போஸ்டாபீஸ் தாழ்வாரத்தில் நின்றான்.

வரும்போது மனோகரன் கைவண்டியி லிருந்த ராஜ்மோகனைப் பார்த்து "ஏண்டா நொண்டிப் பயலே! என்னடா சேதி?" என்றான். அது சந்திரசூடன் காதில் நாராசமாக விழுந்தது. மனோன்மணியின் முகம் சுருங்குவதையும் கவனித்தான்.

"என்னடா நான் கேட்கிறேன், பேசாமலிருக்கிறாயே?" என்று சொல்லிக்கொண்டே மனோகரன் குழந்தையின் காதைப் பிடித்துத் திருகினான். குழந்தை 'வீல்' என்று அலறத் தொடங்கியது.

மனோன்மணியின் முகத்தில் கோபம் கொதித்தது. அவள் எழுந்தாள். அதற்குள் மனோகரன் குழந்தையின் காதை விட்டு விட்டு, வீட்டுத் தாழ்வாரத்துக்கு வந்தான். சந்திரசூடனை ஒரு தடவை முறைத்துப் பார்த்து விட்டு, இன்னொரு நாற்காலியில் உட்கார்ந்து கால்மேல் காலைப் போட்டுக் கொண்டான்.

"பேச்சின் நடுவில் 'டிஸ்டர்ப்' பண்ணுகிறேன் போலிருக்கிறது! மன்னிக்க வேணும்!" என்றான்.

"அதெல்லாம் ஒன்றுமில்லை. இவர் புறப்பட்டுக் கொண்டிருந்தார்" என்றாள் மனோன்மணி.

"ஆம்; புறப்பட்டுக் கொண்டிருந்தேன். தாங்கள் வருவதைப் பார்த்து விட்டுத்தான் தங்கினேன். 'புல்லை வளர்த்துப் புலி'யைப் பற்றிப் பத்திரிகையில் அமர்க்களப் படுகிறது! தாங்கள் துப்பாக்கி சகிதமாக மலைமேல் போய் விட்டு வருவதைத் தினம் பார்க்கிறேன். அதைப் பற்றித் தங்களிடம் விசாரிக்க விரும்பினேன்."

"ஓ! தங்களுக்கு வேட்டையில் பிரியம் உண்டா? ரொம்ப சந்தோஷம்! அந்தப் புலி ஒரு மாதமாய் எனக்கு டிமிக்கி கொடுத்துக் கொண்டு வருகிறது. நீங்களும் வருவதாயிருந்தால்......"

"அழைத்துப் போனால் வரலாம் என்றுதான் உத்தேசம். நான் இந்த ஊருக்குப் புதிது!"

"அப்படித்தான் நினைத்தேன். மனோன்மணி! இவரை எனக்கு நீ அறிமுகம் செய்து வைக்க வில்லையே?"

"அவருக்கு அந்த சிரமம் வேண்டியதில்லை. நானே என்னை அறிமுகப்படுத்திக் கொள்கிறேன். எனக்கு மதராஸ். பெயர் சந்திரசூடன். வயது இருபத்திநாலு. போன வருஷம் பி. எல். பாஸ் செய்தேன். இன்னும் தொழில் ஆரம்பிக்க வில்லை. கலியாணம் ஆகவில்லை. செய்து கொள்வதாகவும் உத்தேசமில்லை. இன்னும் ஏதாவது தகவல் வேணுமானால் கேளுங்கள்......"

மனோகரன் இடி இடியென்று சிரித்து விட்டு, "ரொம்ப வந்தனம். நாளை மலைமேல் ஒரு வேளை புலியைச் சந்தித்தால் தங்களைத் தக்கபடி அதற்கு 'இன்ட்ரட்யூஸ்' பண்ணி வைக்கலாம். நாளை வருகிறீர்கள் அல்லவா?" என்றான்.

"கட்டாயம் வருகிறேன். எங்கே சந்திக்கலாம்?"

"பண்ணையார் வீடு என்றால், எல்லாருக்கும் தெரியும். அல்லது நீங்கள் இருக்குமிடத்தைச் சொன்னால்......"

"ஸ்ரீதர் ஹோட்டலில் இருக்கிறேன். நானே தங்கள் வீட்டுக்கே வந்து விடுகிறேன். போய் வரட்டுமா?"

இவ்விதம் இரண்டு பேருக்கும் சேர்த்துச் சொல்லிக் கொண்டு சந்திரசூடன் புறப்பட்டுச் சென்றான்.

தற்செயலாக அவன் பார்வை எதிரே தபால் ஆபீஸ் தாழ்வாரத்தில் நின்ற சாமியின் பேரில் விழுந்தது. அந்த சாமி கையில் "தீபம்" பத்திரிகையை வைத்துக்கொண்டு வாசிப்பதாகத் தோன்றியது.

"அடே அப்பா! 'தீபம்' பத்திரிகைக்கு எத்தனை கிராக்கி?" என்று எண்ணி வியந்துகொண்டே போனான்.

## 4

**ம**று நாள் சந்திர சூடன் பண்ணையாரின் வீட்டுக்குப் போனான். மனோகரன் அவனை உற்சாகமாக வரவேற்றுப் பண்ணையாருக்கும் அவர் மனைவிக்கும் அறிமுகப்படுத்தி வைத்தான். சந்திரசூடன் பி. எல். பாஸ் செய்தவன் என்று அறிந்ததும் பண்ணையாருக்கு அவன் மீது ஒரு தனிப் பட்ட சிரத்தை ஏற்பட்டது. மறுபடியும் அவனை வரும்படியாகச் சொன்னார்.

சந்திர சூடன் மனோகரனுடன் சில நாள் மலை மேலே வேட்டையாடுவதற்காகச் சென்று வந்தான். முயல், நரி, பெருச்சாளி முதலிய பிராணிகள் சில அற்பாயுளில் மாண்டன. புலி மட்டும் அகப்படவில்லை.

பண்ணையார் தனிப்படச் சந்திரசூடனைச் சந்திக்க நேர்ந்த ஒரு நாள் 'உயில்' எழுதும் முறைகளைப் பற்றி அவனிடம் விசாரித்தார். தம்முடைய சொத்துக்கள் பெரும்பாலும் சுயார்ஜிதம் என்றும், அவற்றைத் தம் இஷ்டப் படி யாருக்காவது எழுதி வைக்கலாமா என்றும் கேட்டார். சுயார்ஜித சொத்தில் சொந்தப் பிள்ளையின் உரிமை என்ன, பேரனின் உரிமை என்ன, சுவீகார புத்திரனுடைய பாத்தியதைகள் என்ன,—என்றெல்லாம் விவரமாகக் கேட்டார்.

மனோகரனும் அதே விஷயத்தைப் பற்றித் தன்னிடம் விசாரித்தது சந்திரசூடனுக்கு வியப்பாயிருந்தது. ஒரு மாதிரி அவர்களுடைய பேச்சிலிருந்து ஊகம் செய்து நிலைமையை அறிந்து கொண்டான். மனோகரன் பண்ணையாரின் சொத்துக்களைத் தன் பெயருக்கு உயில் எழுதி வைத்து விடும்படி வற்புறுத்தி வருவதாகத் தெரிந்தது. பண்ணையாரின் மனத்தில் இது நியாயமா என்ற கேள்வி எழுந்து உறுத்திக் கொண்டிருந்தது. அத்துடன், சட்டப் படி செல்லுமா என்ற சந்தேகமும் ஏற்பட்டிருந்தது.

சந்திர சூடன் பண்ணையாரிடம் கொஞ்சம் நெருங்கிப் பழகி அவருடைய அபிமானத்தை ஓரளவு சம்பாதித்துக் கொண்ட பிறகு, "நீங்கள் இப்படியெல்லாம் மொட்டையாய்க் கேட்டால் ஒன்றும் தெளிவாகாது. மனதில் உள்ளதை விட்டுச் சொன்னால், நான் சட்டங்களைப் பார்த்துத் திட்டமாகச் சொல்ல முடியும்" என்றான்.

அதன் பேரில் பண்ணையாரும் மனம் விட்டுப் பேசினார். தம் ஒரே பிள்ளையாகிய தர்மராஜன் தம் பேச்சைக் கேட்காமல் ஒரு கீழ்சாதிப் பெண்ணை மணந்து கொண்டதைப் பற்றியும், அவனைத் தாம் நிராகரித்து விட்டதைப் பற்றியும் கூறினார். அவன் சில காலத்துக்கு முன் ஒரு விமான விபத்தில் மாண்டு போனதாக வதந்தி என்றும், ஆனால் நிச்சயம் தெரியவில்லையென்றும், அந்தச் செய்தி வருவதற்கு முன்பே மனோகரனைத் தாம் அழைத்துக் கொண்டது பற்றியும் தெரிவித்தார். மகன் வீட்டை விட்டுப் போனதற்குப் பிறகு அவனைப் பற்றியோ, அவன் குடும்பத்தைப் பற்றியோ தாம் ஒன்றும் விசாரிக்கவில்லையென்று கூறினார். ஒருவேளை அவனுடைய மனைவி இருந்தால், அல்லது அவர்களுக்குக் குழந்தை இருந்தால், சொத்தில் அவர்களுக்குப் பாத்தியதை உண்டா என்று கேட்டார்.

நிராகரித்த மகனைப் பற்றிப் பண்ணையார் இன்னமும் தாட்சண்யமின்றிக் கடுமையாகவே பேசினார். ஆனாலும், அவனுக்கு நேர்ந்ததாகக் கேள்விப் பட்ட கதியைப் பற்றிப் பேசும் போது அவர் நெஞ்சு சிறிது இளகியிருந்ததாகத் தோன்றியது.

சந்திர சூடன் அவருடைய நெஞ்சு இளக்கத்தை அதிகமாக்குவதற்கு முயன்றான்.

"பையனுடைய தலைவிதி அப்படியிருந்தது. அதற்காக மற்றவர்களை ஏன் கோபிக்க வேண்டும்? அவனுக்குக் குழந்தைகள் உண்டா என்பது பற்றி விசாரிப்பது அவசியம். இந்த உலகத்தில் கடவுளை நேரில் தரிசிப்பது என்றால் குழந்தைகளிடந்தான் தரிசிக்கலாம். உலகப் பற்றுக்களை ஒழித்த பெரிய மகான்கள் கூடக் குழந்தைகளிடம் ஆசை காட்டினார்கள் என்று அறிந்திருக்கிறோம் அல்லவா?" என்றான் சந்திரசூடன்.

"இந்தப் பெரிய வீட்டில் தவழ்ந்து விளையாட ஒரு குழந்தை இல்லையே என்று நானுந்தான் ஏங்குகிறேன். அந்தப் பாவி இப்படி எங்களை விட்டு விட்டுப் போய் விட்டானே?" என்றார் பண்ணையார்.

பின்னர் இந்த விஷயத்தைப் பற்றி அடிக்கடி பேச்சு நடந்தது. பண்ணையாரின் மனைவியும் அதில் சேர்ந்து கொண்டாள். "எங்கள் வயிற்றெரிச்சலைக் கொட்டிக் கொண்டு அவன்தான் போய்விட்டான். அவனுக்கு ஏதாவது குஞ்சு குழந்தை இருக்கிறதா என்று விசாரிக்க வேண்டுமென்று நான் சொல்லிக் கொண்டுதானிருக்கிறேன். இவர் ஒரே பிடிவாதமாயிருக்கிறார். ரொம்ப கல் நெஞ்சக்காரர்!" என்றாள் பண்ணையாரின் மனைவி.

"எப்படியடி விசாரிக்கிறது? எப்படி விசாரிக்கிறது என்று கேட்கிறேன். பத்திரிகைகளில் விளம்பரம் போடச் சொல்கிறாயா? அல்லது ஊர் ஊராகப் போய் டமாரம் அடிக்கச் சொல்கிறாயா?" என்றார் பண்ணையார்.

# விசித்திர வரம்

ரா. வீழிநாதன்

'சிறுகக் கட்டிப் பெருக வாழ்' என்ற பழமொழிப்படி தொடங்கிய சிருஷ்டியானது சிறுகச் சிறுகப் பெருகி ஓங்கி வளர்ந்து விட்டது. படைப்புத் தொழிலை ஏற்றுக்கொண்டிருக்கும் பிரும்ம தேவருக்கு வேலைத் தொந்தரவு அதிகம் ஆகிவிடவே, பெரிய பெரிய காரியாலயங்களில் கையெழுத்து மட்டும் போடும் மேலதிகாரிகளைப் போல், பிரும்ம தேவர் பிறக்கும் குழந்தைகளின் தலையெழுத்தை மட்டும் எழுதிக் கையெழுத்திடும் பொறுப்பை ஏற்றுக் கொண்டு, படைக்கும் தொழிலை ஏனைய ஜீவராசிகளிடமேயே விட்டு விட்டார்.

தலையெழுத்தை மட்டுமே நிர்ணயிக்கும் பொறுப்பை ஏற்றுக் கொண்டிருந்தாலும் பிரும்மதேவருக்கு அபார வேலை. அவரை ஏன் என்று அதட்டிக் கேட்பவர் யாரும் இல்லைதான். ஆயினும் பொறுப்பை உணர்ந்திருந்த பிரும்மதேவர், பிறக்கும், பிறக்கப்போகும் குழந்தைகளின் தலைவிதியை நிர்ணயிக்க அலுக்காமல் சலிக்காமல் ஓடியாடிக் கொண்டிருந்தார்.

அன்றும் அப்படித்தான் புவியிலே அப்பொழுதுதான் பிறவி யெடுத்த ஒரு குழந்தையின் தலைவிதியை நிர்ணயித்து அதன் தலையில் தம் எழுத்தாணியினால் எழுதி விட்டு, வானுலகத்துக்கு விரைந்து கொண்டிருந்தார் பிரும்மதேவர்.

அதைக் கண்டு விட்ட அவருடைய பக்தர் ஒருவர் சட்டென்று தாவி அவருடைய கால்களைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு விட்டார். பிரும்மதேவருக்கோ அவசரம். ஆனால் காலைக் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு விட்டவரோ பரம பக்தர். பரம பாகவதர்களான பக்தர்களை விட்டு விட்டுப் போகப் பகவானுக்கு மனம் வருமா! ஆயினும் வேலையல்லவா தலைக்குமேல் கிடக்கிறது! "என்ன அப்பா, காலைப் பிடித்துக் கொண்டு கழுத்தறுக்கிறாய்! விடு, அப்பா!" என்று பக்தரைப் பரிவுடன் கடிந்து கொண்டார்.

ஆனால் அந்த உருட்டல்களுக்கெல்லாம் பக்தர் மசிந்து கடவுளுடைய கால்களை விடவில்லை. கடவுளுக்கோ கணப்பொழுது கூட அங்கே நிற்க விருப்பம் இல்லை. ஆகவே, பக்தரிடம் எவ்வளவோ வாய் வார்த்தையாகச் சொல்லிப் பார்த்தார். கெஞ்சாத தோரணையாகக் கெஞ்சிப் பார்த்தார். ஆனால் பக்தர் கிடைத்த அந்த அரிய சந்தர்ப்பத்தைக் கைநழுவ விட விரும்பவில்லை. பக்தி என்றால் அப்படிப் பிடிவாதமான பக்தியாக அல்லவா இருக்க வேண்டும்! கடைசியில் சிருஷ்டிக் கடவுள் கீழே இறங்கி வந்து நின்று கொண்டு, "உனக்கு என்ன வேண்டும்?" என்று கேட்டார்.

பகவானைக் கண்டால் என்ன கேட்க வேண்டும் என்று பக்தர் அதுவரை யோசித்து வைத்துக் கொள்ளவில்லை. கடவுளிடம் என்ன கேட்கலாம் என்பது உடனே யோசித்து முடிவு செய்யக்கூடிய காரியமா? பக்தர் என்ன கேட்கலாம் என்று யோசனையில் ஆழ்ந்துவிடவே, பகவானுக்கு ஒவ்வொரு நிமிஷமும் ஒவ்வொரு யுகமாகத் தோன்றலாயிற்று. ஒரு வினாடி கூட வீணாக்க விரும்பவில்லை. "உனக்கு என்ன வேணும்? சீக்கிரம் சொல்லு!" என்று அதே கேள்வியைத் திரும்பக் கேட்டார். பக்தருடைய தலை சுழன்றதே யொழிய, அவரால் சட்டென்று ஒரு முடிவுக்கு வர முடியவில்லை. பக்தர் திண்டாடுவதைக் கண்ட பகவானுக்கு மிகவும் சங்கடமாகப் போய் விட்டது. "பக்தா! நாளைக்கு இதே நேரத்துக்கு இதே இடத்துக்கு வந்து உன்னைச் சந்திக்கிறேன். யோசித்து என்ன வேண்டும் என்று சொல்லு!" என்று சொல்லிக் காலை விடுவித்துக் கொண்டு மறைந்தார்.

பக்தர் தலையைச் சொறிந்து கொண்டே வீட்டை அடைந்தார். அவருடைய முகத்தில் பிரச்னை சாயையாகப் படிந்திருப்பதைக் கண்ட அவருடைய மனைவி விஷயம் என்னவென்று விசாரித்தாள். அவர் நடந்த விருத்தாந்தம் அனைத்தையும் ஆதியோடு அந்தமாகச் சொன்னார்.

அதைக் கேட்ட அவருடைய மனைவி, "இந்தச் சின்ன விஷயங்கூடத் தெரியாமல் திண்டாடி நின்று விட்டு வந்திருக்கிறீர்களே! நானு மிருந்தால் என்ன சொல்லி யிருப்பேன், தெரியுமா! 'கடவுளே! நான் நினைக்கும் அன்றைக்குத் தலையெழுத்தை எழுதும் பாக்கியம் எனக்குக் கிட்டும்படி அருள் புரிய வேண்டும்' என்று கேட்டிருப்பேன்" என்றாள். பக்தருக்கு மனைவியின் பேச்சைக் கேட்டதுந்தான் ஞானோதயம் பிறந்தது.

மறுநாள் பிரும்மதேவர் சொன்னது சொன்னபடி குறிப்பிட்ட இடத்தில் குறிப்பிட்ட நேரத்தில் தம் பக்தரைச் சந்திக்க ஆஜரானார். அவருக்கு முன்பே பக்தர் அவ்விடத்திலே அவருக்காகக் காத்திருந்தார். பிரும்மதேவர் பூமியில் காலை வைத்ததும் வைக்காததுமாக, முதல் நாள் கேட்ட அதே கேள்வியைக் கேட்டார். பக்தர் பாதங்களில் விழுந்து பணிந்து, "ஏழை எளியவர்களைக் காக்கும் ஆண்டவனே! நான் நினைக்கும் அன்றைக்கு உலகத்தின் தலையெழுத்தை எழுதக்கூடிய வரம் கொடுத்து ஏழையைக் காத்தருள வேண்டும்!" என்று வேண்டினார்.

பிரும்மதேவர் தம் சம்மதத்தைத் தெரிவித்து விட்டுத் தெய்வத் தூதர் தமக்காகத் தூக்கி நின்று கொண்டிருந்த பல்லக்கில் ஏறி உட்கார்ந்தார். அடுத்த கணம் அது வானுலகை நோக்கிப் பறந்தது.

* * *

சில மாதங்களுக்குப் பிறகு பக்தரின் வீட்டிலே ஒரு ஆண் குழந்தை பிறந்தது. அடுத்த வினாடி பக்தர் பகவானைத் தியானித்தார். உடனே கோடி சூரியப் பிரகாசமான பிரும்மதேவரின் பல்லக்குப் பக்தரின் வீட்டு வாசலில் வந்து இறங்கியது. பக்தருக்கு ஆனந்தம் கொள்ளவில்லை. "கடவுளே! இன்று என் ஆசை பூர்த்தி யுறுவதற்கு அருள வேண்டும்!" என்றார்.

கடவுள் கணங்கூடத் தாமதியாமல், தம் தலையிலிருந்த தெய்வ சக்தி பொருந்திய கிரீடத்தை எடுத்துப் பக்தரின் சிரசில் சூட்டினார். அடுத்த நிமிஷமே தம் எழுத்தாணியைப் பக்தரிடம் கொடுத்தார்.

பக்தர் கண்களை நிமிர்த்திய பொழுது அப்படியே பிரமித்துப் போய் விட்டார். கடவுளின் சிருஷ்டி முழுவதும் பக்தரின் கண்களுக்கெதிரே காட்சி அளித்தது. லட்சக் கணக்கான குழந்தைகள் அப்பொழுதுதான் பிறந்திருந்தன. பிரும்ம தேவரிடம் தங்கள் தலையெழுத்துக்களை எழுதி வாங்கிக் கொள்வதற்காகத் தற்காலத்தைப் போன்ற 'க்யூ' வரிசையில் தவம்கிடந்து வேண்டியவாறு நின்றன.

பக்தர் வியப்புற்று நாற்புறமும் சுற்றிச் சுற்றிப் பார்த்தார். பிறகு ஆசை ததும்பும் கண்களுடன் தம் குழந்தை எங்கு இருக்கிறது என்று தேடலானார். எங்கு பார்த்தாலும் ஒரே நிறமும் ஒரே உருவமும் உள்ள குழந்தைகள் தாம் அவருடைய கண்களுக்கெதிரே காட்சி அளித்தன. அவ்வளவு குழந்தைகளில் தம் குழந்தை எது என்று தேடித் தேடிக் களைத்துப் போய்விட்டார். எவ்வளவு துருவித் துருவித் தேடியும் தம் குழந்தை எது என்பதை அவரால் கண்டு பிடிக்க முடியவில்லை. பல தடவைகள் தம் கண்களைத் துடைத்து விட்டுக் கொண்டு கூடப் பார்த்தார். அவர் முயற்சிகள் அவ்வளவும் வீணாயின. கடவுளுக்கோ அவசரம். பக்தர் இப்படி 'மச மச' வென்று நாழிகை யாக்குவது அவருக்குச் சிறிதும் பிடிக்கவில்லை.

"பக்தா! தலையெழுத்தை எழுதுவதற்கு ஏன் இன்னும் தாமதம்! அதோ, பார்! இன்னும் ஒரு லட்சம் குழந்தைகள் என்னை எதிர்பார்த்து வாசலில் நின்று கொண்டிருக்கின்றன. இன்னும் அரை வினாடி போனால் மூன்றாவது கும்பலும் பிறந்துவிடும். உலகத்தில் உற்பத்தி பெருகிக் கொண்டே போகிறது. நீ என்னடா வென்றால், என் சிருஷ்டியை ஸ்தம்பிக்க வைத்துக் கொண்டிருக்கிறாய். ஊம், சீக்கிரம், ஆகட்டும்" என்று அவசரப்படுத்தினார் பிரும்மதேவர்.

"கடவுளே, எப்படி எழுதுவேன்! இங்கே இருக்கும் இந்தக் குழந்தைகள் கும்பலில் என் புதல்வனை என்னால் அடையாளம் கண்டுகொள்ள முடியவில்லையே! அடியார்க்கு அபயம் அளிக்கும் ஆண்டவனே! என் குழந்தை எது! எங்கே இருக்கிறது! கருணைகூர்ந்து கொஞ்சம் சொல்லுங்களேன்!" என்றார் பக்தர்.

"அட முட்டாளே! நீ எத்தனை பக்தி செய்து என்ன! ஆசையும் பாசமும் உன்னை விட்டு அகலவில்லையே! கடவுளின் கண்களில் உன்னுடையது-என்னுடையது என்ற பாகுபாடோ வித்தியாசமோ கிடையாது என்பது உனக்குத் தெரியாதா! உலகம் முழுவதிலும் உள்ள குழந்தைகள் அத்தனையும் கடவுளின் அன்புக் கன்பான குழந்தைகள். கடவுளுக்குப் பிச்சைக்காரனும் ஒன்றுதான், அரசகுமாரனும் ஒன்றுதான். இதுகூடத் தெரியாமல் நீ பூஜையும் புனஸ்காரமும் செய்து என்ன பயன்!" என்று கோபத்துடன் சொல்லிக் கடவுள் பக்தரை அப்படியே பிரமிப்பில் ஆழ்த்தி விட்டுத் தம் விமானத்தில் ஏறி, பிரும்ம லோகத்தை நோக்கிச் சென்று விட்டார்.




* * *

மேற்கண்ட மார்க்கங்களில் பிரயாண வசதிக்கான
பஸ் போக்கு வரத்தை சிறப்பான முறையில்
30 ஆண்டுகளாக நடத்தி வருகிறது

* * *

| | | |
|---|---|---|
| பொறையார் | ... | மாயவரம் |
| பொறையார் | ... | நாகப்பட்டினம் |
| நன்னிலம் | ... | நாகப்பட்டினம் |
| கும்பகோணம் | ... | காரைக்கால் |
| பட்டுக்கோட்டை | ... | மன்னார்குடி |
| ஆக்கூர் | ... | சீர்காழி |

# கேரள நங்கை

"உடல் சிந்தை வசமன்றே"

—கம்பர்

மலைவளமும் மழைவளமும் பெற்ற மலையாள நாட்டில் பிறந்த மங்கை இவள் என்பதை வாழைத் தாரும் வாழை இலையும் மழையினால் நனைந்த குடையும் எளிய உடையும் உணர்த்தி விடுகின்றன.

ஆனால் அவள் தலையைக் கவிழ்த்துக் கொண்டு ஏதோ சிந்தித்த வண்ணம் நடக்கிறாள்.

அவளுடைய சிந்தனை, தன் கணவனைப் பற்றியதாக இருக்கலாம்.

அல்லது தன் கணவனைப் பெற்ற தாயாரைப் பற்றியதாக இருக்கலாம்.

அல்லது தன்னைப் பெற்ற தாய் தந்தையரைப் பற்றியதாகவும் இருக்கலாம்.

எதாக இருப்பினும், அவள் ஏதோ சிந்தனையில் ஆழ்ந்திருக்கிறாள் என்பது அவள் முகம் காட்டுகிறது. அவள் நிற்கும் நிலை காட்டுகிறது. அவளுடைய துவண்ட உடல் காட்டுகிறது. தளர்ந்த நடை காட்டுகிறது. இன்னும், மேலே எடுத்துக் காட்டியிருக்கும் கம்பர் வாக்கு எத்தகைய உண்மை வாய்ந்தது என்பதையும் காட்டுகிறது!

கல்கி

தீபாவளி மலர் 1952

# குழலோசை

தீங்குழல் வாய் மடுத்து ஊதியூதி
அலங்கா ரத்தால்வரும் மாயப் பிள்ளை
அழகுகண்டு என்மகள் ஆசைப்பட்டு
விலங்கி நில்லாது எதிர்நின்று கண்டீர்
வெள்வளைக் கழன்று மெய் மெலிகின்றதே!

—பெரியாழ்வார்

இது ஒரு தாயின் குறை.

இல்லை—எத்தனையோ தாய்மார்களின் குறை. கண்ணனின் அழகிலும் அவனுடைய வேய்ங்குழலின் பண்ணொலியிலும் மயங்கிப்போன அத்தனை கோபிகையரின் தாய்மார்களின் குறை!

அந்தத் தாய்மார்களுக்கு, "பயித்தியங்களா! இப்படிப்பட்ட பெண்களைப் பெற நீங்கள் எவ்வளவோ புண்ணியம் செய்திருக்க வேண்டுமே! இது பெறற்கரிய பேறாயிற்றே?" என்று பதில் கூறலாம்.

உண்மை யறிந்தவர்கள், தாயின் மொழியும் பக்தி மேலீட்டினால் வந்தவைதான் என்பதை அறிவார்கள். நிற்க.

ஆயர்பாடியில் வசித்த அந்த கோபிகையரின் மனநிலை, பக்திநிலை, பரிபக்குவம் தங்களுக்கு நேரவில்லையே என்று ஏங்கி ஏங்கிப் பாடிய பக்தர்கள் எத்தனையோ பேர்!

தங்களையே கோபிகையாகப் பாவித்து பக்தர்கள் பாடியிருக்கிறார்கள். அம்முறையில் பெரியாழ்வார் செய்துள்ள பாடல்கள் தமிழுக்கு அரும் செல்வமாக விளங்கி வருகின்றன! மீரா, ஜெயதேவர், கிருஷ்ணசைதன்யர், சூரதாஸர் இப்படி எத்தனையோ பக்தர்கள் இம்முறையை அனுஷ்டித்துப் பாமாலை சூடி அப் பரந்தாமனைப் பரவியிருக்கிறார்கள்.

சமீபகாலத்தில் நம் மகாகவி பாரதியார் 'கண்ணன் - என் காதலன்' என்ற தலைப்பில் பாடியுள்ள பாடல்கள் உள்ளத்தை உருக்குவனவாக இருக்கின்றன!

பண்ணொன்று வேய்ங்குழலில் ஊதிவந்திட்டான்—அதைப்
பற்றி மறக்குதில்லை பஞ்சையுள்ளமே

என்று கண்ணன் மீது பக்தி கொண்ட ஆயர்மங்கை பாடுவதாக மகாகவி பாரதியார் பாடியிருக்கும் இந்த வரிகள் நம் மனத்தை எப்படி உருக்கி விடுகின்றன.

கண்ணன் மீது பக்தி கொண்டவர்களுக்கெல்லாம் கோபிகையாகத் தாங்கள் ஆகிவிட வேண்டும் என்ற விருப்பம்தான்!

இத்தகைய இலட்சிய ஆயர் மங்கையர்களுக்கு ஸ்ரீ பதி இலட்சிய உருவங்களைக் கொடுத்து அழகாகத் தீட்டியிருக்கிறார். கோபிகைகளின் கண்களிலும், உடல் நெளிவுகளிலும், கண்ணனின் வேய்ங்குழலில் சொக்கிப் போய் நிற்கும் பல அற்புத நிலைகளைச் சித்திரித்திருக்கிறார்.

கல்கி
தீபாவளி மலர்-1952

# வாழ்க காதல்! வாழ்க ஊடல்!!

"புலவிப் புறக்கொடுப்பேன்
புல்லிடின் நான்நிற்பேன்"

—முத்தொள்ளாயிரம்

இனிப்புப் பண்டத்தை நன்றாக அனுபவித்துச் சாப்பிட ஒரு சிறு ஊறுகாய்த் துண்டு இருந்தால்தான் முடிகிறது. இதே சட்டம்தான் காதல் துறையிலும் நிலவுகிறது!

காதல் எவ்வளவோ இனிமையானதுதான். அதனுடைய மாயா ஜால சக்தியே தனிதான்!

சாதாரணக் கண்களுக்குப் புலனாகாத அழகுகள் எல்லாம் காதலர் கண்களுக்குப் புலனாகிறது. சாதாரணமாக வீசும் மல்லிகையின் நறுமணம், காதலர்களுக்கு என்றும் நுகர்ந்தறியாத இன்ப மணமாகக் கமழ்கிறது.

எனினும் இந்தக் காதலும் அளவுக்கு மிஞ்சினால் 'போதும்' என்றாகி விடுகிறது! திகட்டி விடுகிறது!

இந்த நிலையை நீடிக்க விடாமற் செய்ய இயற்கை 'ஊடல்' என்ற மனப் பண்பை அருளியிருக்கிறது! 'ஊடல்' என்ற தத்துவம் இருப்பதனாலேயே 'காதல்' என்ற தத்துவமும் உயிர்பெற்று நிலைத்து நிற்கிறது.

ஆம், காதலர்களுக்குள் அடிக்கடி நேரும் சின்னச் சின்ன சண்டைகளும் சிங்காரச் சண்டைகளும்தான் அவர்கள் காதலுக்கு வேகம் அளிக்கிறது. அவர்கள் வாழ்க்கையை மணங் கமழச் செய்கிறது. வாழ்க்கையில் அடிக்கடி புது மோகமும் ஆர்வமும் கொள்ளச் செய்கிறது.

* * *

இப்பொழுது கனுதேஸாய் வரைந்துள்ள சித்திரத்தைப் பாருங்கள்!

காதலர் இருவர் தீர்த்தக் கரையினிலே உல்லாசமாகப் பொழுது போக்க வந்தார்கள். உற்சாகமாகச் சற்று நேரம் பேசிக் கொண்டிருந்தார்கள். ஆனால் ஏதோ ஒரு விஷயம் பற்றி இருவருக்குள்ளும் மனஸ்தாபம் ஏற்பட்டு விட்டது.

அந்த ஊடல் காட்சியைச் சித்திரக்காரர் வெகு நேர்த்தியாகத் தீட்டியிருக்கிறார். இருவரும் வெவ்வேறு பக்கம் முகத்தைக் கோபத்தின் காரணமாகத் திருப்பிக் கொண்டிருப்பதும், கையில் இருவரும் ஒரே மாதிரி புல்லை வைத்துக் கொண்டிருப்பதும் சித்திரத்தை இன்னும் சுவாரஸ்யப் படுத்துகிறது!

ஆனால் நமது நேயர்கள், 'எந்த விஷயம் பற்றி இவர்களுக்குள் இந்த மனஸ்தாபம்?' என்று கேட்கமாட்டார்கள் என்று நம்புகிறோம்!

காதலர்களுக்குள் நூறு விஷயம் இருக்கும். அதில் எல்லாம் நாம் தலையிடலாமா?

கல்கி
தீபாவளி மலர்-1952


"இக் கொடிய கானகத்தில், கடுமையான வெய்யிலில், தங்களுக்கு என்ன வேண்டும்...... கட்டளை யிடுங்கள் பிரபு!"
1EW



காந்தி மகாத்மா தென்னாப்பிரிக்காவில் சத்தியாக்கிரகப் போர் நடத்தி வந்த நாளில் தென்னிந்தியக் குடும்பத்தாருடன் எடுத்துக் கொண்ட அபூர்வமான புகைப் படம். இக் குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் சில மாதங்களுக்கு முன்பு தமிழ்நாடு வந்திருந்தபோது ராஜாஜிக்கு இப் படத்தை அன்புக் காணிக்கையாக அளித்தார்கள்.

# கிட்டுவின் பிரார்த்தனை !

சாமா

கிட்டு :—ஸ்வாமி ஆண்டவனே ! எங்க தாத்தா, பாட்டி, அம்மா, அப்பா எல்லோரையும் காப்பாத்துங்கள்......உம்......உங்களையும் காப்பாற்றிக் கொள்ளுங்கள். நீங்கள் நன்றாக இருந்தால்தானே எங்கள் எல்லோரையும் காப்பாத்த முடியும்?



மங்கள தீபாவளிக்கு!



# வாக்ஸால்

## வெலாக்ஸ் ★ வைவர்ன்

தீபாவளித்திருநாளன்று மங்கள ஸ்நானம் செய்து மகிழ்ச்சியுடன்
வாக்ஸாலில் ஏறி நண்பர்களின் இல்லம் சென்று வாழ்த்துக் கூறுங்கள்
வெலாக்ஸ் ஆனாலும் சரி வைவர்ன் ஆனாலும் சரி இணையிலா வாகன சவாரியின்
இன்பம் அடைய வாக்ஸாலுக்கு நிகர் வாக்ஸாலே!

சுந்தரம் மோட்டார்ஸ் லிமிடெட்
37, மவுண்டரோடு,
மதராஸ்.



டி. வி. சுந்தரம் அய்யங்கார் & ஸன்ஸ் லிட்.,
மதுரை, திருநெல்வேலி, திருச்சிராப்பள்ளி,
புதுக்கோட்டை & சேலம்.

TVS-35

Edited, Printed & Published by R. Krishnamurthy at the "Kalki" Press, 116-119, Poonamallee High Road, Kilpauk, Madras

**Regd. No. M. 4392**

*Regd. as a newspaper in Ceylon*